# இந்தியக் கிறிஸ்தவ வரலாறு

தெரிவு செய்யப்பட்டத் தலைப்புகள்

திருத்தப்பட்டு, விரிவாக்கம் செய்யப்பட்டப் பதிப்பு



D. ஆர்தர் ஜெயக்குமார்

G. J. Pandithurai
27.8.13

# இந்தியக் கிறிஸ்தவ வரலாறு

## தெரிவுசெய்யப்பட்டத் தலைப்புகள்

திருத்தப்பட்டு, விரிவாக்கம் செய்யப்பட்டப் பதிப்பு

அருள்திரு அறிவர் D. ஆர்தர் ஜெயக்குமார்

புத்தக பெயர் & பதிப்பு : **இந்தியக் கிறிஸ்தவ வரலாறு**
தெரிவுசெய்யப்பட்டத் தலைப்புகள்
திருத்தப்பட்டு, விரிவாக்கம்
செய்யப்பட்டப் பதிப்பு
**2012**

முன் அட்டை வடிவாக்கம் : திருமதி. **மங்களம் ஜெயக்குமார்**

வெளியீடு : ஆசிரியர் **D. ஆர்தர் ஜெயக்குமார்**
குருகுல் லூத்தரன் இறையியல் கல்லூரி,
94. புரசைவாக்கம் நெடுஞ்சாலை,
கெல்லீஸ், சென்னை – 600010

விலை : ரூ. 125/

அச்சிட்டோர் : **மெய்ப்பொருள் அச்சகம்,**
278, கொன்னூர் நெடுஞ்சாலை,
அயன்புரம், சென்னை – 600023.

# உள்ளடகம்

# முன்னுரை

இந்தியக் கிறிஸ்தவ வரலாறு செய்திகள் பல உள்ளடக்கியது. அதனால் அது படிப்பதற்கு ஆர்வமூட்டும் ஒரு பாடமாகும். அதே வேளையில் அது நீண்ட காலத்தைப் பற்றியதும், விரிவானதுமாகும். ஒரே நூலில் இந்திய கிறிஸ்தவ வரலாற்றின் அனைத்து அம்சங்களையும் உள்ளடக்க ஒரு சிலர் முயன்றுள்ளனர். என்றாலும், அந்நூற்களில் இந்தியக் கிறிஸ்தவ வரலாற்றின் சில சிறப்புப் பகுதிகளை / தலைப்புகளை விவரிப்பதில் முழுமை இல்லை, இடை வெளிகள் உள்ளன. அதனை உணர்ந்த இந்நூலின் ஆசிரியர் இடைவெளிகள் எனத் தாம் கருதுகின்றவற்றை நிரப்பும் வண்ணமும், அதினால் செராம்பூர் பல்கலைக்கழக இறையியல் மாணவர்களுக்கு உதவிட வேண்டும் என்ற கருத்தோடும் இதனை எழுதியுள்ளார். செராம்பூர் பல்கலைக்கழக முறைமையில் உள்ள இந்தியக் கிறிஸ்தவ வரலாறு பாடத்திட்டத்தில் காணப்படும் சில தலைப்புகளைத் தெரிவுசெய்து இந்நூல் எழுதப்பட்டுள்ளதால் அது பிராட்டஸ்டண்ட் மிஷன்களைப் பற்றியதாகவும், அதன் அழுத்தம் உடையதாகவும் இருக்கின்றது.

இந்நூல் இதன் முந்தைய பதிப்பைத் திருத்தம் செய்தவொன்றாகவும், கூடுதலாக இரண்டு தலைப்புகள் சேர்க்கப்பட்டு விரிவாக்கம் செய்யப்பட்ட பதிப்பாகவும் வெளிவருகின்றது. எனவே இந்நூலில் மொத்தம் ஒன்பது தலைப்புகளின் கீழ் வரலாறு சார்ந்த செய்திகள் எழுதப்பட்டுள்ளன.

செராம்பூர் பல்கலைக்கழக இறையியல் மாணவர்களுக்கும், இந்தியக் கிறிஸ்தவ வரலாற்றை அறிந்துகொள்ள வேண்டும் என்ற விருப்பமுடைய நபர்களுக்கும் உதவியாக இருக்கவேண்டும் என்னும் நோக்கோடு இந்நூல் எழுதப்பட்டுள்ளதால், நன்கு ஆய்வு செய்து எழுதப்பட்டுள்ள நூலாக இதைக் கருதக்கூடாது. மேற்கூறப்பட்டுள்ள தலைப்புகளுக்குப் பல நூல்களிலிருந்து செய்திகள் சேகரிக்கப்பட்டு, ஒரு தொகுப்பாக **இந்தியக் கிறிஸ்தவ வரலாறு: தெரிவு செய்யப்பட்டத் தலைப்புகள்** என்னும் பெயரில் வெளியிடப்படுகின்றது.

இறையியல் மாணவர்கள் இந்நூலினால் மிகுந்தப் பயனடைவர் என்பது ஆசிரியரின் எதிர்பார்ப்பு. அதே வேளையில், தெரிவுசெய்து எழுதப்பட்டுள்ள தலைப்புகளின் அடிப்படையில், மேற்கொண்டு தொடர் ஆய்வுகள் செய்ய இந்நூல் உந்துதல் அளிக்கும் என்பதும் ஆசிரியரின் விருப்பம், இந்நூலில் காணப்படும் வரலாற்றுச் செய்திகளில் பிழைகள் இருக்குமானால் அல்லது கவனக்குறைவினால் பிழைகள் ஏற்பட்டிருக்குமானால் அவற்றிற்கு ஆசிரியரே பொறுப்பேற்கிறார்.

இந்நூலை எழுதிட உற்சாகத்தையும், உந்துதலையும், உதவிகளையும் நல்கிய என் அருமை மனைவி திருமதி மங்களம் ஜெயக்குமார், அருமைப் பிள்ளைகள் சில்வியா, சுனிலா, சாமுவேல் ஆகியோருக்கு என் நன்றியைக் கூறக் கடமைப்பட்டுள்ளேன். தமிழில் கையெழுத்தாக எழுதப்பட்டதைக் கணனி வழி தட்டச்சு செய்து உதவிய என் மனைவிக்கும், எனது மருமகன் திருமிகு ஆல்பர்ட் டேவிட்சன் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவிக்கிறேன். எல்லாவற்றிற்கும் மேலாக இம்முயற்சிக்குத் தேவையான அனைத்து நன்மைகளையும், கிருபையையும், உதவிகளையும் அருளிய எல்லாம் வல்ல இறைவனுக்கு அடியேனின் மேலான நன்றி உரித்தாகுக.

திருத்தம்செய்யப்பட்டு, விரிவாக்கமும் செய்யப்பட்ட இப்புதிய பதிப்பை அச்சிட உதவிய மெய்ப்பொருள் அச்சகத்தின் உரிமையாளர் திருமிகு தேவவரம் அவர் களுக்கும், அவ்வச்சகத்தின் ஊழியர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**D. ஆர்தர் ஜெயக்குமார்.**

குருகுல் லூத்தரன் இறையியல் கல்லூரி,
94, புரசைவாக்கம் நெடுஞ்சாலை,
கெல்லிஸ், சென்னை 600010.
2012 பெப்ருவரி.

இயல் ஒன்று

# இந்தியாவில் கிறிஸ்தவம் குறித்த மரபுச் செய்திகள்

கி.பி.1955 டிசம்பர் 18ஆம் நாள் தூய தோமா திருநாள் விழா புதுதில்லியில் கொண்டாடப்பட்டது. அதில் இந்தியாவின் அன்றைய குடியரசுத் தலைவர் முனைவர் இராஜேந்திரபிரசாத் கலந்து கொண்டு உரையாற்றினார். அப்போது, "ஐரோப்பாவின் பல நாடுகள் கிறிஸ்தவத்தை அறிந்திராத காலத்திலேயே தூய தோமா இந்தியாவிற்கு வந்தார் என்பதை நினைவில் கொள்க. எனவே நம் இந்திய கிறிஸ்தவத்தின் தொடக்கத்தை அவருடன் தொடர்புபடுத்தும் கிறிஸ்தவரின் வரலாறு நெடியதும், அதன் மூதூர் மரபு தொன்மையானதுமாகும். இது ஐரோப்பியக் கிறிஸ்தவர் பலரின் வரலாற்று மூதூர் மரபையும்விட தொன்மையானது. அவ்வாறு நிகழ்ந்தது நமக்கு உண்மையில் பெருமை தருவதாகும்" [1] என்று கூறினார். எனவே இந்தியாவில் கிறிஸ்தவம் என்பது கிறிஸ்தவத்தைப் போன்றே பழமையானது. இந்தியாவினுள் கிறிஸ்தவம் ஆரம்பத்தில் ஐரோப்பாவிலிருந்து வரவில்லை என்றே கூறவேண்டும். இவ்வாறு நிகழ்ந்திருக்கக்கூடுமா என்பதைப் பார்ப்போம்.

### இந்தியச் சூழல்:

இந்தியா ஒரு துணைக் கண்டம். முப்புறங்களிலும் கடல் சூழ்ந்துள்ளது. வடபகுதியில் இமயமலைத்தொடர் உள்ளது. இமயமலை ஓர் இயற்கை அரணாகத் திகழ்ந்தாலும் சில கணவாய்கள் வெளி உலகுடன் தொடர்புகொள்வதற்கான வாயில்களாக அமைந்தன. போர், படையெடுப்பு, பொருளாதாரம் எனப் பல்வேறு நிகழ்வுகளுக்கு, இக்கணவாய்கள் வழியமைத்துள்ளன. பஞ்சாப் பகுதிக்குள்ளும்,

இந்தியாவின் பிற பகுதிகளுக்குள்ளும் பிற நாட்டினரின் வருகை இவற்றின் வழியே தான் நிகழ்ந்துள்ளன. கி.மு.இரண்டாயிரத்திற்கும், ஆயிரத்து ஐநூறுக்கும் (கி.மு.2000 – 1500) இடைப்பட்டக் காலத்தில் ஆரியரும், கி.மு. 6ஆம் நூற்றாண்டில் பாரசீகரும் வந்தனர். கி.மு.4ஆம் நூற்றாண்டில் கிரேக்கரும், கி.மு. இரண்டாம், முதலாம் நூற்றாண்டுகளில் சித்தியரும் (பாக்தீரியர், பார்த்தியர், சாகர்) வந்தனர். கி.பி. முதல் நூற்றாண்டில் குஷானரும், கி.பி.5ஆம் நூற்றாண்டில் ஹூனர்களும் வந்தனர். கி.பி. 12 முதல் 18 நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் இசுலாமியர் வந்தனர். எனவே வட இந்தியாவின் வரலாற்றைப் படையெடுப்புகளின் வரலாறு எனலாம். இப்பகுதிக்கு வெளிநாட்டினர் வடமேற்குப் பகுதி வழியே வந்தனர்.

கி.மு.516 முதல் கி.பி.220 வரை வடமேற்கு இந்தியப் பகுதி வழியாகத் தொடர்ந்து உறவுகள் இருந்து வந்துள்ளன. இக்காலத்தில் சமய, பொருளாதார, கலாச்சார கொடுக்கல் வாங்கல் அதிகமாக நடந்துள்ளது.

### கடல் வழி:

உரோம பேரரசன் அகஸ்துவின் காலத்தில் (கி.பி.5) வாழ்ந்த ஸ்டிராபோ எனும் வரலாற்றாசிரியர் உரோமைப் பேரரசுக்கும், இந்தியாவுக்கும் இடையே வணிகம் நடந்து வந்ததைக் குறிப்பிடுகின்றார். தென் இந்தியாவிலுள்ள கள்ளிக்கோட்டை / கோழிக்கோடு, கோயம்புத்தூர் போன்ற சில பகுதிகளில் கண்டெடுக்கப்பட்டுள்ள கி.பி. முதல் நூற்றாண்டுக்குரிய உரோமை நாணயங்கள் இதனை மெய்ப்பிக்கின்றன. பிளினி **இயற்கை வரலாறு** என்ற தம் நூலை கி.பி.77இல் எழுதி முடித்தார். இந்நூல் சூயஸ் வளைகுடாவுக்கு வெளியே இருந்த மியாஸ் ஹோர்மாஸ் (Myos Hormos) என்ற துறைமுகத்திலிருந்து இந்தியாவுக்குக் கடல் வழி உறவு இருந்ததைக் கூறு கிறது.[2] இந்தியாவுடன் மிளகு வணிகம் நடைபெற்றதைக் குறிப்பிடும் பிளினி, "மிளகின் பயன்பாடு செல்வாக்குடையதாக இருப்பது வியப்பாக உள்ளது. ஒரு பொருளின் இனிமையோ அல்லது தோற்றமோ நம்மை ஈர்த்ததுண்டு. இவை இரண்டுமே மிளகுக்கு இல்லை. மிளகு காயாகவோ, கனியாகவோ நம் கருத்தைக் கவர்வதாக இல்லை. இதற்கு இருக்கும் ஒரே தன்மையான ஒரு வகை உறைப்புச் சுவையே இந்தியாவிலிருந்து அதனை ஏற்றுமதி செய்யவைத்துள்ளது" என்று எழுதுகிறார்.[3] கி.பி.54இல் கிரேக்க கப்பல் தலைவர் ஹிப்பாலஸ் (Hippalas) பருவக்காற்றின் பயனைக் கண்டறிந்து நேராக சிந்து நதியின் முகத்துவாரத்துக்குப் பயணம் செய் தார். இக்கண்டுபிடிப்பு அதற்கு முன் எப்போதும் இருந்திராத வகையில் வணிகத்திற் கான வாயிலைத் திறந்தது. எகிப்தின் பெர்னைசுக்கும், இந்தியத் துறைமுகங்களுக்கும் இடையே தொடர்ந்து கப்பல் போக்குவரத்து இருந்து வந்துள்ளது. அன்றைக்கு இருந்த தலையாய துறைமுகங்களாவன: நர்மதா ஆற்றின் வாய்ப்பகுதியில் இருந்த பேரிகாசா (பிரோச்), வட கொங்கன் பகுதியிலிருந்த கல்யாணா, இன்றைய மங்களூ ருக்கு அருகில் இருந்த திந்து, முசிறி (இன்றைய கிராங்கனூர்), பாண்டிய பேரரசின்

தென் பகுதியிலமைந்த நெற்குன்றம், காவேரியின் முகத்தில் அமைந்த புகார் அல்லது காவிரிப்புகும்பட்டிணம் /காவிரிப்பூம்பட்டிணம். இது சோழப் பேரரசைச் சார்ந்தது. மிகவும் முக்கியமான முசிறி என்ற துறைமுகம் சேர நாட்டின் தென் கடற்கரையோரப் பகுதியில் அமைந்திருந்தது.[4]

உரோமையர் தவிர எகிப்தியர், அரபியர், சீரியர், பாரசீகர் ஆகியோரும் இந்தியா வுடன் வணிகம் மேற்கொண்டிருந்தனர். இது மதம், பண்பாடு, சமுதாயம் ஆகிய அனைத்து நிலைகளிலும், கொடுக்கல் வாங்கலில் பெருமளவு நிகழ வழிவகுத்தது. இந்தியாவின் மையப் பகுதியிலிருந்த உஜ்ஜயினியைக் கைப்பற்றிய சாகர்கள் பௌத்த சமயத்தைத் தழுவினர். இவர்களின் வழியே பௌத்தம் மத்திய ஆசியப் பகுதிகளுக்குப் பரவியது. இந்தியாவின் தென் பகுதியில் ஜைன சமயமும், இந்து சமயமும் தழைத்தன. கடல் வாணிபத்தில் ஓங்கியிருந்த சோழர்களே இந்தியச் சமயம், பண்பாடு, கலை ஆகியவை இந்தோனேசியா செல்லப் பெருங்காரணமாக இருந்தனர். சிற்பக்கலை, கட்டிடக்கலை, இலக்கியம் போன்றவற்றில் இவற்றின் தாக்கத்தை அதிகம் காணலாம். வானியல் துறையும் இந்தியாவிலிருந்தே அங்கு சென்றது. நாடுகளிடையே வணிகப் பரிமாற்றமும், பண்பாட்டுப் பரிமாற்றமும் தடையின்றி நிகழ்ந்தன. அக்காலத்து மக்கள் சமயத்தின் நோக்கில் திறந்த மனதுடன் வாழ்ந் தனர். கற்றுக்கொள்ளவும், கற்பிக்கவும் அதிக ஆர்வமுடையவராய்த் திகழ்ந்தனர்.

கிறிஸ்தவம் இந்தியாவினுள் அடியெடுத்து வைத்தபோது, இந்தியா இருந்த சூழலையே மேற்கூறப்பட்டவை முன் வைக்கின்றன.

## தூய பர்த்தொலோமேயு மரபு:

இந்தியாவில் கிறிஸ்தவத்தின் தொடக்கத்தைக் கூறும் ஒரு மரபு தூய பர்த்தொலோமேயு மரபு என்பதாகும். இது ஆதித்திருச்சபையின் மாபெரும் வரலாற்றாசிரியர் சிசேரியாவின் யூசுபியஸ் (கி.பி.265-340) என்பவரின் மூலம் நமக்குத் தெரியவருகிறது. அலெக்சாந்திரியாவில் இருந்த சமயக் கல்விக்கூடத்தின் தலைவர் பான்டேனஸ் (Pantaenus) என்பவர், கிறிஸ்தவம் குறித்துக் கற்பிக்க ஏறத் தாழ கி.பி.190இல் இந்தியா சென்றார் எனவும், அங்கு, இயேசு கிறிஸ்துவின் சீடருள் ஒருவரான பர்த்தொலோமேயு விட்டுச் சென்றிருந்த எபிரெயத்தில் எழுதப்பட்டிருந்த மத்தேயு நற்செய்தி நூல் அவருக்குக் காண்பிக்கப்பட்டதாகவும், அங்கிருந்தோர் அதனை அவருக்கு வழங்க, அவர் அதனை அலெக்சாந்திரியாவுக்கு எடுத்துச் சென் றார் எனவும் யூசுபியஸ் எழுதுகிறார்.[5] யூசுபியசின் இச்செய்தியை ஏற்கும் தூய ஜெரோம் (கி.பி.340-420), பான்டேனசை இந்தியாவிற்கு அனுப்பிவைத்தவர் அலெக்சாந் திரியாவின் பேராயர் டிமெட்ரியஸ் (Demetrius) என்ற கூடுதல் குறிப்பையும் தருகின்றார்.[6]

எனினும் இம்மரபுக்கு எவ்வித வலுவான ஆதரவும் இல்லை. பர்த்தொலோமேயுவோ, அவருக்குப் பின் பான்டேனசோ இந்தியாவின் எந்தப்

பகுதிக்கு நற்செய்தி அறிவிக்க வந்தனர்? எவ்வளவு காலம் தங்கியிருந்தனர்? எபிரெய மொழி பேசிய மக்கள் அக்காலத்தில் இந்தியாவில் இருந்தனரா போன்ற வினாக்களுக்கு யூசுபியசின் குறிப்பினால் விடைதர இயலவில்லை. எனவே இம்மரபு கேள்விக்குரியதாகவே உள்ளது.

## தூய தோமா மரபு

### (அ) பொது மரபு :

தொடக்க கால கிறிஸ்தவ சமுதாயம் தூய தோமா இந்தியாவில் நற்செய்தி அறிவித்தார் எனவும், அங்கு குருதி சான்றினராக மரித்தார் எனவும் நம்பியது. ஏறத்தாழ கி.பி. நான்காம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் இருந்து, தொடக்க கால கிறிஸ்தவ தந்தையர் எனப் போற்றப்பெறும் அறிஞர்களில் சிலர் தங்கள் நூல் களில் இந்தியாவில் தோமா நற்செய்திப் பணியாற்றினார் எனக் குறிப்பிடுகின் றனர். இக்குறிப்புகளில் இந்தியாவில் தோமா எங்கு பணியாற்றினார் எனவோ, எவ்விடத்தில் அவர் குருதி சான்றினராக இறந்தார் எனவோ கூறப்படாத காரணத்தினால், இதனைப் பொது மரபு என்றழைப்பர்.

### (ஆ) பஞ்சாப் / வட இந்தியா / மேற்கத்திய மரபு :

**(யூதா) தோமாவின் பணிகள்** (Acts of (Judas) Thomas) எனும் புறமறை நூல், ஏறத்தாழ மூன்றாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில், எடேசா என்னுமிடத்தில், சிரியாக் மொழியில் எழுதப்பெற்றது. இது, பார்த்தியா மன்னன் குண்டபோரஸ் ஆட்சி காலத்தில் இந்தியாவில் தூய தோமா ஆற்றிய பணிகளைக் குறிப்பிடு கிறது. அவ்வரசனின் ஆட்சியின் கீழ் பஞ்சாப் அல்லது வட இந்தியா இருந்தது. எடேசா நகரம் இந்தியாவிற்கு மேற்கே இருக்கின்ற காரணத்தினால், இது மேற்கத்திய மரபு / பாரம்பரியம் எனப்படுகிறது. தூய தோமா பணியாற்றிய இடம் பஞ்சாப் அல்லது வட இந்தியா என இந்நூல் குறிப்பிடுகின்ற காரணத்தினால் இது பஞ்சாப் அல்லது வட இந்திய மரபு எனவும் அறியப்படுகிறது.

**மேற்கத்திய மரபின் உள்ளடக்கம்:** நன்கு வழக்கில் இருந்த கடல் வணிக வழியைப் பின்பற்றி, முதல் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தூய தோமா இந்தியா வந்தார். பார்த்தியாவிலும், இந்தியாவிலும் நற்செய்தியை அறிவித்தார். அரச குடும்பத்தினர் உள்ளிட்டப் பலரைக் கிறிஸ்தவராக்கினார்; இந்தியாவில் குருதி சான்றினராகிய அவரை அங்கேயே அடக்கம் செய்தனர்; பின்னர் அவரது எலும்புகள் எடேசாவிற்குக் கொண்டு போகப்பட்டு, அங்கு மீண்டும் அடக்கம் செய்யப்பட்டன; அவ்விடத்தைக் கிறிஸ்தவர்கள் உயரிய மதிப்பிற்கும், வணக்கத் திற்கும் உரியதாகக் கருதுகின்றனர்.[7]

### (இ) மலபார் / இந்திய மரபு :

மலபார் மரபுக்கு மறு பெயர் இந்திய மரபு. இது தலைமுறை தலைமுறையாக வாய்மொழி மரபில் மலபார் கிறிஸ்தவர்களிடையே தூய தோமா குறித்து இருந்து வந்துள்ள மரபுச் செய்திகளைக் கொண்டது. இம்மரபுச் செய்தி குறிப்பிடத்தக்க அளவு கிறிஸ்தவரல்லாத மக்களிடையேயும் புழக்கத்தில் இருந்து வந்துள்ளது.

மலபார் மரபு அல்லது இந்திய மரபு என்னும் இம்மரபின்படி தோமா கடல் வழி வந்தார். கி.பி.52இல் கிராங்கனூரில் தரையிறங்கினார். கிராங்கனூர், பாலயூர், கொல்லம் என்னுமிடங்களிலும், வேறு சில இடங்களிலும் இருந்த உயர் சாதி இந்துக் குடும்பங்களைச் சமய மாற்றம் செய்தார்; அதன் பின் சோழ மண்டலக் கரையோரப் பகுதிக்குச் சென்று, அங்கும் மக்களைக் கிறிஸ்தவ நெறிக்கு மாற்றி னார். பின்பு சீனா சென்றார், நற்செய்தியை அறிவித்தார். இந்தியா திரும்பிய தோமா, தான் மலபாரில் கிறிஸ்தவராக்கிய உயர் சாதி, செல்வாக்கு மிக்க குடும் பங்களைச் சேர்ந்த சிலரை ஆயர்களாக / வழிகாட்டிகளாக நியமித்து, அங்கிருந்த கிறிஸ்தவர்களை ஒருங்கமைத்தார். அவர்களின் உதவியுடன் பொது வழிபடு மனைகளைக் கட்டினார். பின்னர் சோழ மண்டலப் பகுதிக்குச் சென்ற தோமா சின்ன மலைக்கு அருகில், தற்பொழுது தூய தோமா மலை / பரங்கிமலை என்னு மிடத்தில் குருதிச் சான்றினராக இறந்தார். அவரின் உடல் மைலாப்பூர் என்னும் நகருக்குக் கொண்டு வரப்பட்டு, அவர் கட்டியெழுப்பியிருந்த வழிபாட்டுத் தலத் தினுள் புதைத்தனர். இம்மரபின்படி மலபார் கிறிஸ்தவர் மட்டுமல்லாது, மேற்கு ஆசியாவிலிருந்தும், சீனாவிலிருந்தும் கிறிஸ்தவர்கள் புனிதப் பயணமாக மலபார் சென்று, தோமாவின் கல்லறைக்கு மரியாதை செலுத்தினர்.[8]

### (ஈ) மைலாப்பூர் அல்லது சோழ மண்டல மரபு :

சில வரலாற்றாசிரியர் மைலாப்பூர் மரபை மலபார் அல்லது இந்திய மரபின் ஒரு பகுதியாகக் கருதாமல், தனித்த ஒன்றாகக் கருதுகின்றனர். மைலாப்பூர் சோழ மண்டலத்தினுள் உள்ளதால், இதனைச் சோழ மண்டல மரபு எனவும் அழைப்பர். போர்த்துக்கீசியர் இதனைத் தனி ஒரு மரபாகக் கொண்டு அதற்கு முக்கியத்துவம் தந்தனர். இம்மரபின்படி, மலபார் கரையோரப் பகுதியில் வெற்றிகரமான, கனி பல தந்த திருப்பணியாற்றிய தூய தோமா, கிழக்குக் கடற்கரைப் பகுதிக்கு வந்து, அங்கு நற்செய்தியை அறிவித்தார். மலபாரைப் போன்றே இங்கும் உயர் சாதியினர் பலர் கிறிஸ்தவம் தழுவினர். தூய தோமாவின் வெற்றிகரமான பணியி னால் பொறாமையும், எரிச்சலும் அடைந்த அவரது எதிர்ப்பாளர்கள் அவரைக் கொலைசெய்ய பல முயற்சி செய்தனர். அவ்விதமான ஒரு முயற்சியின்போது, அவரது எதிர்ப்பாளர் அவரை விரட்டிச் சென்றனர். அதனால் அவர் சின்ன மலைப் பகுதியில் இருந்த குகை ஒன்றில் தஞ்சம் புகுந்தார்.[9] (சின்ன மலை என்னுமிடம் சென்னையிள்ள இந்நாளின் கிண்டி பகுதியில் உள்ளது.) அங்கு அவர் பிடிபட

இருந்த வேளையில் குகையின் மேல் கூரையிலிருந்த சிறு துவாரத்தின் / இடைவெளியின் வழியாகத் தப்பி, பரங்கிமலை என தமிழில் அழைக்கப்படும், தூய தோமா மலையின் உச்சியில் தாம் கட்டியிருந்த வழிபடும் தலத்தில் தஞ்சம் புகுந்தார். அங்கிருந்த கற்சிலுவை ஒன்றைத் தழுவி நிற்கையில், அவரைத் துரத்திக் கொண்டு வந்த எதிர்ப்பாளர் அவரை ஈட்டியினால் குத்திக் கொன்றனர். பின்னர் அவரது சீடர்கள் வந்து, குத்திக் கொல்லப்பட்ட அவரது உடலை எடுத்துச் சென்று, மைலாப்பூர் கடற்கரையில் அடக்கம் செய்தனர். அப்பகுதியே இன்று சான்தோம் என்றழைக்கப்படுகிறது.

## பல்வகை மூலாதாரங்களும் சான்றுகளும் :

### 1. பொது மரபு :

1. எடேசாவில் ஏறத்தாழ கி.பி. 250 இல் எழுதப்பட்ட **திருத்தூதுவரின் கோட்பாடுகள்**[10] என்னும் நூல் யூதா தோமாவின் பணிக்களம் இந்தியா எனத் தெரிவிக்கிறது.

2. சீரியாவைச் சேர்ந்த தூய எப்பிராயீம் (இறப்பு கி.பி.373) பல பாமாலைகளை எழுதியுள்ளார். அவற்றுள் ஒன்றான ‘ திருத்துவர் தூய தோமா மீதான' என்னும் பாடலில் இந்தியாவில் நற்செய்திப் பணியாற்றிய தூய தோமா மரபு குறித்துக் குறிப்பிடுகிறார்.[11]

3. நான்காம் நூற்றண்டினரான நாசியான்சு தூய கிரிகோரி[12] என்பவர் தூய தோமாவை இந்தியாவுடன் இணைத்து எழுதியுள்ளார்.[13]

4. மிலானின் தூய அம்புரோஸ்[14] (333 - 397) தோமாவை இந்தியாவுடன் தொடர்புபடுத்துகிறார். “கரடுமுரடான மலைகளால் சூழப்பட்டு, பிறருக்கு அடைபட்டிருந்த அரசுகளும் கூட அவர்களுக்கு (ஆண்டவராகிய இயேசுவின் சீடர்களுக்கு) சென்றடையக் கூடியவைகளாக இருந்தன, தோமாவுக்கு இந்தியா போன்றும், மத்தேயுவுக்கு பாரசீகம் போன்றும்...” என்று எழுதியுள்ளார்.[15] இந்தியாவிற்குச் சென்று வந்த பயணிகளின் குறிப்புகள் மூலமும், கிரேக்க, இலத்தீன் செவ்விலக்கியங்கள் வழியும் இந்தியாவைக் குறித்து அறிந்திருந்தார்.

5. டூர்ஸ் (Tours) நகர பேராயர் தூய கிரிகோரி (538 - 593) **குருதிச் சான்றினர் மேன்மை குறித்து**[16] என்னும் தம் நூலில் தூயதோமா இந்தியாவில் கொலையுண்டார்; அவரின் தூய உடல் அங்கிருந்து எடேசாவிற்குக் கொண்டுபோகப்பட்டு, அடக்கம் செய்யப்பட்டது என்கிறார். “இந்தியாவில் அவர் உடல் முதலில் புதைக்கப்பட்டிருந்த இடத்தில், குறிப்பிடும்படியான அளவீடுகளுடன், துறவி மடத்துடன் இணைந்த ஒரு

சிறிய வழிபடுமனை உள்ளது.... அங்குப் பயணியாகச் சென்று வந்த தியோடோர் இதனை எங்களுக்கு விவரித்துள்ளார்."[17] என எழுதியுள்ளார்.

6. **ஆங்கிலோ – சாக்சன் தின வர்த்தமானம்** என்னும் நூல் தூய தோமா, தூய பர்த்தொலோமேயு இந்தியாவில் ஆற்றிய அருள்பணிகள் குறித்த மரபினைக் குறிப்பிடுகிறது. "அதே ஆண்டில் (கி.பி.883) ஷெர்போர்னின் பேராயர் சிக்ஹெல்மும், ஏதெல்ஸ்டனும், அரசர் ஆல்பிரட் ஆணையிட்ட காணிக்கையுடன் உரோமைக்கும் (போப்பு மாரினசு) இந்தியாவில் இருந்த தூய தோமாவிடமும், தூய பர்த்தொலோமேயுவிடமும் சென்றனர்" என்று தெரிவிக்கிறது.[18] மேன்மையான பேராயர் தம் குழுவினருடன் தூய தோமாவின் கல்லறைக்குச் சென்று வந்தனர். இந்தியாவிலிருந்து வாசனைப்பொருள்களுடனும், பிற பொருள்களுடனும் இங்கிலாந்து திரும்பினர் என அந்நூலில் விவரிக்கப்பட்டுள்ளது.[19]

## 2. மேற்கத்திய மரபு:

### (அ) யூதா தோமாவின் பணிகள்:

இந்நூல் அரசன் கொண்டபோரஸ் ஆட்சி காலத்தில் பார்த்தியாவிலும், இந்தியாவிலும் தோமா பணியாற்றினார் எனக் கூறுவதுடன், கொலையுண்ட தோமாவின் உடல் இந்தியாவிலிருந்து, எடேசாவிற்குக் கொண்டு போகப்பட்டு, அங்கு புதைக்கப்பட்டது எனவும், சூலை திங்கள் மூன்றாம் நாள் தோமா குருதிச் சான்றினரான நினைவு நாளாக அங்கு வழக்கத்தில் உள்ளதாகவும் தெரிவிக்கிறது. எனவே மேற்கத்திய மரபிற்கு **யூதா தோமாவின் பணிகள்** நூல் மூலாதாரமாக உள்ளது.

## 3. இந்திய மரபு:

### (அ) வருகை புரிந்தோர்:

1. நெஸ்தோரிய பேராயர் மார் சாலமோன் (கி.பி.1222). **தேனீயின் நூல் ( Book of the Bee)** என்பதில் தூய தோமா மரபு குறித்து குறிப்பிடுகிறார். "தோமா யூதா இனத்தவர், எருசலேமைச் சார்ந்தவர். பாரசீகருக்கும், மேதியருக்கும், இந்தியருக்கும் கற்பித்தார். இந்தியர்களின் அரசனின் மகளுக்கு அவர் திருமுழுக்கு அளித்ததால் ஈட்டியால் குத்தப்பட்டார், கொலையுண்டார். ஹப்பான் என்ற வணிகர் அவர் உடலை எடுத்து வந்து, நம் ஆண்டவரின் ஆசிபெற்ற எடேசா நகரில் அடக்கம் செய்தார். வேறு சிலரோ இந்தியர்களின் ஒரு நகரமான மஹலூப் என்ற இடத்தில் அவரை அடக்கம் செய்ததாகக் கூறுவர்" என எழுதியுள்ளார்.[20] தூய தோமா புதைக்கப்பட்டதாகக் கூறப்படும் இடத்தின் பெயரை முதல் முறையாகக் குறிப்பிடுவது மார் சாலமோனே. எனவே அது கவனத்திற்குரியது.

2. இத்தாலி நாட்டின் வெனிசு (Venice) நகரத்திலிருந்து வந்த பயணி மார்க்கோ போலோ ( Marco Polo) இந்தியாவிலுள்ள தூய தோமாவின் கல்லறைக்குத் தாம் சென்று வந்ததைக் குறித்துக் குறிப்பிடுகிறார் (கி.பி.1292) தூய தோமாவின் உடல் மலபார் பகுதியிலுள்ள ஒரு நகரில் அடக்கம் செய்யப்பட்டுள்ளதாக அவர் குறிப்பிடுகிறார்.[21]

3. மாண்டி கார்வினோ யோவான் (John of Monte Corvino) என்னும் பிரான் சிஸ்கன் துறவி சீனா செல்லும் வழியில் சில காலம் இந்தியாவில் தங்கி இருந்தார். கி.பி.1305 சனவரி எட்டாம் நாள் பீக்கிங்கிலிருந்து எழுதிய மட லொன்றில் "திருத்தூதுவர் தூய தோமாவின் வழிபடுமனை" என்பதைக் குறிப்பிடுகிறார்.[22]

4. போர்டினோனின் ஒடோரிக் (Odoric of Pordenone ) என்பவர் இந்தியாவில் தான் மேற்கொண்ட பயணக்குறிப்பை உத்தேசமாக கி.பி.1324 இல் எழுதி யுள்ளார். மிளகு விளையும் நாட்டில் கிறிஸ்தவர் இருக்கின்றனர் எனவும், அப்பகுதியை மினிபார் எனவும் குறிப்பிடுகின்றார். மேலும் ஆசி பெற்ற திருத்தூதுவர் தோமாவின் உடல் அடக்கம் செய்யப்பட்டுள்ள இந்த மண்டலம் ' மோபார் ' ( Mobar ) எனத் தெரிவிக்கிறார்.[23]

5. ஜான் டே மாரிக்னோலி (John de Marignoli) என்பவர் தூய தோமா கிறிஸ்த வர்கள் வாழ்ந்திருந்த இந்தியப் பகுதிகளில் பயணம் செய்த குறிப்பினைத் தருகிறார் (கி.பி.1349). தோமா கிறிஸ்தவர்கள் மிளகுத் தோட்ட உரிமை யாளர்கள் எனவும், அப்பகுதி அரசர் மானியமாக அளித்த பொது இரும்புப் பட்டறையின் உடமையாளர் எனவும் எழுதியுள்ளார். தூய தோமா கட்டிய வழிபடுமனை உள்ள இடம் மோஅபார் (Moabar) எனக் கூறுகிறார்.[24]

6. கி.பி.1430 இல் நிக்கொலோ டே காண்டி (Nicolo de Conti) என்பவர் தோமா கல்லறையைச் சென்று பார்த்தார். அவருடைய பயணத்தைப் பற்றிய குறிப்பேட்டில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது: "பயணத்தைத் தொடர்ந்த நிக்கொலோ வணிக நகரம் ஒன்றிற்கு வந்தார். அதனை அவர் மாலேபூர் ( Malepur ) எனக் குறிப்பிடுகிறார். இது வங்காள விரிகுடாவைத் தாண்டி இரண்டாவது வளைகுடாவில் உள்ளது. இங்கு தூய தோமாவின் உடலை மிகுந்த மதிப்புடன் ஒரு அகன்ற அழகான வழிபடுமனையினுள் புதைத்துள்ளனர். நெஸ்தோரியர் என்னும் எதிர் கோட்பாட்டினர் அக்கல் லறையை வழிபடுகின்றனர் / உயர் மதிப்பில் வைத்துள்ளனர். இக்கோட் பாட்டினர் ஆயிரமானோர் இந்நகரில் உள்ளனர்."[25]

## (ஆ) உள் நாட்டு / இந்திய மூலாதாரங்கள்:

இந்திய மரபு வாய் மொழி மரபாக இருந்து வந்தது. மலபார் கிறிஸ்தவர் உறுதியாக அதனைக் காத்து வந்தனர். இம்மரபு பற்றிய குறிப்புகள் சிலவற்றை, சில பாடல்களில் காணலாம். அவையாவன: இரம்பான் தோமா பாட்டு, வீரடியான் பாட்டு, மார்கம் களிப்பாட்டு என்பவைகளே.

வீரடியான் பாட்டு என்பது வாய்மொழி / வாய்வழி பாடல். இது ஒரு குறிப்பிட்ட இந்து சாதி குடும்பத்தினர் வசம் உள்ளது. இப்பாடலை அக்குடும்பத்தைச் சேர்ந்தோர் தோமா கிறிஸ்தவர்களின் குறிப்பிட்ட சில சமுதாய, சமய நிகழ்ச்சிகளில் பாடி, அதற்காகத் தோமா கிறிஸ்தவர்களிடமிருந்து அன்பளிப்புகளையும் கொடைகளையும் பெறுவர்.[26]

இரம்பான் தோமா பாட்டு வாய்மொழியில் இருந்தது. அது கி.பி.1601இல் தோமா இரம்பான் மலியகல் என்ற ஆயரினால் எழுத்து வடிவம் பெற்றது எனக் கருதப் படுகின்றது. இவர் நிரணம் என்ற இடத்தைச் சேர்ந்த மலியகல் குடும்பத்தைச் சார்ந்த நாற்பத்தியெட்டாவது ஆயராவார். அக்குடும்பம் தூய தோமாவினால் சமய மாற்றம் பெற்ற குடும்பங்களில் ஒன்று. இப்பாடலுக்கும் **யூதா தோமா பணிகள்** என்னும் நூலுக்கும் ஒற்றுமைகள் உள்ளன.[27]

மார்கம் களிப்பாட்டு (மகிழ்ச்சி வழி பாடல் / The Song of the Happy Way ) என்பது கிறிஸ்தவ வழியையும், அதன் வழிபாட்டையும் மலபாரில் எவ்வாறு தோமா அறிமுகம் செய்வித்தார் என்பதைக் கூறுவதாகும். இப்பாடல் கி.பி.1792 இல் சேகரிக்கப்பட்டு, தொகுக்கப்பட்டது.

பக்கலோமட்டம், சங்கராபுரி, கள்ளி, களிக்காவு, கொய்க்கம், மாதேய்பூர், முட்டோடல், நெடும்பள்ளி, பனக்கமட்டம், கோதகளி என்னும் குடும்பங்களும், இன்னும் சிலவும் தூய தோமாவின் மூலம் மலபாரில் கிறிஸ்தவம் தழுவியவர்கள்.[28] கி.பி. முதலாம் நூற்றண்டில் தூய தோமாவினால் தாம் கிறிஸ்தவராக்கப்பட்டதாக உறுதியாகக் கருதுகின்றனர்

தூய தோமா திருச்சபைகளை நிறுவியதாகக் கூறப்படும் ஏழு இடங்களாவன கிராங்கனூர், பலயூர், பாரூர், கொல்லம், கோக்கமங்கலம், நிரணம், சாயல் என்பவை. இவை சொக்கோத்திரா தீவிலிருந்து வந்து குடியேறிய யூதர்களின் வணிகத்தளங்களாகும். எனவே வணிகரின் கூட்டத்துடன் தூய தோமாவும் அவ்விடங்களுக்குச் சென்றிருக்கலாம் எனவும், அத்தருணத்தைப் பயன்படுத்தி, சிதறி இருந்த யூதர்களுக்கும், உள்ளூர் மக்களுக்கும் நற்செய்தியை அறிவித் திருக்கலாம் எனவும் நாம் யூகிக்கலாம்.

மைலாப்பூரில் உள்ள கல்லறையும், இந்தியாவில், குறிப்பாக தென் இந்தியாவில் தூய தோமா பணியாற்றினார் என்பதற்குச் சான்றாக சுட்டிக்காட்டப்படுகிறது.

## மரபினை நிறுவுவதில் உள்ள சிக்கல்கள்:

தூய தோமா மரபின் உண்மைத் தன்மையை நிலைநிறுத்துவதில் சில சிக்கல் கள் உள்ளன. "ஐயமற இதனை நிறுவிட சம காலத்துப் பதிவுகள் எவையும் நம்மிடம் இல்லை... கி.பி. முதல் நூற்றாண்டையோ, இரண்டாம் நூற்றாண்டையோ சேர்ந்த, இதைக் குறித்துக் கூறும் நூல்களோ அல்லது கல்வெட்டுகளோ அல்லது நினைவுச் சின்னங்களோ கிடைக்கப்பெறவில்லை. மூன்றாம் நூற்றாண்டு வரை பண்டைய கால கிறிஸ்தவ எழுத்தர் இது பற்றிக் குறிப்பிடத்தொடங்கவில்லை. அவ்விதம் எழுதி யோரும் கூட ஐயம் தோய்ந்த செய்திகளைத்தாம் தந்தனரே தவிர முழுமையான செய்திகளைத் தந்தனரில்லை."[29]

தொடக்க கால திருச்சபை தந்தையர் வழி அறியலாகும் இந்தியாவுக்குப் புறத்தே இருந்து வரும் செய்திகள் இம்மரபினை நிறுவிடப் போதுமானவையாக இல்லை. 'இந்தியா ' என்ற பெயரைப் பயன்படுத்துவதில் அவர்களின் எழுத்துக்களில் வேறுபாடுகள் உள்ளன.

இந்தியாவில் தூய தோமா நற்செய்தி அறிவித்த இடத்தின் பெயரைப் பதின் மூன்றாம் நூற்றாண்டு வரை எவரும் வெளிப்படுத்தவில்லை. பதின்மூன்றாம் நூற் றாண்டில் மார் (பேராயர்) சாலமோன் என்பவர் தான் முதன் முறையாக தூய தோமா புதைக்கப்பட்ட இடத்தின் பெயரை மகலூப் என்கிறார். 13ஆம், 14ஆம், 15ஆம் நூற்றாண்டுகளில் இந்தியாவிற்குப் பயணியராகவோ, வருகைபுரிந்தவராகவோ வந்த ஐரோப்பியரில் சிலர், தாங்கள் தோமா கிறிஸ்தவரைக் கண்ட இடத்தைப் பல்வேறு பெயர்களில் சுட்டுகின்றனர். எனினும் அவ்விடம் மிளகு விளையும் இடம் என்று குறிப்பிட்டதில் ஒருமித்து உள்ளனர். மலபாருக்கு வெளியே மிளகு விளை வித்ததாகச் செய்தி இன்மையால், அன்னோர் குறிப்பிடுவது மலபார் என்னும் பகுதியையே எனத்துணியலாம்.

மயிலாப்பூரில் உள்ள கல்லறை தூய தோமாவினுடையது என்பர். கி.பி.1523இல் அதனைத் திறந்து பார்த்த போர்த்துக்கீசியர் அதில் செம்மண் நிறைந்த ஒரு பாத்திரம், தலையோட்டின் சில துண்டுகள், ஒரு சில எலும்புகள், இரும்பிலான ஈட்டியின் தலைப்பகுதி ஆகியவற்றைக் கண்டெடுத்தனர். அக்கல்லறை அமைந்திருந்த திசை, வழக்கமாக கிறிஸ்தவக் கல்லறைகள் இருக்கும் திசை அமைப்பில் இல்லை. (பொதுவாக, கிறிஸ்தவக் கல்லறைகள் மேற்கு – கிழக்காக அமைந்திருக்கும்). எனவே அக்கல்லறை தோமாவினுடையது தானா, அல்லது வேறு எவருடையதுவா என்ற வினா எழுப்பப்படுகின்றது. என்றாலும், அக்கல்லறையில் பயன்படுத்தி இருக்கும் செங்கற்களின் அளவு, புதுச்சேரிக்குத் தெற்கே உள்ள அரிக்கமேடு என்ற இடத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள செங்கற்களின் அளவை ஒத்துள்ளது. இதனால் மயிலாப்பூர் கல்லறை முதல் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்கலாம் என யூகிக்கப்படுகின்றது. கி.பி. முதல் நூற்றாண்டின் முன் பகுதியிலிருந்து இரண்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதி

வரை அரிக்கமேடு உரோமையரின் ஒரு வணிக மையமாகத் திகழ்ந்தது. அது கி.பி.1945இல் அகழ்ந்தெடுக்கப்பட்டது. அதிலிருந்து எடுக்கப்பட்டுள்ள செங்கற்களில் தொன்மையானதின் (உத்தேசமாக கி.பி.50) அளவும், மயிலாப்பூர் கல்லறையின் செங்கற்களின் அளவும் ஒத்ததாக உள்ளன.[30]

கிறிஸ்தவ வரலாறு தொடங்கும் காலத்திற்கு முன்பிருந்தே யூதக்குடியேற்றம் கேரளத்தில் இருந்து வந்துள்ளது. இது தூய தோமா போன்றோர் அங்கு வந்து கிறிஸ்துவின் நற்செய்தியை அவர்களுக்கு அறிவிப்பதற்கான வாய்ப்பினை ஏற்படுத்தியிருக்கலாம் என்றுகொள்ள இடமளிக்கிறது. இதே அடிப்படையில் கேரளத்தில் யூத மக்கள் இருந்ததால் தூய பர்த்தொலோமேயு அம்மக்களிடையே எபிரெய மொழியிலமைந்த மத்தேயு நற்செய்தி நூலை விட்டுச் சென்றிருக்க வாய்ப்புள்ளது எனலாம்.

தற்கால சென்னையின் ஒரு பகுதியான சைதாப்பேட்டையில் உள்ள சின்ன மலையில் ஒரு குகை உள்ளது. தூய தோமாவின் பகைவர் அவரை விரட்டிக் கொண்டு வந்தபோது இக்குகையினுள் தான் அவர் ஒளிந்திருந்தார் என்பர். ஆனால், இது மயிலாப்பூர் மரபினுள் பிற்சேர்க்கையாக அமைந்த ஒன்று என்பர். அக்குகையிலுள்ள பாறையில் ஓர் உள்ளங்கை தடம் / கால் பாதத்தடம் தென்படுகிறது. அது தூய தோமாவினுடையது எனக் கூறுபவர், அவர் அப்பகுதியின் சுற்றுப் பகுதியில் பணியாற்றியதற்கு ஆதாரமாகச் சுட்டுவர். என்றாலும் இதைக்குறித்து மாறுபட்ட கருத்துக்கள் உள்ளன.

சென்னை அருகிலுள்ள பரங்கிமலை / தூய தோமா மலையில் உள்ள வழிபடுமனையினுள் சிலுவை ஒன்று உள்ளது. இச்சிலுவையைத்தான் தூய தோமா தம்மைக் கொல்ல தம் பகைவர் துரத்தி வந்தபோது தழுவி நின்றார் என்பர். அச்சிலுவையின் மையப்பகுதியில் காணப்படும் சிவப்பு நிறச்சுவடு தூய தோமாவின் குருதிக்கறை என்பர். ஆனால் குறிப்பிடப்படும் சிலுவை பாரசீக கலாச்சாரத்தை வெளிப்படுத்தும் ஒன்று. அச்சிலுவையில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துக்கள் பண்டைய பாரசீக பாலவி மொழியில் உள்ளன. அதைப் பாரசீக சிலுவை என்று கிறிஸ்தவ வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுவர். அதனைச் சோதித்த ஆய்வறிஞர் அது ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று தெரிவித்துள்ளனர். மேலும், கி.பி. முதலாம் நூற்றாண்டில் சிலுவை வணக்கத்திற்குரியதாகக் கருதப்படவில்லை. எனவே பரங்கிமலை வழிபடுமனையில் உள்ள சிலுவையைத் தூய தோமாவின் பணியுடன் தொடர்புபடுத்துவதில் சிக்கல் உள்ளது. இவ்விடத்தில் மற்றொன்றையும் சுட்டிக்காட்டலாம். மைலாப்பூர் மரபில் தூய தோமாவின் பணிக்கு ஆதரவாகக் கூறப்படும் மூன்று இடங்களான சின்ன மலை, பரங்கிமலை / தூய தோமா மலை, சாந்தோம் வழிபடுமனை ஆகியவை ரோமன் கத்தோலிக்க திருச்சபை வசம் உள்ளவை.

**தூய தோமாவின் பணிகள்** என்னும் நூல் கூறும் செய்திகள் உண்மைத்தன்மை உள்ளதா? "அது கூறும் செய்திகளுள் பல புனைவு என்பது வெள்ளிடைமலை.

அப்படியாயின் அது கூறுவது அனைத்துமே புனைவு என ஒதுக்கிவிடலாமா அல்லது தூய தோமா இந்தியாவில் ஆற்றிய நற்செய்திப்பணி பற்றிய சில மெய்யான மரபை அடித்தளமாகக் கொண்டு அதின் ஆசிரியர் கவின்மிகு கதையை எழுதினார் எனலாமா?...எப்படியாயினும் குண்டபோரஸ் என்ற அரசன் ஒரு வரலாற்று மனிதரே. இவர் பெயர் பொறிக்கப்பெற்ற எண்ணற்ற நாணயங்கள் கி.பி.1834 முதல் பஞ்சாபிலும், ஆப்கானிஸ்தானிலும் கிடைக்கத் தொடங்கியுள்ளன. அவைகளின் ஒரு பக்கத்தில் கிரேக்கத்திலும் மறுபுறத்தில் பாலவி மொழியிலும் அவரின் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. நாணய ஆய்வு நெறியின்படி இவற்றின் காலம் கி.பி.முதல் நூற்றாண்டின் முற்பகுதி என்று கணித்துள்ளனர். கிடைக்கப்பெற்ற நாணயங்களின் எண்ணிக்கை அம்மன்னரின் ஆட்சி காலம் மிக நெடியதாக இருந்ததைக் கூறுகிறது. அத்துடன் அவர் பெயர் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டு[31] ஒன்றும் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. அதில் குறிப்பிட்டுள்ள ஆண்டு கி.பி.46 என கணிக்கப்படுகிறது; அது அம்மன்னனின் இருபத்தாறாம் ஆட்சி ஆண்டு ஆகும். இன்னும் வேறு சில நாண யங்களில் காத் (Gad) என்ற பெயரும் உள்ளது... இத்தகைய மரபு வெளிப்படை மெய்மைகள் தவிர வேறு பிற உண்மைகளைத் தரும் எனக் கருதுவது இடர் தரும்..."[32] குண்டபோரஸ் அரசன் வரலாற்று நபர் என்பதிலோ, அவர் தற்கால பஞ்சாப் உள்ளடக்கிய வட மேற்கு இந்தியப் பகுதியில் அரசாண்டார் என்பதிலோ எவ்வித சந்தேகமுமில்லை. ஆனால் அவரது ஆட்சி காலத்தை உறுதி செய்யும் மூலாதாரங்கள் தூய தோமா குண்டபோரஸ் மன்னன் ஆட்சி செய்த பகுதியிலோ அல்லது அவரது காலத்திலோ நற்செய்திப் பணி செய்தார் என்பதை உறுதி செய்வதற்கு உதவியாக இல்லை. எனவே **தோமாவின் பணிகள்** நூல் தெரிவிக்கும் செய்திகளின் உண்மைத் தன்மையைக் குறித்து சற்று சந்தேகம் இருக்கத்தான் செய்கிறது.

## கணிக்கக் கூடிய முடிவுகள்:

### 1. மரபு நிராகரிப்பு:

கிறிஸ்தவ வரலாற்றாசிரியர் சிலர் தோமா மரபினை முற்றிலும் மறுத்து, அவர் இந்தியாவுக்கு வந்ததே இல்லை என்பர். அத்தகையோருள் குறிப்பிடத்தக்கவர்: பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்த பிரெஞ்சு வரலாற்றறிஞர் பாஸ்னேஜ் ( Basnage) (சீர்திருத்தச் சபை), தில்லிமாண்ட் (Tillemont) (உரோமன் கத்தோ லிக்கர்), பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த பிரெஞ்சு அறிஞர் லா குரோசே (La Crose) (சீர்திருத்தச் சபை), ஆங்கில சீர்திருத்தச் சபையின் ஜேம்ஸ் ஹாஃப் (James Hough), சர் ஜான் கேய் (Sir John Kaye) என்பவர்களே.[33] இவர்களின் கருத்துப்படி கி.பி. முதல் நூற்றாண்டில் பாலஸ்தீனிய யூதர் ஒருவர் இந்தியா விற்குப் பயணம் செய்து வருவது என்பது சாத்தியமில்லை. எனவே தூய தோமா இந்தியாவிற்கு வந்திருக்கமாட்டார் என்பதே.

## 2. வட இந்தியப் பணி ஏற்பு:

சிலர் தூய தோமா வட இந்தியாவிற்குச் சென்று பணி செய்திருப்பார் என்பதை ஏற்கத் தயாராக உள்ளனர். அத்தகையோர் அவரின் தென் இந்தியப் பணியை மறுக்கின்றனர். ஜி.மில்னே ரே (G.Milne Rae), அருள் தந்தை ஜே. டால்மான் (Fr.J.Dahlmann) இக்குழுவினைச் சேர்ந்தோர் ஆவர்.[34] **தோமாவின் பணிகள்** நூலைத் தம் நிலைபாட்டிற்குச் சான்றாகக் கொள்வர்.

## 3. தென் இந்தியப் பணி ஏற்பு:

சிரியன் கிறிஸ்தவ எழுத்தாளர்களான இ.எம்.பிலிப்பு, (E.M.Philip) கே.என்.தானியேல் ( K. N. Daniel ) என்பவர்கள் தூய தோமாவின் தென்னிந்தியப் பணியை ஆதரிக்கின்றனர், வட இந்திய மரபை ஏற்க மறுக்கின்றனர். இன்னும் மலபாரில் வாழ்ந்து வரும் சிரியன் கிறிஸ்தவ சமுதாயத்தை உறுதியான சான்றாகக் காட்டுகின்றனர்.

## 4. இரு பயணங்களையும் ஆதரிப்போர்:

தூய தோமா வட இந்தியாவிலும், தென் இந்தியாவிலும் பணியாற்றினார் என சிலர் கருதுகின்றனர். "பேராயர் எ.இ.மெட்லிகாட் (Bp.A.E.Medlycott) இரு வெவ்வேறு பயணங்கள் நிகழ்ந்தன எனவும் அவைகளில் ஒன்று, பாலஸ்தீனாவிலிருந்து நிலவழியாக மெசபொத்தோமியா, பாரசீகம் ஊடாக இன்றைய பாகிஸ்தானுக்கும், அதன்பின் பாலஸ்தினாவிற்குத் திரும்பிய பின், மற்றொரு பயணம் எகிப்து, எத்தியோப்பியா வழியாகச் சொக்கோத்திரா தீவிற்கும், அங்கிருந்து அரபிக்கடல் வழியாக மலபாருக்கும் பயணித்தார் எனக் கருதுகின்றார். ஜே. என். ஃபார்குஹார் இந்தியாவிற்குக் கிழக்கே உள்ள பகுதிக்கும் தூய தோமாவின் பணி விரிவடைந்திருந்தது எனக் கருதுகிறார். தூய தோமா கடல் வழியே பயணித்து, சிந்து நதி வழியே முதலில் பஞ்சாப் சென்றார். குஷானரின் படையெடுப்பின் காரணமாக வெளியேற வேண்டியிருந்தது. இப்படையெடுப்பின்போது அங்கிருந்த கிறிஸ்தவர் அடியோடு துடைத்தெறியப்பட்டதால் அவர்களைக் குறித்த சுவடு ஒன்றேனும் இல்லை. தூய தோமா இந்தியாவைவிட்டு கடல் வழி சென்றார். சொக்கோத்திராவில் இறங்கி, சில காலம் தங்கியிருந்து, அங்கு சிலரைக் கிறிஸ்தவராக்கி, ஒரு திருச்சபையை நிறுவினார். பின்னர் கடல் வழி மீண்டும் இந்தியா வந்தவர், மலபாரில் இறங்கினார்; சில காலம் சென்ற பின் கிழக்கு கடற்கரையோரம் வந்தார். இந்தியாவையும் கடந்து வேறு நாடுகளுக்கும் தோமா சென்றார்; எனினும் சீனாவரை அல்ல, ஆனால் வங்காள விரிகுடா வழியாக பர்மா சென்றார்; அங்கிருந்து திரும்பிய பயணத்தின்போது மைலாப்பூர் வந்தடைந்தார், அங்குக் குருதி சான்றினரானார் என ஃபார்குஹார் கருதுகிறார். அருள் தந்தை ஹெராஸ் (Fr.Heras S.J. an Indologist) இதையொத்தக் கருத்தையுடையவராக இருந்தாலும், தூய தோமா பஞ்சாபிலிருந்து சொக்கோத்திரா

செல்லும் முன் கல்யாண் சென்றார் என்றும், பர்மா செல்லவில்லை என்றும் கருத்து தெரிவிக்கிறார்."[35] தூய தோமா பாகிஸ்தானுக்கும், தென் இந்தியாவிற்கும் வந்திருக்கக்கூடும் என்பது நடக்க இயலாத காரியமல்ல என சி.பி.பெர்த் கருதுகிறார்.

## 5. முடிவிற்கு வரஇயலாதக் கருத்துக்கள்:

எதையும் நிறைவான கருத்தாகக் கூறிட முடியாது என்போரும் உள்ளனர். எஃப்.இ.கேய் (F.E.Keay) என்பவர் " தூய தோமா தென்னிந்தியா வந்தார் என்பதை உறுதிபட நிறுவிட இயலாது. வந்தாரா வரவில்லையா என்ற வினா பல நிலைகளில் விவாதிக்கப்படும். அதற்கு இறுதியான முடிவு கூறுவதற்குக் குறைவான வாய்ப்பே உள்ளது. அவர் வந்தார் என்பதற்கான உள்ளூர் மரபு வலுவானதாக உள்ளது. தென்னிந்தியாவில் கிறிஸ்தவ திருச்சபை உருவானதற்கான எதிர்மரபு இல்லை. மிகத் தொடக்க காலம் தொட்டே இந்தியாவிற்கு வெளியே மேற்கிலும், கிழக்கிலும் இம்மரபுக்கு ஆதரவு இருந்துள்ளது. திருத்தூதுவர் தொலைதூரமான இந்தியாவிற்குப் பயணமாக வந்து நற்செய்தியை அறிவித்தார் என்னும் மரபு நடக்க இயலாததல்ல. சொல்லப்பெறும் செய்தியைச் சான்றுகளுடன் நிறுவ இயலவில்லை என்றாலும் அது நிகழ்ந்திருக்க முடியாது என்றும் சொல்ல இயலாது" என்கிறார்.[36] எல்.டபிள்யூ.பிரவுன் (L.W.Brown), "தென் இந்தியாவில் திருத்தூதுவர் பணியாற்றினார் என்பதை எவ்விதம் நிரூபிக்க இயலாதோ, அதேபோன்று அதை நிறுவிடவும் இயலாது. தொன்று தொட்டு இருந்து வரும் பழமையான கிறிஸ்தவ சமுதாயம் அம்மரபினை உறுதியாகப் பற்றிக் கொண்டிருப்பதும், நம் யுகத்தின் முதல் நூற்றாண்டிலிருந்து மேற்கத்திய உலகுக்கும், மலபாருக்கும் இடையே இருந்து வந்துள்ள வியாபாரத் தொடர்பிற்கான சான்றுகளும், அதே காலக்கட்டத்தில் அங்கிருந்த யூதக் குடியிருப்புகள் இருந்ததும், அம்மரபில் உண்மை உள்ளது என்பதை நம்புவதற்கான காரணங்களாக உள்ளன. நம்மிடம் உள்ள சான்றுகள் இதைவிட அதிகம் செய்துவிட முடியாது " என எழுதுகிறார்.[37] சுருங்கக்கூறின், எ ஃப்.இ.கேய் என்பவரும், எல்.டபிள்யூ.பிரவுன் என்பவரும் கூறுவதென்னவெனில் தூய தோமா இந்தியாவிற்கு வந்திருக்கவும் முடியும், வராமலும் இருந்திருக்கலாம்; அது ஒரு முடிவிற்கு வர இயலாததாகவே இருக்கும்.

## முடிவுரை:

எத்தகைய கருத்துகள் தெரிவிக்கப்பட்டிருப்பினும், கொள்கைள் நிலவினும், உலகிலுள்ள வேறு எந்த நாட்டினரும் தூய தோமாவின் கல்லறை தம்மிடையே உள்ளது என்றோ, தூய தோமாவே தம் நாட்டில் கிறிஸ்தவத்தை நிறுவியவர் என்றோ உரிமை கோருவதில்லை. எனவே அந்த அடிப்படையில் இந்தியாவில் கிறிஸ்தவத்தை நிறுவியவர் தூய தோமாவே என முடிவெடுக்கலாம்.

## *End Notes*

[1] A,M,Mundadan, **History of Christianity in India.** Vol.I. p.9.

[2] F.E. Keay, **A History of the Syrian Church of India** p.2.

[3] M.K.Kuriakose (ed.), **History of Christianity in India: Source Materials**. p.1

[4] P.Thomas, **Christians and Christianity in India and Pakistan** p.6

[5] M.K.Kuriakose, **op.cit**. p.25.

[6] **Ibid** p. 4.

[7] A.M. Mundadan, **op.cit.** p.25.

[8] **Ibid** p.29.

[9] Little Mount is in the vicinity of the present-day Saidapet and Guindy in Chennai.

[10] **Didascalia Apostolorum / Doctrine of the Apostles**

[11] M.K.Kuriakose, **op,cit,** p.5.

[12] St. Gregory of Nazianzen, one of the Cappadocian Fathers.

[13] M.K.Kuriakose, **Ibid** p.5.

[14] St. Ambrose, of Milan, Italy,

[15] **Ibid** p.6.

[16] **In Gloria Martyrdom** by St. Gregory of Tours, France

[17] **Ibid**. p.8.

[18] **Ibid**. p.13.

[19] P.Thomas, **op.cit**. p.23.

[20] M.K.Kuriakose, **op.cit**. p.15.

[21] **Ibid**. p.15.

[22] **Ibid**. p.16.

[23] **Ibid**. pp.17-18

[24] **Ibid**. pp.18-20.

[25] **Ibid**. p.29.

[26] P.J. Podipara, **The Thomas Christians** p.20

[27] **Ibid**. pp. 20-21

[28] A.Mathias Mundadan, **op.cit**. p.25

[29] C.B.Firth, **An Introduction to Indian Church History** p.3

[30] A.M. Mundadan, "The Tradition about the Indian Apostolate of St. Thomas and the Tomb of Mylapore", **The Indian Church History Review**, June 1969.

[31] The Takht-i- Bahi stone, now in the Lahore Museum, Pakistan.

[32] C.B.Firth, **op.cit**. pp.11-12.

[33] **Ibid**. p.14.

[34] **Ibid**. p.15.

[35] **Ibid**. pp.16-17.

[36] Quoted in **Ibid**. p.15.

[37] Quoted in **Ibid**. pp.15-16.

இயல் இரண்டு

# குடியேற்ற ஆதிக்கத்திற்கும் அருள்பணிக்கும் அல்லது அரசுக்கும் திருச்சபைக்கும் இடையேயான உறவு

குடியேற்ற ஆதிக்கம் என்ற கருத்தமைவு, காலத்தால் மிகவும் பழமையானது. எனினும் நவீன காலத்தில் மேற்கத்தியக் கிறிஸ்தவ நாடுகள் உலக அளவில் விரி வடைவதற்கு குடியேற்ற ஆதிக்கக் கருத்தமைவு நெருக்கமான தொடர்பு உடைய தாகும். எனவே "நவீன கால அருள்பணிகள் நவீன மேற்கத்திய குடியேற்ற ஆதிக்கக் கொள்கையின் சூழலில் தோன்றியவை" என்று டேவிட் பாஷ் கூறுகிறார்.[1] இந்தியா விலே போர்த்துக்கீசியரும், டச்சுக்காரரும், டேனிஷ் / டென்மார்க் நாட்டினரும், பிரித்தானியரும், குடியேற்ற ஆதிக்கம் செலுத்திய காலத்தே திருச்சபைக்கும், அரசுக்கும் அல்லது குடியேற்ற ஆதிக்கத்திற்கும் இந்திய அருள்பணிக்கும் இடையே இருந்த உறவினை வரலாற்று வழி அணுகிட இக்கட்டுரை முயல்கிறது.

## போர்த்துக்கீசியர் :

போர்த்துக்கல்லின் இளவரசர், மாலுமி ஹென்றி (Henry the Navigator 1394-1460) என்பவர் காலத்தில் போர்த்துக்கல் பல இடங்களுக்கும் கடற் பயணங்களை மேற் கொண்டது. போர்த்துக்கல் உரோமன் கத்தோலிக்கத் திருச்சபை மரபைப் பின்பற்றிய காரணத்தால் அதன் கடற்பயண முயற்சிகளுக்குப் போப்பின் நல்லாசி இருந்தது. விரைவில் ஸ்பானியரும் புதிய இடங்களைக் கண்டுபிடிக்கும் முயற்சிக்கு உற்சாக மளித்தனர். துணிகரச்செயல் செய்யும் நோக்கு இப்பயணங்களில் இருப்பினும், திருச்சபை விரிவாக்கம், புதியன காணும் ஆர்வம், வணிகம், நாடுகளை வெல்லுதல், குடியேற்றம் அமைத்தல், மதமாற்றம் என்பவை அவற்றின் கலவை நோக்கங் களாகத் திகழ்ந்தன. கி.பி.1453இல் துருக்கியர் கான்ஸ்டான்டினோபிலைக் கைப்பற்

றினர். இதனால் இந்தியாவுடன் நடைபெற்று வந்த நிலவழி வணிகம் அடைபட்டது. எனவே இந்தியாவிற்கும் அதனைக் கடந்த நாடுகளுக்கும் கடல் வழியை முனைப்புடன் கண்டுபிடிக்கவேண்டிய உடனடித்தேவை போர்த்துக்கல்லுக்கும், ஸ்பெயினுக்கும் ஏற்பட்டது.

உரோமன் கத்தோலிக்கத் திருச்சபையின் தலைவர் போப்பு மூன்றாம் காலிஸ்டஸ் (Pope Callistus III) கி.பி.1456இல் ஆணை (Bull)[2] ஒன்றைப் பிறப்பித்தார். இதன்படி, புதிதாகக் 'கண்டுபிடித்த', 'கண்டுபிடிக்க இருக்கும்' நிலப்பகுதிகளை ஆளவும், வணிகம் செய்யவும் ஒரு தனி முதன்மை உரிமையைப் போர்த்துக்கலுக்கு வழங்கினார். உரோமன் கத்தோலிக்கத் திருச்சபையைப் பின்பற்றிய ஸ்பெயினும் இத்தகைய தனி உரிமையைப் பெற்றது. போப்புவின் ஆணையைப் பெற்ற இரண்டு நாட்டு அரசர்களும் அதற்குப் பிரதி உபகாரமாகத் தங்கள் வசம் கொணர்ந்த நாடுகளுக்கு அருள்செய்திப் பணியாளர்களை அனுப்பவும், ஆதரிக்கவும், திருச்சபை களையும், வழிபடுமனைகளையும், துறவியர் மடங்களையும் அமைக்கவும் பொறுப் பேற்கக் கேட்டுக் கொள்ளப்பட்டனர். இத்தகைய ஆதரவு உரிமையை 'பத்றோவாதோ' (Padroado) அல்லது 'பேற்றோனாடோ ' (Patronato) என அழைப்பர். எனவே போர்த்துக்கல், ஸ்பெயின் ஆகிய இரண்டு நாட்டு அரசர்களும் குடியேற்ற ஆதிக்கம் செய்த அதே வேளையில் அருள்பணியும் செய்தனர். போப்புவின் ஆணையைக் கருத்தில் கொண்டு போர்த்துக்கல் அல்லது ஸ்பெயின் நாட்டின் துறைமுகங்களிலிருந்து புறப்பட்ட ஒவ்வொரு கப்பலும், வணிகரை மட்டுமின்றி போர்வீரரையும், துறவியரையும் சுமந்துச் சென்றது.

மிக விரைவில் போர்த்துக்கல்லுக்கும். ஸ்பெயினுக்கும் இடையே கசப்பான போட்டி உண்டானது. அதனைத் தணிக்க போப்பு ஆறாம் அலெக்சாண்டர் புகழ் பெற்ற ஆணையொன்றைக் கி.பி.1493இல் பிறப்பித்தார். அதன்படி இவ்வுலகை இரண்டாகப் பகுத்தார். அட்லாண்டிக் பெருங்கடலின் மேற்குக் கடற்கரைப் பகுதியை ஸ்பெயின் நாட்டுக்கும், கிழக்குக் கடற்கரைப் பகுதியையும், அதைத் தாண்டிய பகுதி களையும் போர்த்துக்கல் நாட்டுக்கும் வழங்கினார். அத்துடன், "அந்நிலப்பகுதி களிலும், தீவுகளிலும் வாழும் மக்களுக்குக் கத்தோலிக்கத் திருச்சபையின் பற்றுறு தியையும், நல் அறங்களையும் போதிக்ககூடிய கடவுள் பயம் உடைய நன்கு கற்ற, நல்ல பணியாளர்களை அனுப்ப" போப்பு ஆணையிட்டார்.[3] இம்மன்னரிடமிருந்து உரிமம் பெறாமல் அவர்கள் வசம் உள்ள பகுதிகளுக்குள் வேற்று நாட்டினர் நுழைதல் கூடாது என்றும் போப்புவின் அந்த ஆணை தடைவிதித்தது.

கி.பி.1498 மே திங்கள் 17ஆம் நாள் கள்ளிக்கோட்டைக்கு அருகே வாஸ்கோ ட காமா (Vasco da Gama) என்ற போர்த்துகீசிய மாலுமி கரையிறங்கினார். மேற் கூறப்பட்டவற்றின் அடிப்படையிலேயே அவர் வருகையை நாம் கணிக்க வேண்டும். இந்தியாவிற்கு அவர் வந்ததின் நோக்கம் வணிகமே என்றாலும், அருள்பணி

செய்தல் / நற்செய்தியைப் பரப்புதல் என்பது மறைவான திட்டமாக இருந்தது. விரைவில் இந்தியாவின் மேற்குக் கரையோரப்பகுதியில் போர்த்துக்கீசிய வணிக மையங்கள் ஏற்பட்டன. குறிக்கோளோடு கூடிய போர்த்துக்கீசியரின் இரண்டாம் கட்டத் துணிகர இயக்கம் பெட்ரோ ஆல்வாரஸ் கப்ரால் (Pedro Alvares Cabral) என்பவரின் கீழ் நடைபெற்றது. இவர் கி.பி.1500 செப்டம்பர் திங்கள் 13ஆம் நாள் கள்ளிக் கோட்டை / கோழிக்கோடு வந்து சேர்ந்தார். கொச்சி நோக்கி நகர்ந்த போர்த்துக்கீசியர் அப்பகுதியை உகந்ததாகக் கண்டனர். அங்கு அவர்களுக்கு மலபார் சீரிய கிறிஸ்தவருடனும் தொடர்பு ஏற்பட்டது. கி.பி.1509இல் அஃபோன்சோ டே ஆல்புகர்க் ( Affonso de Albuquerque) என்பவர் ஐரோப்பாவிற்குக் கிழக்கே உள்ள போர்த்துக்கீசிய குடியேற்றங்களுக்கு இரண்டாவது ஆளுநராக நியமிக்கப்பட்டார். அவர் போர்த்து கீசிய எல்லையை விரிவுபடுத்தவும், புதிய குடியேற்றங்களை ஏற்படுத்தவும் விரும் பினார். கி.பி.1510இல் பீஜாப்பூர் சுல்தானிடமிருந்து கோவாவைக் கைப்பற்றினார். கி.பி.1511இல் மலேயா தீபகற்பத்தின் மலாக்கா என்னுமிடம் போர்த்துக்கீசியர் கீழ் வந்தது. போர்த்துக்கீசிய ஆளுகையின் தலைமை இடமாகவும் நிர்வாக மைய மாகவும் கோவாவை ஏற்படுத்தினர். ஆசியாவில் இருந்த அனைத்துப் போர்த்துக் கீசிய குடியேற்றப் பகுதிகளுக்கும் கோவாவே தலைமை இடமாக ஆனது.

போப்புவின் ஆணைக்குக் கீழ்படிந்த போர்த்துக்கீசிய குடியேற்ற ஆட்சியாளர்கள் இந்தியாவில் தங்கள் கீழ் இருந்த பகுதிகளில் கிறிஸ்தவத்தைப் பரப்ப பல்வேறு முறைகளைப் பின்பற்றினர்.

அஃபோன்சோ டே ஆல்புகர்க் கலப்புத் திருமணங்களை ஊக்குவித்தார். கோவாவில் தன் கீழ் இருந்த வணிகரையும், போர்வீரரையும் இந்தியப் பெண்களை மணந்து கொள்ளக் கேட்டுக்கொண்டார். போர்த்துக்கல் அரசுக்கு விசுவாசமிக்க, ஆதரவான கிறிஸ்தவ சமுதாயத்தை ஏற்படுத்தவே இவ்வாறு கூறினார். இந்தோ போர்த்துக்கீசிய சமுதாயம் இந்தியாவில் உருவாக இதுவே மூலக்காரணமாகும். கோவாவிலிருந்த போர்த்துக்கீசிய நிர்வாகம் கிறிஸ்தவருக்கு மட்டுமே வேலை வாய்ப்பளித்தது. அரசாங்க அலுவலராகக் கிறிஸ்தவர் மட்டுமே பணி செய்ய முடியும் என்ற விதியையும் வகுத்தது. எனவே போர்த்துக்கீசிய எல்லைக்குள் வாழ்ந்த இந்தியரில் சிலர் அரசு வேலை வேண்டிக் கிறிஸ்தவராயினர். நேரடியாக நற்செய் தியைப் பறைசாற்றுதலின் வழியேயும் கிறிஸ்தவம் பெருகியது. அதே வேளையில் கட்டாய மதமாற்றமும் நிகழாமலில்லை. போர்த்துக்கீசிய அரசாங்கம் தன் எல்லைக் குள் இந்துக்களும், இசுலாமியரும் பொதுவழிபாட்டில் ஈடுபடுவதைத் தடைசெய்தது. மேலும் கிறிஸ்தவருக்கு மட்டுமே நிலங்களையும், பிற உடைமைகளையும் சொந்தமாக வைத்திருக்கும் உரிமையை அளித்தது. மற்றவர்கள், ஒன்று கிறிஸ்த வத்தைத் தழுவ வேண்டும் அல்லது போர்த்துக்கீசிய எல்லையை விட்டு அகல வேண்டுமென்றும் அறிவித்தது. பாரம்பரிய குடும்பச் சொத்துகளை வைத்திருந்தோர் இடம் பெயர்வதை விட கிறிஸ்தவத்தைத் தழுவுவது நல்லது என்று கருதி கிறிஸ்த

வராயினர். வேறு சிலர் போர்த்துக்கீசியப் படைகளின் பாதுகாவலை நாடியும் கிறிஸ்த வராயினர். இதற்கு எடுத்துக்காட்டாக, கன்னியாகுமரிக்கும் தூத்துக்குடிக்கும் இடையே தென் கிழக்குக் கடற்கரைப் பகுதியில் முத்துக்குளிக்கும் தொழிலில் ஈடுபட்டிருந்த பரவர் இன மக்களைக் கூறலாம். இம்மக்கள் அராபிய வணிகரின் தொடர்ந்த தொல் லைகளுக்கும், இடையூறுகளுக்கும் ஆளாகி வந்தனர். அதனால் போர்த்துக்கீசி யரின் பாதுகாவலை நாடினர். அதற்காகக் கிறிஸ்தவராகவும் ஆயத்தமாயிருந்தனர். எனவே போர்த்துக்கீசியர் கி.பி.1535க்கும் 1537க்கும் இடைப்பட்டக் காலத்தில் அச்சமுதாயத்தினர் அனைவருக்கும் திருமுழுக்களித்தனர். திருமுழுக்குப் பெற் றோரின் எண்ணிக்கை சற்றேறக்குறைய இருபதாயிரம் எனலாம்.

கிறிஸ்தவ சமயத்தைப் பரப்புவதில் போர்த்துக்கீசிய மன்னருக்கு இருந்த உற் சாகத்தைக் கண்ட போப்பு பத்தாவது லியோ கி.பி.1514இல் மற்றுமோர் ஆணையைப் பிறப்பித்தார். அந்த ஆணை போர்த்துக்கீசிய அரசருக்கும், அவரைப் பின்பற்றி வரும் ஆட்சியாளர்களுக்கும் ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும் வெற்றிக் கொள்ளப்பட்ட இடங்களிலும், வெற்றிக்கொள்ள இருக்கின்ற இடங்களிலும், திருச்சபையின் அதிகாரிகளை நியமிக்கும் உரிமையை வழங்கியது. இவ்விதம் ' பத்றோவாதோ ' உரிமை எழும்பியது. பேராயர் பதவிக்கும், திருச்சபையின் பிற அலுவல்களுக்கும் உரிய நபர்களை முன்மொழியும் உரிமையைப் போர்த்துக்கீசிய அரசர் பெற்றார்.[4] இதற்குக் கைமாறாகப் போர்த்துக்கீசிய மன்னர் தன் ஆட்சிக்குட்பட்ட இடங்களில் திருச்சபை பணியாளர்களை நியமிக்கவும், வழிபடுமனைகளைக் கட்டி, அதன் தேவைகளைச் சந்திக்கவும், கிறிஸ்தவரானோரின் தேவைகளைச் சந்திக்கவும் எதிர்பார்க்கப்பட்டார். கி.பி.1534இல் போப்பு மூன்றாம் பவுல் கோவா பேராயத்தை நிறுவினார். கோவா பேராயர் அதன் மூலம் இந்தியாவிலும், இந்தியாவிற்குக் கிழக்கே இருந்த நாடுகளிலும் இருந்த உரோமன் கத்தோலிக்கத் திருச்சபைகளின் தலைவரானார். மேற்கூறியவற்றால் உரோமைத் திருச்சபைக்கும், போர்த்துக்கல் அரசுக்கும், குடியேற்றவாதிகளுக்கும் அருள்பணிக்கும் இடையேயான நெருங்கிய உறவை அறிந்துகொள்ளலாம்.

## சீர்திருத்தத் திருச்சபையினர்:

சி.பி.பெர்த் என்பார், “இந்நாட்டில் சீர்திருத்தத் திருச்சபையின் அருள்பணியர் கொடியைப் பின்பற்றி வந்தனர் என்பது உண்மையே - தரங்கம்பாடியில் டென்மார்க்கு நாட்டுக் கொடியையும், பதினெட்டாம் நூற்றாண்டில் பிரித்தானியரின் இடங்களில் இருந்த ‘ஆங்கில அருள்பணிகளும்’ (English Missions), பத்தொன்ப தாம் நூற்றாண்டின் அருள்பணியரின் விரிவாக்கமும் பிரித்தானியரின் கொடியை யும் பின்பற்றி வந்தன.”[5] இக்கூற்று உண்மையானதுதானா?

இந்தியாவில் காலடிவைத்த சீர்திருத்தச் சபையினரின் முதல் வணிக நிறுவனம் பிரித்தானிய கிழக்கிந்தியக் கம்பெனிதான். அது கி.பி.1600இல் தன் வணிக நடவடிக்

கையைத் தொடங்கியது. அதன் சமயக் கொள்கையையோ, அல்லது அருள்பணி விரிவாக்கம் குறித்த மனோபாவத்தையோ நோக்குமுன் டச்சு, டேனிஷ் வணிக கம்பெனிகளின் மனோபாவத்தைக் காண்போம்.

## (அ) ஆலந்து நாட்டினர் / டச்சுக்காரர்:

டச்சுக் கிழக்கிந்தியக் கம்பெனிக்கும் ஏனைய வணிக அமைப்புகளைப் போன்றே வணிகம் ஒன்றே அதன் தலையாய இலக்கு. கி.பி.1663இல் டச்சுக்காரர் கொச்சியைப் போர்த்துக்கீசியரிடமிருந்து கைப்பற்றி, அவர்களின் ஆட்சிக்கு முற்றுப் புள்ளி வைத்தனர்.[6] நெதர்லாந்திலிருந்து / ஹாலந்திலிருந்து வந்த சீர்திருத்த சபையினராக இருந்த காரணத்தினால், ஆயர்கள் உட்பட்ட அனைத்து போர்த்துக்கீசியரையும் தாம் கைப்பற்றிய எல்லைகளிலிருந்து வெளியேற்றுவதை நோக்கமாகக் கொண்டிருந்தனர்.[7] கிறிஸ்தவ சபை விரிவாக்கம் குறித்து அவர்களுக்கு ஆர்வம் இருந்ததில்லை. என்றாலும், உரோமன் கத்தோலிக்கத் திருச்சபையை விரும்பாத காரணத்தினால் அதன் சுவடு கூடத் தெரியாதவாறு அகற்றிடத் தம்மாலான அனைத்து முயற்சிகளையும் எடுத்தனர். கொச்சிக்கு, டச்சுக்காரரின் வருகை மலபார் சீரிய கிறிஸ்தவருக்கு நன்மை தருவதாக இருந்தது. ஏனெனில் அவர்கள் உதயம்பேரூர் மன்றத் தீர்மானங்களைத் தங்கள் மேல் திணித்திருந்த பேராயர் அலெக்சிஸ் டே மெனிசிசின் உரோமன் கத்தோலிக்கக் கட்டுப்பாட்டை / நுகத்தைத் தகர்க்க விரும்பியிருந்தனர். எனவே டச்சுக்காரரின் வருகையினால் மலபார் கிறிஸ்தவர் நிம்மதிப் பெருமூச்சுவிட்டனர். கொச்சிக் கோட்டையினுள்ளும், நாகப்பட்டிணத்திலும், தூத்துக்குடியிலும் போர்த்துக்கீசியர் கட்டியிருந்த வழிபடுமனைகளைத் சீர்திருத்தத் திருச்சபையின் வழிபடுமனைகளாக மாற்றினர். கொச்சி வழிபடுமனையில்தான் வாஸ்கோ ட காமாவின் உடலை முதலில் புதைத்திருந் தனர். உரோமன் கத்தோலிக்கத் திருச்சபையை அகற்ற எடுத்த முயற்சிகள் தவிர சீர்திருத்தத் திருச்சபையைத் தங்கள் எல்கைகளில் நிறுவ எம்முயற்சியையும் எடுக்கவில்லை. அவர்களிடம் இராணுவ குருமார்கள் இருந்தபோதிலும் நற்செய்தியைப் பரப்பும் முயற்சியில் அவர்கள் ஈடுபடவில்லை. கி.பி,1795இல் பிரித்தானியர் கொச்சியைத் தம் வசம் ஆக்கும்வரை அது டச்சுக்காரரிடமே இருந்தது.[8]

## (ஆ) டென்மார்க்கு நாட்டினர் / டேனிஷ் :

டேனிஷ் கிழக்கிந்தியக் கம்பெனி இந்தியாவில் இரண்டு இடங்களில் தன் வியாபாரத்தலத்தை அமைத்திருந்தது: கி.பி.1620இல் தரங்கம்பாடியிலும் கி.பி.1676இல் செராம்பூரிலும் அவை நடைபெற்றன.[9] டச்சு கம்பெனியைப் போலவே டென்மார்க் கம்பெனியும் வணிகத்தையேத் தன் தலையாயப் பணியாகக் கருதியது. டேனிஷ் மக்கள் லூத்தரன் திருச்சபையைச் சேர்ந்தவர்கள். என்றாலும் தங்கள் கிறிஸ்தவப் பற்றுறுதியைப் பரப்புவதில் ஆர்வம் கொண்டிடவில்லை.

நற்செய்திப் பணியாளர்கள் தங்களின் வணிகத்துக்கு இடையூறாக இருப்பர் என்று அஞ்சியதால் தமது எல்லைக்குள் அவர்களை அனுமதித்திட மறுத்தனர்.

லூத்தரன் திருச்சபையைச் சேர்ந்த டென்மார்க்கின் மன்னர் நான்காம் பிரடெரிக் புராட்டஸ்டென்ட் திருச்சபை அருள்பணியரை இந்தியாவிற்கு அனுப்ப எண்ணங் கொண்டார். பர்த்தொலோமேயு சீகன்பால்க், ஹென்றி புளுட்சோ என்கிற இரண்டு ஜெர்மன் லூத்தரன் வாலிபர்களை அருள்பணியராகத் தெரிவுசெய்து, தரங்கம்பாடிக்கு 'அரசரின் அருள்பணியராக' அனுப்பினார்.[10] அவர்கள் இருவரும் கி.பி.1706 சூலை திங்கள் 9ஆம் நாள் தரங்கம்பாடியை வந்தடைந்தனர். அரசரின் அருள்பணியராகத் தரங்கம்பாடிக்கு அவர்கள் வந்தபோதும் கப்பலிலிருந்து வெளியே வரவோ, கரையை வந்தடையவோ எவ்வித வசதியையோ, உதவியையோ எவரும் செய்து தரவில்லை. ஓரிரு நாட்கள் கப்பலிலேயே காத்திருந்தபின், தரங்கம்பாடியிலிருந்த டென்மார்க்கு ஆளுநர் ஜெ.சி. ஹேசியஸ், அருள்பணியர் கப்பலிலிருந்து இறங்கவும், கரைசேரவும் வேண்டா வெறுப்பாக அனுமதி வழங்கினார். அவர் அருள்பணியரிடமும், அவர்களின் பணிகளைக் குறித்தும் பகைமை உணர்வுடன் நடந்து கொண்டார். கி.பி.1708 நவம்பர் திங்களில் அவர் சீகன்பால்குவைக் கைதுசெய்து, நான்கு மாதங்கள் தனிமைச் சிறையில் அடைத்தார்.[11] அருள்பணி வாரியம் ஒன்றினை டென்மார்க்கின் அரசர் கி.பி.1714இல் நிறுவினார். கோபன்ஹாகனில் இருந்த இந்த வாரியமும் தரங்கம்பாடி அருள்பணியரின் தொடக்க கால அருள்பணிக்குப் பேருதவியாக இல்லை. டென்மார்க்கின் வணிக கம்பெனிக்கும் தரங்கம்பாடி / தரங்கை அருள்பணியருக்கும் இடையேயான உறவும் கி.பி.1719 பெப்ருவரித் திங்களில் சீகன்பால்கு இறந்தபின் செம்மையுற்றது.

கி.பி.1750இல் கிறிஸ்டியன் பிரடெரிக் சுவாட்ஸ் தரங்கம்பாடி வந்து சேர்ந்தார். அவருக்கும் வணிக கம்பெனி அரசுகளுக்கும் இடையே நல்லுறவு இருந்தது. கி.பி.1742 முதல் 1788 வரை இந்தியாவில் திருப்பணியாற்றிய பிலிப்பு பெர்ரீசியசும் நல்லுறவுடனேயே திருப்பணியாற்றினார். இவர் பெரிதும் சென்னையிலேயே திருப்பணியாற்றினார். பிரித்தானிய கிழக்கிந்தியக் கம்பெனியுடன் நல்லுறவு கொண்டிருந்த காரணத்தினால், அதன் அதிகாரிகள் பல்வேறு வகையில் அவரின் அருள்பணிக்கு உதவினர். இக்காலக்கட்டத்தில் இலண்டனிலிருந்த கிறிஸ்தவக் கல்வியை விருத்தி செய்வதற்கான கழகம் (எஸ்.பி.சி.கே) சென்னையில் பணியாற்றிய ஜெர்மன் லூத்தரன் அருள்பணியரை ஆதரித்தது. இவ்விதம் "ஆங்கில அருள்பணி" (English Mission) என்பது உருவானது.[12] கி.பி.1767இல் எஸ்.பி.சி.கே. சுவாட்சைத் தன் திருப்பணியாளராகத் தத்தெடுத்தது. இதனால் இவர் முன்னர் திருச்சிராப்பள்ளியிலும், பின்னர் தஞ்சாவூரிலும் பணியாற்றினார். பிரித்தானிய வணிகக் கம்பெனியின் படைப்பிரிவுடன் இராமநாதபுரத்துக்கும், பாளையங்கோட்டைக்கும் பயணித்தார். அங்கெல்லாம் புராட்டஸ்

டென்ட் திருச்சபைகளை உருவாக்கினார். பிரித்தானியக் கிழக்கிந்தியக் கம்பெனி சுவாட்சின் பணிகளை அரசியலிலும் பயன்படுத்திக்கொண்டது. கி,பி,1779இல் மைசூரின் அரசர் ஹைதர் அலி பிரித்தானியரின் எதிரியான பிரெஞ்சுக்காரருடன் உடன்பாடு செய்துகொண்டு, பிரித்தானியருடன் போர் தொடுக்கப்போவதாகச் செய்தி கிடைத்தது. எனவே அவர்கள் அமைதிக்குழு ஒன்றை ஹைதர் அலியிடம் அனுப்ப விரும்பினர். சுவாட்சை அக்குழுவில் இடம்பெறக் கேட்டனர். ஹைதர் அலியுடன் சீரங்கப்பட்டணத்தில் பலமுறை பேச்சு வார்த்தை நடத்தியும், அது தோல்வியில் முடிந்தது. பிரித்தானியர் விரும்பிய அமைதி ஏற்படவில்லை.[13] அதன் பின்னர் தஞ்சாவூர் அரசரின் நிர்வாகத்தில் குழப்பமும், சீர்கேடும் ஏற்பட்ட போது, பிரித்தானியர் சுவாட்சையே தஞ்சாவூர் அரசின் நிர்வாக அதிகாரியாக அமர்த்தினர். பிரித்தானிய வணிகக் குழுவுடன் சுவாட்ஸ் வைத்திருந்த இத்தகைய உறவு அவருடைய அருள்பணிக்கு உதவியது. அவ்வணிகக்குழு அதிகாரப்பூர்வமாக கிறிஸ்தவ நற்செய்தி விரிவாக்கப்பணிக்கு உதவும் எண்ணத்தில் இல்லை என் றாலும், தன்னுடைய நன்மையைக் கருதி சுவாட்சுக்கு உதவியது. தென்னிந்தியாவில் பணியாற்றிய ஜெர்மன் லூத்தரன் அருள்பணியரை அவ்வணிகக்குழு கனிவுடன் நடத்தியது. எடுத்துக்காட்டு: ஸ்வீடன் நாட்டு அருள்தொண்டர் ஜான் கீர்ணாண்டர்.

சுவாட்சின் பணியைப் பாராட்டிய, அவர் மேல் நன்மதிப்பும், மரியாதையும் வைத் திருந்த டேனிஷ் வணிகக் குழுவின் அதிகாரிகளுள் ஒருவர் கர்னல் பீ ( Colonel Bie ) ஆவார். எனவே அவர் அருள்தொண்டரின் ஆதரவாளர் ஆனார். செராம்பூரில் அவர் ஆளுநராக இருந்தபோது, பிரித்தானிய வணிகக் குழுவினால் கல்கத்தாவில் கி.பி.1799இல் கரையிறங்க அனுமதி மறுக்கப்பட்ட, பிரித்தானிய பாப்திஸ்து அருள்தொண்டர் ஜாசுவா மார்ஷ்மென், வில்லியம் வார்ட் அன்னோர் குழுவினருக்கு செராம்பூரில் கரையிறங்கவும், தங்கவும் அனுமதி வழங்கிய துடன், அவர்களுக்குப், பாதுகாவலும் அளிக்க முன்வந்தார். அவர்களை வரவேற் கவும் செய்தார். தன்னுடைய செயலுக்கு சுவாட்சின்மீதும், அவர் அருள்பணி மீதும் தனக்கிருந்த நன்மதிப்பே காரணம் என அவர் விவரித்ததாகக் கூறப்படு கிறது. கர்னல் பீயுடைய இசைவுடன் பிரித்தானிய பாப்திஸ்து அருள்தொண்டர்கள் வில்லியம் கேரியைச் செராம்பூரில் தம்முடன் இருக்குமாறு அழைத்துக்கொண் டனர். இவ்வாறாகத்தான் செராம்பூர் அருள்பணி தொடங்கப்பட்டது. கர்னல் பீ செராம்பூரில் இல்லாமல் இருந்திருந்தால் பிரித்தானிய பாப்திஸ்து அருள்தொண் டர்கள் தாங்கள் வந்த நோக்கத்தை நிறைவேற்றியிருக்க முடியாது என உறுதி யாகக் கூறலாம். அதிகாரப்பூர்வமாக டேனிஷ் வணிகக் குழு நற்செய்திப்பணிக்கு ஆதரவு வழங்கிடவில்லை எனினும், அதிலிருந்த கர்னல் பீ போன்ற அதிகாரிகள் அதற்கு ஆதரவு தந்தனர் என்பதை இது சுட்டிக்காட்டுகிறது.

### (இ) பிரித்தானியர்:

பிரித்தானிய கிழக்கிந்திய வணிகக் கம்பெனி (பி.கி.வ.க) ஒரு தனியார் வணிகக் குழு ஆகும். பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே அது இந்தியா வுடன் வணிக உறவில் இருந்தது. இங்கிலாந்து பாராளுமன்றம் வழங்கிய தனி உரிமைப்பத்திரத்தின் கீழ் (சாசனம்) அமைந்த வணிக நிறுவனம் அது. அந்த தனி உரிமைப் பத்திரம் இருபது ஆண்டுகளுக்கொருமுறை புதுப்பிக்கப்படவேண்டும். பி.கி.வ.க. இந்தியாவில் வணிகம் செய்ய முழுமுதல் உரிமையைப் பெற்றிருந்தது. இதனை ஆட்சிக்குழு உறுப்பினர் கொண்ட வாரியம் ஆளுகை செய்தது. இலாபம் ஈட்டுவது ஒன்றே இதன் தலையாய நோக்கமாக இருந்த காரணத்தினால், குறைந் தது அதன் தொடக்கக் காலத்தில், தன் ஆளுகையின் கீழ் இருந்த இடங்களில் கிறிஸ்தவ அருள்பணியர் பணி செய்வதைத் தடை செய்திருந்தது. அருள்பணியர் தமது கிறிஸ்தவ நற்செய்திப் பரப்பு செயல்கள் மூலம் தங்களின் வணிக நோக்கங்களுக்கு இடையூறாக இருப்பர் என்று அக்கம்பெனியின் அதிகாரிகள் அஞ்சினர்.

பி.கி.வ.க. தன் தொடக்க காலத்தில் இந்தியாவின் சில பகுதிகளில் மட்டும் தன் வணிக மையங்களை வைத்திருந்தது. ஆனால் காலம் செல்லச் செல்ல, வணிக ஒப்பந்தங்கள், அமைதி உடன்படிக்கைகள், நிலப்பகுதிகளைத் தங்கள் ஆளுகையின் கீழ் கொணர்தல் போன்றவற்றின் வழி தன் எல்லையை விரிவுபடுத்தியது. கி.பி.1757இல் நடைப்பெற்ற பிளாசி போரின் விளைவாக பி.கி.வ.க. தன் ஆட்சியை இந்தியாவில் நிறுவியது. கல்கத்தாவைத் தன் ஆட்சியின் தலைமையிடமாக வைத்துக்கொண்டது. கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிக்குள் பி.கி.வ.க.யின் ஆட்சி, வங்காளம், சென்னை, பம்பாய் ஆகிய மூன்று மாநிலங்களில் உறுதியாக நிறுவப்பட்டது. வணிக நிறுவனமாக வந்த பி.கி.வ.கம்பெனி குடியேற்ற அரசாக மாறியது.

தன் ஆட்சிக்குட்பட்ட எல்லைகளைக் காக்க பி.கி.வ.கம்பெனி படைகளை வைத்திருந்தது. இந்தியாவில் இருந்த பிரித்தானிய வணிக சமுதாயத்தினருக் கும், படைவீரர்களுக்கும் ஆன்மிகப்பணி ஆற்ற இராணுவ ஆயர்கள் (Military Chaplains ) இருந்தனர். இவர்களை பி.கி.வ.கம்பெனியே பணியில் அமர்த்தியது / பணிக்குத் தெரிவுசெய்தது. எனினும் அத்தகையோர் இங்கிலாந்து / ஆங்கிலிக் கன் திருச்சபையினால் அருள்பொழிவு பெற்றோராகவே இருந்தனர். அத்தகைய இராணுவ ஆயர்கள் இந்தியாவில் இருந்த பிரித்தானிய சமுதாயத்தினரிடமும், பிரித்தானிய அதிகாரிகளின் இல்லங்களில் சமையல் வேலை, தோட்ட வேலை போன்றப் பணிகளைச் செய்த இந்தியரிடத்தும் மட்டுமே தம் பணியைச் செய்ய வரையறுத்திருந்தனர். கி.பி.1698இல் பி.கி.வ.கம்பெனி வெளியிட்ட சாசனத்தின் படி இராணுவ ஆயர்கள் "இந்தியா வந்த ஓராண்டுக்குள் போர்த்துக்கீசிய மொழியைக் கற்றிருக்கவேண்டும். எங்கு தங்கி இருக்கின்றனரோ அப்பகுதியின் மொழியைக் கற்பதில் தம்மை ஈடுபடுத்திக்கொள்ள வேண்டும். இதன் நோக்கம்

என்னவெனில், கம்பெனியின் அல்லது அதன் உயர் அதிகாரிகளின் பணியாளர் கள் அல்லது அடிமைகளுக்கு புராட்டஸ்டென்ட் சமயத்தைப் போதிக்க வேண்டும் என்பதே...''[14] என்றாலும் இந்த நிபந்தனை ஒருபோதும் நிறைவேற்றப்படவில்லை.

பதினெட்டாம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலிருந்து பிரிட்டன் பல மாற்றங்களைச் சந்தித்தது. அவைகளிலொன்று கிறிஸ்தவ சமுதாயத்திலே ஏற்பட்ட எழுச்சியாகும். பிரிட்டனின் அனைத்துப் பகுதிகளிலும் கிறிஸ்தவ சமய புத்தெழுச்சி ஏற்பட்டது. ஜான் வெஸ்லி, சார்ல்ஸ் வெஸ்லி, ஜார்ஜ் ஒயிட்பீல்ட் போன்றோர் அக்காலத்தில் செயல்பட்ட சமயப்பரப்பாளர்கள். இதனால் இவ்வேளையில் நற்செய்திப்பணியின் மேல் ஆர்வம் வளர்ந்தது. 'இவாஞ்சலிக்கல்' என்றழைக்கப்பட்ட ஒரு குழுவினர் அருள்பணியின் அவசியத்திற்கு முன்நின்று ஊக்கமளித்தனர். அவர்களின் கவனம் இந்தியாவின் மீது திரும்பியது. அக்காலக்கட்டத்தில் இந்தியாவில் இராணுவ ஆயராகப் பணியாற்றிய சிலர், குறிப்பாக டேவிட் பிரௌன், அத்தகைய ஆர் வத்தைத் தூண்டக் கருவிகளாயிருந்தனர். அச்சூழலில் கி.பி.1793இல் பி.கி.வ. கம்பெனியின் தனியுரிமை சாசனம் புதுப்பித்தலுக்கு மக்களவைக்கு வந்தது. இவாஞ்சலிக்கல் குழுவினைச் சேர்ந்தவரும், கிளாப்ஹாம் என்னுமிடத்திலிருந்த கிறிஸ்தவக் குழுவின் அங்கத்தினரும், பிரித்தானியப் பாராளுமன்றத்தின் அங்கத்தினருமான வில்லியம் வில்பர்போர்ஸ் என்பவர் கம்பெனியின் சாசனத் தில் பின்வரும் விதிப்பிரிவைச் சேர்த்திட நாடாளுமன்றத்தில் முன்வைத்தார். "இந்தியாவில் பிரித்தானிய ஆட்சியின் பகுதிகளில் வசிக்கும் குடிமக்களின் உற் சாகத்தையும் மகிழ்ச்சியையும் விரிவாக்கம் செய்ய நேர்மையான, விவேகமான வழிமுறைகளை ஊக்குவிப்பது பிரித்தானிய சட்டமன்றத்தின் சிறப்பான, கட்டுப் பாட்டுக் கடமையாகும். அம்மக்களின் (இந்தியரின்) சமய, அற வாழ்க்கையில் முன்னேற்றம் ஏற்படவும், அவர்கள், படிப்படியாக பயனுள்ள அறிவாற்றலில் முன்னேறவும் ஏற்ற நடவடிக்கைகளை இம்மன்றம் எடுக்கவேண்டும். இத்தகைய குறிக்கோளை நிறைவேற்றக்கூடிய, பயிற்சி பெற்ற, பொருத்தமான நபர்களைப் பள்ளி ஆசிரியர்களாக அல்லது நற்செய்திப்பணியாளர்களாக அல்லது பிறவகைப் பணியாளர்களாகப் பணியாற்ற, தேவைக்கேற்ப அவ்வப்பொழுது தெரிவுசெய்து, அனுப்பிவைக்க கம்பெனியின் இயக்குநர்களுக்கு அதிகாரமும், ஆணையும் அளிப்பது எனத் தீர்மானிப்போம்"[15] ஆனால் பிரித்தானிய நாடாளு மன்றம் அதனை ஏற்காத காரணத்தினால், வில்லியம் வில்பர்போர்சின் சாசனத் திருத்த ஆலோசனை தோல்வியுற்றது; எனவே பி.கி.வ.கம்பெனியின் சாசனத்தில் அதனைச் சேர்க்க இயலவில்லை.

மேற்கூறப்பட்டதின் விளைவாக, இந்தியாவில் இங்கும் அங்கும் கிறிஸ்தவ அருள் பணியர் பெற்றுவந்த ஆதரவை பிரித்தானிய கம்பெனி விலக்கிக் கொண்டது. எந்த ஒரு அருள்தொண்டரும் இந்தியாவிற்குள் நுழைவதை அது எதிர்த்தது.

அச்சூழலில் கி.பி.1793இல் வந்தவர்தான் பிரித்தானிய பாப்திஸ்து நற்செய்தி யாளர் வில்லியம் கேரி. இந்தியாவில் காலடி எடுத்து வைக்க அவருக்கு அனுமதி வழங்கப்பட்டிருந்தாலும், நற்செய்திப்பணி ஆற்றிட அவருக்குத் தடை விதிக்கப்பட் டிருந்தது. எனவே அவர் மதினபதி என்னுமிடம் சென்று, ஒரு நீல சாயத் தொழிற் சாலையில் பணிசெய்யத் தொடங்கினார். அவருடைய சங்கத்தைச் சேர்ந்த ஜாஷ்வா மார்ஸ்மேன், வில்லியம் வார்ட் என்பவர்கள் கி.பி.1799இல் இந்தி யாவிற்கு வந்தபோது, அவர்கள் கல்கத்தாவில் கரையிறங்க அனுமதிக்கப்பட வில்லை. பிரித்தானியக் கம்பெனி நற்செய்திப் பணியாளர்களுக்கு எதிரியாக மாறியது. கி.பி.1806இல் வேலூரில் நடைபெற்ற படை வீரர்களின் கலகம், கம்பெனி அரசு நற்செய்திப் பணியாளர்கள் மேல் வெறுப்புகொள்ளக் காரணமாக அமைந்தது. வேலூரில் படைவீரர் கிளர்ந்தெழ நற்செய்திப் பணியாளர்களே காரணர் என்பது கம்பெனி அரசின் குற்றச்சாட்டாக இருந்தது. என்றாலும் உண் மையில் வேலூரிலோ அதன் சுற்றுப்புறத்திலோ எந்தவொரு நற்செய்திப்பணி யாளரும் அப்போது இல்லை. கம்பெனியின் எல்லைக்குட்பட்ட இடங்களில், தங்களின் அனுமதியின்றி எந்தவொரு ஐரோப்பியரையும் அனுமதித்ததில்லை யென்பதே உண்மை.

இதற்கிடையே, இந்தியாவைப் பிரித்தானியர் ஆளவேண்டுமென்றால், இந்திய மக்களின் ஆன்மிக நலனில் அக்கறை செலுத்த வேண்டும் என்னும் கருத்து, பி.கி.வி.கம்பெனியின் சில அதிகாரிகள் உட்பட்ட பிரித்தானிய பொது மக்களிடையே எழுந்தது. இக்கருத்திற்கு வரவர ஆதரவு பெருகியது. கம்பெனியின் வங்காள ஆட்சிக்குழுவின் அங்கத்தினராகவும், பின்பு பி.கி.வ.கம்பெனியின் ஒரு இயக் குனராகவும் இருந்த சார்ல்ஸ் கிராண்ட் இந்தியாவில் நற்செய்திப் பணியாளர் களின் பணிகளுக்கு ஆதரவு அளித்தோரில் முக்கியமான ஒருவர். வங்காளத்தில் இருந்த அரசாங்க அலுவலர்களில் ஒரு சிறு குழுவினரின் ஆதரவு அவருக்கு இருந்தது. அதே போல் பி.கி.வி.கம்பெனியின் இராணுவ ஆயர்களாக இருந்தவர் களில் இவாஞ்சலிக்கல் ஆயர்கள் என அழைக்கப்பெற்ற, டேவிட் பிரௌன், கிளாடியஸ் புக்கனன், தானியேல் கோரி, ஹென்றி மார்டின், தாமஸ் டி. தோமாசன்[16] என்பவர்களின் ஆதரவும் கிடைத்தது. இவர்கள் நற்செய்திப்பணியை பி.கி.வி. கம்பெனியின் சாசனத்தில் சேர்த்திட முயற்சி மேற்கொண்டனர்; அத்துடன், பிரித்தானிய பாராளுமன்றத்திற்கு உள்ளேயும், வெளியேயும் தங்களின் முயற்சிக்கு ஆதரவு திரட்டவும் முற்பட்டனர். அதற்காக உத்தேசமாக 850 ஆதரவு மடல்கள் பிரித்தானிய பொது மக்களிடமிருந்து பெறப்பட்டு, பாராளுமன்றத்தில் சமர்பிக்கப்பட்டன. இதன் விளைவாக பி.கி.வ.கம்பெனியின் சாசனம் புதுப்பிக்கப் பட பாராளுமன்றத்தில் கி.பி.1813இல் கொணரப்பட்டபொழுது, மேற்கூறப்பட்டவர் களின் முயற்சி வெற்றி பெற்றது. சாசனத்தில் அவர்கள் சேர்க்க விரும்பிய விதி முறைகள் சேர்க்கப்பட்டன. இதற்கிடையே, வில்லியம் வில்பர்போர்ஸ் போன்ற

இவஞ்சலிக்கல் கிறிஸ்தவர்களின் முயற்சியினால் பிரித்தானிய குடியேற்றங் களில் அடிமை வணிகம் கி.பி. 1807இல் தடை செய்யப்பட்டது.

கி.பி.1813இல் பி.கி.வ.கம்பெனியின் சாசனம் புதுபிக்கப்பட பிரித்தானிய பராளு மன்றத்தில் சமர்பிக்கப்பட்டது. இவஞ்சலிக்கல் கிறிஸ்தவர்களின் பிரேரனைகள் கம்பெனியின் சாசனத்தில் சேர்க்கப்பட 23 சூன் 1813 இல் அரசாங்கத்தின் ஒப்பு தலைப் பெற்றன.[17] அதில் இடம் பெற்றிருந்த நற்செய்திப்பணி குறித்த பிரிவுகள் 33 முதல் 39 வரை, 41 – 42 என்பவையாகும். அதில் 33ஆம் பிரிவு: "இந்தியாவில் பிரித்தானிய ஆளுகையின் கீழ் இருக்கும் உள் நாட்டினரின் ஆர்வத்தையும், மகிழ்ச்சியையும் ஊக்குவிப்பது இந்நாட்டின் கடமையாகும். அவர்களிடையே பயன்தரும் அறிவையும், சமய மேம்பாட்டையும் அறிமுகம் செய்யக்கூடிய முயற்சிகளைப் பின்பற்ற நடவடிக்கை எடுக்க வேண்டும்.... எனவே... அதுவரை இந்திய மக்கள் சார்ந்திருந்த பிரித்தானிய அரசின் கொள்கையான சமய நடுநிலைக்கொள்கை தொடர்ந்து பின்பற்றப்பட வேண்டும், தங்கள் சமயத்தைத் தொடர்ந்து பின்பற்றும் உரிமை, தடையின்றி பேணப்பட வேண்டும். மேற்கூறப் பட்ட காரணத்திற்காக இந்தியா செல்ல விரும்புவோருக்கும் அல்லது அதற்காக அங்கு தங்கியிருக்க விரும்புவோருக்கும் வழிவகையும், அனுமதியும் வழங்க வேண்டும்.."[18] இந்த விதிப்பிரிவு நற்செய்திப்பணியாளரை மட்டுமின்றி பரந்துபட்ட மக்களைக் குறிப்பதாக இருந்தது. இதன் அடிப்படையில் பிரித்தானியாவை (இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, அயர்லாந்து, வேல்ஸ்) சார்ந்த அருள்பணிச் சங்கங்கள் இந்தியாவில் குறிப்பாக பிரித்தானிய கம்பெனியின் ஆட்சியின் கீழ் இருந்த மூன்று மாநிலங்களிலும் தங்களது நற்செய்திப் பணிகளைத் தொடங்கின.

அச்சாசனத்தின் 43ஆம் பிரிவுப்படி, "இலக்கியத்தைச் செம்மைபடுத்தவும், மறுமலர்ச்சி அடையச் செய்யவும், இந்தியாவின் கல்வி அறிவு பெற்ற மக்களை ஊக்கமடையச் செய்யவும், பிரித்தானிய ஆளுகைக்குட்பட்ட இந்தியப் பகுதிகளில் வாழும் மக்களிடையே அறிவியல் அறிவை அறிமுகம் செய்து, அதனை வளர்க் கவும்"[19] ஆண்டொன்றுக்குக் குறைந்தது ரூ. ஒரு லட்சத்தை ஒதுக்க இந்தியாவில் இருந்த பிரித்தானிய கவர்னர் ஜெனரல் கடமைப்பட்டிருந்தார். 49ஆம் பிரிவு "கிழக்கிந்தியத் தீவுகளிலும், அதன் பகுதிகளிலும் இருந்த பிரித்தானிய ஆட்சிக் குட்பட்ட அனைத்துப் பகுதிகளுக்குமென ஒரு பேராயத்தை" நிறுவும் பொறுப்பை வழங்கியது. அத்துடன் மூன்று தலைமை ஆயர்களை மாநிலத்திற்கு ஒருவராக நியமிக்கவும், இந்தியாவிலிருந்து கிடைக்கும் வருமானத்திலிருந்து ஆண்டொன் றுக்குப், பேராயருக்கு ஐயாயிரம் பிரித்தானிய பவுண்டுகளும், தலைமை ஆயர் ஒவ்வொருவருக்கும் இரண்டாயிரம் பிரித்தானிய பவுண்டுகளும் ஊதியமாக வழங்கவும் அது குறிப்பிட்டது.[20] இந்தியாவில் பணியாற்றிக் கொண்டிருந்த பிரித்தானியரின் ஆன்மிகத் தேவையை நிறைவு செய்யவே இந்தியாவில் இங்கிலாந்து திருச்சபையின் பேராயம் அமைக்கப்பட்டது.

பிரித்தானிய அருள்தொண்டர்கள் தங்களுடைய நற்செய்திப்பணியை முனைப் புடன் தொடங்கினர். அவர்கள் தங்கள் பணிகளைச் சிறு நகர்களிலும், பெரு நகர்களிலும் மட்டுமின்றி, கிராமங்களிலும், பழங்குடியினர் வாழ்ந்த பகுதிகளிலும் செய்யத் தொடங்கினர். தாங்கள் பணியாற்றச் சென்ற மக்களுடன் தொடர்பு கொள்ளும் நோக்கோடு அவர்களின் மொழிகளைக் கற்க முற்பட்டனர். கி.பி.1813 சாசனம் பி.கி.வி.கம்பெனி கல்விப்பணிக்காக ஒவ்வொரு ஆண்டும் ரூ. ஒரு லட்சம் ஒதுக்க வேண்டும் என்று விதித்திருந்த விதி அருள்பணியருக்கும் பயன ளித்தது. குறிப்பாக அருள்பணியர் தங்கள் பணிக்களங்களில் கல்விக்கூடங் களைக் கட்டி, கல்விப்பணியைத் தொடங்கிய சூழலில் அது மிகுந்த வரப்பிரசாத மாயிருந்தது. தொடக்கத்தில் அருள்பணியர் தொடக்கக் கல்வியில் கவனம் செலுத்தினர். கி.பி.1813 முதல் 1833 வரையிலான காலத்தில் பிரித்தானிய அருள் பணி சங்கங்கள் இந்திய மொழிகளில் திருமறையை மொழியாக்கம் செய்வதில் ஈடுபட்டதுடன், அந்த மொழிகளில் செய்தித்தாள்களையும், செய்திமடல்களையும், அகராதிகளையும் அச்சிட்டு வெளியிட முற்பட்டன. மேலும் இந்தியாவின் முக்கிய மொழிகளில் மொழிப்பேரகராதிகளை (Lexicon) வெளிக்கொணரவும் முயன்றனர். அருள்பணியர் தாங்கள் பணியாற்றிய மக்களிடையே தங்கினர், எனவே அவர் களுடைய மொழிகளை அறிந்தனர், கலாச்சாரத்தையும், பழக்கவழக்கங்களை யும் புரிந்து கொண்டனர். இதனால் குடியேற்ற அரசு நற்செய்திப்பணியாளர் களின் பணியை வேறு கண்ணோட்டத்தில் பார்க்கத் தொடங்கியது. இந்தியா போன்ற குடியேற்ற நாட்டின் மக்களின் வாழ்வு உயர்வடையச் செய்கின்ற தன் பணியில், அருள்தொண்டர்களை உடன் பணியாளர்களாகக் கண்டது. மேற் கத்திய அரசு தன் பண்பாடு, அரசியல், பொருளாதாரத் தாக்கங்களை உள்ளூர் மக்களிடையே ஏற்படுத்த சிறந்த கருவிகளாக அருள்பணியரைத் தவிர யார் இருக்கக்கூடும் எனக் கருதியது. இவ்வாறாக "கனிவு நிறை குடியேற்ற ஆதிக்கம்" எனும் கொள்கை தொடங்கியது.[21] அருள்தொண்டர்களின் கல்விப்பணி பொது வாக இந்திய மக்களிடையே நீண்ட காலத் தாக்கங்களை ஏற்படுத்தியது. அது அவர்களுக்கு எழுதப் படிக்க மட்டுமின்றி, நாட்டுப்பற்று என்னும் விதையையும் விதைத்தது. அது இந்தியாவில் ஒரு மறுமலர்ச்சியைத் தொடங்கிவைத்தது. சமுதாயத்தில் சீர்திருத்தங்கள் ஏற்பட வழி அமைத்தது. அருள்தொண்டர்கள் தங்களின் கல்விக்கூடங்களைச் சாதி, சமய, நிற வேறுபாடுகளைக் கடந்தும் ஏழை, செல்வந்தர் என்கின்ற வர்க்க முரண்களைக் கடந்தும், அனைவருக்கும் கல்வி என்னும் கொள்கையுடன் நடத்திய காரணத்தினால், பல நிலைகளில் புரட் சிக்கு வழி வகுத்தது. கல்வி, மருத்துவம், இலக்கியம், சமுதாயச் சீர்திருத்தம் ஆகிய துறைகளில் அருள்பணியர் ஆற்றியப் பணிகள் பிரித்தானிய ஆட்சியாளருக்கு இந்தியரிடையே ஆதரவாளரை உருவாக்கின. வில்லியம் கேரியின், சதி / உடன் கட்டை ஏறும் பழக்கத்தை ஒழிக்க எடுத்த நடவடிக்கைகளும், அலெக்சாந்தர் டஃப்பின், ஆங்கிலத்தை உயர் கல்வியின் பயிற்று மொழியாக அறிமுகம்

செய்ததும் அவ்விலக்கை நோக்கி நடத்தப்பட்ட குறிப்பிடக்கூடிய செயல்களாகும்.

நாடளுமன்ற விதிமுறைப்படி, பி.கி.வி.கம்பெனியின் சாசனம் கி.பி.1833இல் புதுப்பிக்கப்பட வேண்டியிருந்தது. இதற்கு முன்னரே, குடியேற்ற அரசு தன்னு டைய பகுதி மக்களை உயர்த்தும் பணித்திட்டத்திற்கு, அருள்பணியர்கள் பெரும் உதவியாக இருப்பதாக உணர்ந்தது. எனவே கி.பி.1833 சாசனத்திருத்தம் இந்தியக் கிறிஸ்தவ வரலாற்றில் குறிப்பிடத்தக்க மாற்றங்களை ஏற்படுத்திய சில விதித்தொகுப்புகளை உடையதாக இருந்தது. அதிலொன்று கூறியதாவது: “இப்போது கல்கத்தாவில் அமைந்திருக்கும் பேராயம் பரந்த பரப்பளவைக் கொண்டதாக உள்ளது. அதன் பேராயர் தன் உடல் நலத்துக்கும், வாழ்விற்கும் ஊறு நேராதவாறு தம் அலுவல் கடமைகளைச் செவ்வனே நிறைவேற்ற ஏதுவாக இல்லை... அதற்கான வசதியளிக்கும் வகையில்... கல்கத்தா பேராயர் மெட்ரோ பாலிட்டன் என அறியப்படுவார்.” இவ்விதித் தொகுப்பின் அடிப்படையில் சென்னை யிலும், பம்பாயிலும் பேராயங்கள் அமைக்கக் கோரப்பட்டது.[22] மற்றோரு விதி, உலகின் எந்தப் பகுதியைச் சேர்ந்தவரும் எவ்வகைப் பணியில் ஈடுபட்டிருப்பவராக இருப்பினும் இந்தியாவினுள் நுழைய அனுமதி வழங்கியது. இதன் விளைவாக கி.பி.1833இல் பிரித்தானியர் அல்லாத அருள்பணிச் சங்கங்கள் இந்தியாவினுள் நற்செய்திப்பணி முயற்சிகளைத் தொடங்கின.[23]

கி.பி.1833 சாசனம் இந்தியாவின் நிர்வாக அமைப்பிலும் மாற்றம் கொணர்ந்தது. ‘வணிக கம்பெனி’ யாக இருந்த பி.கி.வ.கம்பெனி ஒரு ‘ஆட்சி அமைப்பாக’ மாற்றம் பெற்றது. வணிகம் செய்வதற்கான அதன் தனி உரிமையை, சாசனம் மட்டுப்படுத்தியது. இதனால் பிரித்தானிய நாடாளுமன்றம் இந்தியா போன்ற குடியேற்ற நாடுகளை நேரடியாக ஆளுகை செய்வதற்கு வழி அமைத்தது. இது கி.பி.1858 இல் இந்தியா பிரித்தானிய முடியாட்சியின் கீழ் வருவதற்கு இடமளித்தது. கி.பி.1858 ஆட்சி மாற்றத்திற்கான பிறிதொரு காரணமும் உண்டு. அது கி.பி.1857இல் நிகழ்ந்த முதல் இந்திய விடுதலைப் போராட்டம் அல்லது சிப்பாய் கலகம் ஆகும். இதனை ‘ 1857 எழுச்சி ’ எனக் கூறுவது பொருத்தமாக இருக்கும், ஏனெனில் அது படைவீரரிடையே மட்டுமின்றி பிற இந்தியரிடையேயும் ஏற்பட்டது. எனவே இவ்விடத்தில் 1857 எழுச்சிக்குக் காரணமாக அமைந்த பின்னணியத்தை ஓரிரு வாக்கியங்களில் தருவது பொருத்தமாகும்.

கிறிஸ்தவ அருள்பணியரின் இந்திய வருகையும், அவர்களின் பணிகளும் இந்திய சமுதாயத்தில் குறிப்பிடத்தக்க மாற்றங்களைக் கொணர்ந்தன. கிறிஸ்தவக் கல்விப்பணி இந்திய மக்களின் சமுதாய அமைப்பிலும், உலகத்தைப் பற்றிய பார்வையிலும் மாற்றங்கள் ஏற்படுத்தியக் கருவியாக இருந்தது. அருள்பணியா ளர்கள் செய்த இலக்கியப்பணிகளான உள்ளூர் மொழிகளில் அகராதி தொகுத் தல், இலக்கண நூல்கள் அமைத்தல், உள்ளூர் மொழிகளிலும், ஆங்கிலத்திலும் செய்தித்தாள்கள் வெளியிடல் போன்றவை இந்தியாவில் மறுமலர்ச்சியைத்

தோற்றுவித்தன. ஆங்கில மொழியை உயர் கல்விக்கான பயிற்று மொழியாக அறிமுகம் செய்த அலெக்சாந்தர் டஃப்பின் திட்டம் பொதுவாக இந்தியரிடையே நல்ல வரவேற்பைப் பெற்றது. குறிப்பாக இராஜாராம் மோகன்ராய் இதனைப் பெரிதும் வரவேற்றார். இதன் விளைவாக இனிமுதற்கொண்டு பிரித்தானிய அரசின் கல்வி உதவித்தொகை ஆங்கில மொழி வழி கல்விக்கே என்னும் தன் கொள்கையை அறிமுகம் செய்தது. இது கி.பி.1835இல் தாமஸ் பேபிங்டன் மெக்காலே வகுத்த கல்வித் திட்டத்தின் விளைவாக ஏற்பட்டது.[24] சர் சார்ல்ஸ் உட் என்பவரின் தலைமையில் வெளியிடப்பட்ட 'உட் அறிக்கை' என்பது கி.பி.1854இல் பிரித்தானிய அரசின் கல்வித் திட்டத்தை முறைப்படுத்தியது. அதன்படி தொடக்க நிலைக் கல்வி தாய்மொழியிலும், உயர் கல்வி ஆங்கில மொழியிலும் என்னும் நாடுதழுவிய கல்விமுறைமை அமுல்படுத்தப்பட்டது. அதே வேளையில் அரசாங்க கல்வி உதவித்தொகை முறையும் அறிமுகமானது. வெகு விரைவில், கி.பி.1857இல் மூன்று மாநிலங்களான கல்கத்தா, சென்னை, பம்பாயில் பல்கலைக்கழகங்கள் அமைக்கப்பட்டன. ஆங்கிலக்கல்வி முறை அறிமுகப் படுத்தப்பட்டதினால் பல விளைவுகளும், பாதிப்புகளும் ஏற்பட்டன. கல்வி அறிவு, நீதி, சுதந்திரம் குறித்த தாகத்தில் வளர்ச்சி ஏற்பட்டது. இவை சமுதாய சீர்திருத்தங்களுக்கு வழிவகுத்தன.

கி.பி.1854இல் அறிமுகப்படுத்தப்பட்ட அஞ்சல் துறையும், தொடர்வண்டித் துறை யும் (இருப்புப் பாதைத் துறையும்) தொடர்புத்துறையிலும், அனைத்திந்திய உணர் விலும் வளர்ச்சியை ஏற்படுத்தின. குறிப்பாக தொடர்வண்டித் துறை வட்டாரத் தடைகளைத் தகர்த்தது. அத்துடன் அது "சாதிய தவறான எண்ணங்களைத் தகர்த்தது, ஏனெனில் சாதிய அடிப்படையிலல்ல, செலுத்தப்படும் பயணக்கட்ட ணத்திற்கேற்ப வகுப்பு வாரியாகப் பயணிகளுக்கு இருக்கைகள் தரப்பட்டன."[25]

ஆங்கிலக்கல்வி முறை, தொடர் வண்டித்துறை, அஞ்சல் துறை ஆகியவை இந்தி யாவில் மறுமலர்ச்சியைக் கொணர்ந்த போதிலும், எதிர் விளைவுகளையும் ஏற்படுத்தின. பிரித்தானிய ஆட்சிக்குப் பரவலான எதிர்ப்பு இருந்தது, வெறுப்பும் வளர்ந்தது. தன் எல்லைகளை விரிவுபடுத்திட பிரித்தானிய அரசாங்கம் பின் பற்றிய முயற்சிகளினால் பாதிக்கப்பட்ட இந்திய அரச குலத்தினர் மத்தியில் அதிருப்தி நிலவியது. பெரிய அல்லது சிறிய அரசர்கள் ஆண்டுவந்த இந்தியாவின் பல பகுதிகளை ஏதாவதொரு காரணத்தின் மூலம் தன் ஆட்சியின் கீழ் கொண்டு வந்து, அங்கு பிரித்தானிய அரசின் 'ரெசிடென்ட்' என அழைக்கப்பட்ட பிரதிநிதிகளை நியமித்தது. இயல்பாகவே இது வெறுப்பைத் தூண்டியது. அரசின் வேளாண்மைக் கொள்கை பெருநிலக்கிழாருக்கும், ஜமீன்தாருக்கும் ஆதாரவாக இருந்ததால், சாதாரண விவசாயிகளுக்கு மனக்குறைவை ஏற்படுத்தியது. இந்தியத் தொழிற் துறைகள், தொழிற்சாலைகள் பாதுகாக்கப்படவில்லை. பொருளாதாரச் சுரண் டலும் இருந்தது. இந்தியாவிலிருந்து பிரித்தானியாவுக்குக் கொண்டுபோகப்பட்ட

கச்சாப்பொருள்கள், அவைகளால் செய்யப்பட்ட பொருள்களாக இந்தியாவிற்குள் இறக்குமதி செய்யப்பட்டதால், இந்தியத் தொழிற்சாலைகள் நலிவுற்றன. எனவே தொழில் அதிபர்கள் மத்தியில் அதிருப்தி இருந்தது. அரசும், நற்செய்திப்பரப் பாளர்களும் கொணர்ந்த சமுதாயச் சீர்திருத்தங்கள் வைதீக இந்துக்களிடையே மனக்கொதிப்பை ஏற்படுத்தின. "பத்தொன்பதாம் நூற்றாண்டின் முதல் அரைப் பகுதியில் கிறிஸ்தவ அருள்பணியருள் சமுதாயச் செயல்வீரர் இந்திய சமுதா யத்தில் அறநிலை வாழ்வில் சீர்திருத்தம் கொணர முற்பட்டனர்; அத்துடன் இந்து சமுதாயத்தின் கொடுமையான சக்தியினாலும், மிகவும் பழமையான மூட நம்பிக் கைகளினாலும் கட்டப்பட்டிருந்த மக்களை விடுவிக்க விரும்பினர். இவைகளுக்கு மேற்கத்திய மிதவாதிகளின் ஆதரவு இருந்தது."[26] இதற்கு சிறந்த முன்மாதிரியாகத் திகழ்ந்தவர்களில் ஒருவர் பிரித்தானிய பாப்திஸ்து அருள்பணியர் வில்லியம் கேரி. இந்தியாவில் பிரித்தானியரின் ஆட்சிக்குட்பட்ட எல்லைகளில் சதி என சுருக்கமாக அழைக்கப்பட்ட 'சதிசஹகமன' என்னும் விதவைகள் எரிப்பு / உடன் கட்டை ஏறல் முறையை ஒழிப்பதற்குக் கருவியாகத் திகழ்ந்தார். அவரது தளராத முயற்சியினால் பிரித்தானிய கவர்னர் ஜெனரல் வில்லியம் பெண்டிங் கி.பி.1829இல் சதி ஒழிப்பு ஆணையைப் பிறப்பித்தார்.[27] அந்த ஆணையை வங்காளத்தில் இருந்த இந்தியர் குழு ஒன்று எதிர்த்தது.[28] இந்து சமயம் குறித்து அருள்பணியர் தெரிவித்த கருத்துக்களும், சிலை வணக்கத்தை நிந்தித்து பேசியமையும் வைதீக இந்துக்கள் வெறுப்படையச் செய்தன, பிரம்மோ சமாஜம் போன்றவைகள் தோன்ற இவ்வித வெறுப்புணர்வுகளே காரணம் எனலாம். அனைத்து மனக்குறைவுகளுக்கும் மகுடம் போன்று இருந்ததே இந்தியப் படை வீரரிடையே இருந்த கசப்புணர்வு. இதற்குப் பல காரணங்கள் இருந்தன. இந்தியப் படை வீரருக்கும், மேலை நாட்டுப் படைவீரருக்கும் இடையே ஊதியம், ஓய்வூதியம், உணவு பொருள்களின் பங்கீடு ஆகியவற்றில் இருந்த ஏற்றத்தாழ்வு, பிரித்தானிய இராணுவ அதிகாரிகள் இந்தியப் படைவீரரைக் கிறிஸ்தவராகக் கட்டாயப்படுத்துகின்றனர் என்ற ஐயமும், வெடிபொருளில் பயன்படுத்திய விலங்குக் கொழுப்பு பற்றிய எண்ணமும் கிளர்ச்சியைத் தூண்டியது. மேற்கூறப்பட்டுள்ள மனச்சோர்வுகள் கி.பி.1857இல் ஏற்பட்ட சிப்பாய்க் கலகம் ஏற்படக் காரணமாக இருந்தன. ஆனால் பி.கி.வ.கம்பெனி அக்கலகத்திற்கு / எழுச்சிக்கு அருள்பணி யரைக் குறை கூறியது. அதேவேளையில், பிரித்தானியாவிலிருந்த ' இவாஞ்சலிக்கல் ' மக்கள் இந்தியப் படைவீரர் கிறிஸ்தவராக மாறியிருப்பின் பிரித்தானிய அரசுக்கு ஒரு பெருந்திரள் மக்கள் கூட்டம் ஆதரவாளர்களாக எழும்பி இருப்பர் எனக் கருத்துத் தெரிவித்தனர்.

கி.பி.1857 ஏழுச்சி, இந்தியாவை பிரித்தானிய முடியாட்சியின் நேரடிக் கண் காணிப்பின் கீழ் கொண்டுவந்தது. கி.பி.1857 முதல் இந்திய மக்களின் சமயம்,

சமூக அமைப்புகள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றில் பிரித்தானிய அரசு தலை யிடாது என்பது ஏறத்தாழ அரசாங்கத்தின் பொதுக் கொள்கையாகவே இருந்தது. கி.பி.1858இல் இந்தியாவின் ஆட்சிப் பொறுப்பை முழுமையாக ஏற்றுக்கொண்ட விக்டோரியா அரசி ஓர் அதிகாரப்பூர்வ அறிக்கையை வெளியிட்டார், சமய நடுநிலைப்பாட்டை அந்த அரசு அறிக்கை, இந்தியர்களுக்கு உறுதிப்படுத்தியது. கிறிஸ்தவ அருள்பணிக்கு உதவியாக, மதிக்கத்தக்கதாக இருந்த அவ்வறிக்கை யின் ஒரு பகுதியாவது: "நாம் நமது பிற குடி மக்களுக்கு கடமையாற்றக் கடமை உணர்ச்சி இருப்பது போன்றே, இந்தியாவில் இருக்கும் நம்குடி மக்களுக்குக் கடமையாற்ற நாம் கடமைப்பட்டுள்ளோம். அதனை எல்லாம் வல்ல கடவுளின் நல்லாசியுடன் உண்மையாகவும், மனசாட்சியுடனும் நிறைவேற்றுவோம்...... கிறிஸ்தவத்தின் அடிப்படை உண்மையின் மேல் திடமாகச் சார்ந்து, சமயம் தரும் மன அமைதியளிக்கும் தன்மையை, நன்றியுடன் ஏற்கிறோம். எங்களுடைய சமய நம்பிக்கையை நம் குடிமக்கள் எவர்மீதும் திணிப்பது எமது உரிமையும், விருப்பமும் என்பதை முற்றாக மறுக்கிறோம்."[29] இந்த அதிகாரப் பூர்வ அறிக்கை பிரித்தானிய அரசியார் தாம் ஒரு கிறிஸ்தவர் என்பதை அழுத்தமாகத் தெரிவித்த துடன், கிறிஸ்தவர் ஒருவர் தம்மை ஆளுகிறார் என்பதை இந்தியா உணர வேண்டும் என்பதையும் உணர்த்துகிறது.

சமயக் காரியங்களில் நடுநிலை என்ற பிரித்தானிய அரசின் கொள்கை, குடி யேற்றக் கொள்கைக்கும், அருள்பணிக்கும், அல்லது அரசுக்கும், திருச்சபைக் கும் இடையேயான நெருங்கியத் தொடர்பை பெருமளவிற்கு ஓர் முடிவிற்குக் கொணர்ந்தது எனலாம். அருள்பணியரும் அவர்களது நடவடிக்கைகளும் ஒரு சில இடங்களில் சலுகையுடன் நடத்தப்பட்ட எடுத்துக்காட்டுகள் இருந்தபோதும், அந்நிலை நீடித்து நிற்கவில்லை. இந்தியாவில் இருந்த ஆங்கிலிக்கன் திருச்சபை அரசுடன் நெருங்கியத் தொடர்பு கொண்டதாக இருந்தாலும், கி.பி.1927இல் வெளியிடப்பட்ட இந்தியத் திருச்சபைச் சட்டம் (The Indian Church Measure) என்பதின் மூலம் தன்னாட்சி உரிமை பெற்றது.[30] இதற்குக் காரணம் இந்தியாவில் குறிப்பாக முதல் உலகப் போருக்குப் பின் வளரத் தொடங்கிய தேசிய உணர்வு எனலாம்.

சமயத்தை அரசு தன் சொந்த நலனுக்காகப் பயன்படுத்திக் கொள்ளலாமா என்பது தற்போது நாம் சந்திக்கும் வினாவாகும். அரசிடமிருந்து சமயத்தைப் பிரிக்க வேண்டும் எனவும் அரசியல்வாதிகள் தம் சொந்த நலனுக்காகச் சமயத்தை / மதத்தைப் பயன்படுத்தக்கூடாது எனவும், சமய அடிப்படை வாதத்தைத் தூண்டி விடக்கூடாது எனவும் அவ்வப்பொழுது ஆலோசனை கூறப்படக் கேட்கிறோம். அரசு சமய சார்பற்றதாக இருக்க வேண்டும் என்பது அனேகரது விருப்பமாக இருக்கிறது. இது இன்னும் வாதத்திற்குரிய வினாவாகவே இருந்து வருகிறது.

## *End Notes*

[1] David J. Bosch, **Transforming Mission.** p.303.

[2] A Bull is an edict by the Pope.

[3] C.B. Firth, **An Introduction to Indian Church History.** p.50.

[4] **Ibid.** p..51.

[5] **Ibid.** p.146

[6] M.K. Kuriakose, **History of Christianity in India : Source Materials.** pp. 54-55

[7] **Ibid**. pp.55-56.

[8] C.B. Firth, **opcit.** p.105 foot-note.

[9] **Ibid.** p.130

[10] M.K.Kuriakose, **op.cit.** pp.57-59.

[11] C.B.Firth,**op.cit.** p.133.

[12] **Ibid.** p.139.

[13] **Ibid.** p.141.

[14] M.K.Kuriakose, **op.cit.** pp.56-57; Julius Richter, **A History of Missions in India.** p..129.

[15] **Ibid.** p.70.

[16] David Brown, Claudius Buchanan, Daniel Corrie, Henry Martyn, Thomas T. Thomason.

[17] M.E.Gibbs, **The Anglican Church in India, 1600-1970.** p.51.

[18] **Ibid.**

[19] **Ibid.** and M.K. Kuriakose, **opcit.** pp.88-90.

[20] **Ibid.**

[21] 'Benevolent Colonialism', cf. David Bosch, **op.cit.** pp.303-307.

[22] M.E. Gibbs, **op.cit.** p.107.

[23] Julius Richter, **A History of Missions in India.** p.192.

[24] M.K. Kuriakose, **op.cit.** pp.122-125.

[25] M.E.Gibbs, **op.cit.** p.206.

[26] H,C.Perumalil & E.R.Hambye (eds) **Christianity in India : A History in Ecumenical Perspective.** p.273.

[27] C.B. Firth, **op.cit.** pp. 155.

[28] M.K.Kuriakose, **op.cit.** pp.115-118.

[29] Julius Richter, **op.cit.** p.208.

[30] M.E.Gibb, **op.cit.** p.355.

இயல் மூன்று

# கல்விப்பணியும், கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்களும்

பண்டைய இந்தியாவில் நாளந்தா, தட்சசீலம் போன்ற பெயர் பெற்ற பல்கலைக் கழகங்கள் இருந்தன. அத்துடன், ' குரு-குல ' கல்வி முறையும் இருந்தது; அம்முறை யின் கீழ், கல்வி உயர் சாதியினருக்கும், உயர் குடியினருக்கும் மட்டுமே கிடைத்து வந்தது.

தற்சமயம் நடைமுறையில் இருந்துவரும் கல்விமுறையை இந்தியாவிற்குக் கொண்டு வந்து, சாதி, சமயம், நிறம், சமுதாய நிலை ஆகியவற்றைக் கடந்து அனை வருக்கும் கல்வி என்கின்ற நிலையை ஏற்படுத்தியோர் கிறிஸ்தவ அருள்பணியரே எனின் அது மிகையாகாது.

## பதினாறாம் நூற்றாண்டு:

உரோமன் கத்தோலிக்க இயேசு சங்க திருப்பணியர் பிரான்சிஸ் சேவியர் கிறிஸ்தவ சமயத்தைத் தழுவியவருக்கும், அவர்களின் பிள்ளைகளுக்கும் கல்வி தரவேண்டி சில பள்ளிக்கூடங்களைத் தொடங்கினார். கிறிஸ்தவ நெறியைப் புகட்டுவதே இவற்றின் அடிப்படை நோக்கமாக இருந்தது. புதிதாகக் கிறிஸ்தவரான வர்களில் திறமையும், புத்திக்கூர்மையும் உடைய இளைஞர்களைத் தெரிவுசெய்து, அவர்களைக் கற்பிக்கும் பணிக்கு அமர்த்தினார். போர்த்துக்கீசிய அரசிடமிருந்து அந்த இளைஞருக்குச் சிறிது ஊதியத்தொகையை அவர்களது பணிக்காகப் பெற்றுத்தந்தார். கி.பி.1540இல் போர்த்துக்கீசியர் தூய பவுல் கல்லூரியைக் கோவாவில் தொடங்கினர். அது இந்தியரைப் பயிற்றுவிப்பதை நோக்கமாகக் கொண

டிருந்தது; ஒருவேளை அரசின் கீழ்நிலைப் பணிகளில் அவர்களை நியமிப்பதற்காக அக்கல்வி இருந்திருக்கலாம். பிரான்சிஸ் சேவியரின் காலத்தில் அக்கல்லூரி இயேசு சங்கத்தினரின் நிர்வாகத்தின் கீழ் வந்தது; அது இறையியல் கல்விக்கூடமாகவும் இருந்தது. அதில் மலபார் சீரியன் திருச்சபை இளைஞரும் பயிற்றுவிக்கப்பட்டனர்.

## பதினெட்டாம் நூற்றாண்டு:

இந்தியாவில் இறங்கிய முதல் பிராட்டஸ்டன்ட் அருள்தொண்டர் பர்த்தொலோமேயு சீகன்பால்க் தரங்கம்பாடியில் கி.பி.1707இல் ஒரு பள்ளிக்கூடத்தைத் திறந்தார். அது அங்கிருந்த கலப்பின மக்களின் பிள்ளைகளுக்காகத் திறக்கப்பட்டது. தங்கிப் படிக்கும் வசதிகொண்ட பள்ளிக்கூடங்களையும் தொடங்கினார். அதில் சேர்க்கப்பட்ட இந்தியப் பிள்ளைகளுக்கு எழுதவும், படிக்கவும் கற்றுத்தரப்பட்டது. திருமறையைத் தாமாகவே படிக்க வேண்டும் என்பதே அதன் நோக்கமாயிருந்தது. அப்பள்ளிகளில் கிறிஸ்தவப் போதனைகளுக்கு முதன்மை இடம் அளித்தனர். இந்தியாவில் கி.பி.1726 முதல் 1741வரை பணியாற்றிய சூல்ட்சே (Schultze) என்னும் தரங்கை அருள்பணிச் சங்கத்தின் மூலம் வந்த அருள்பணியர் சென்னையில் போர்த்துக்கீசியர் என்றழைக்கப்பட்ட கலப்பின பிள்ளைகளுக்கு ஒரு பள்ளிக்கூடத்தையும், தமிழ்ப் பிள்ளைகளுக்கு மற்றொரு பள்ளிக்கூடத்தையும் தொடங்கினார். இப்பள்ளிகளில் ஆங்கில மொழியும் கற்பிக்கப்பட்டது. பின்பு கிறிஸ்தவ அறிவு வளர்ச்சிச் சங்கத்தின் (எஸ்.பி சி கே) உதவியுடன் தரங்கம்பாடி அருள்பணியர் என்றும், இராயல் டேனிஷ்-ஹல்லே அருள்பணியர் என்றும் அறியப்பட்டோர் வேறு சில இடங்களிலும் சில பள்ளிக்கூடங்களைத் தொடங்கினர். சி.எஃப்.சுவாட்ஸ் என்பார் திருச்சிராப்பள்ளி கோட்டையில் இருந்த இராணுவ போர்க்கருவிக் கிடங்கில் ஏற்பட்ட தீ விபத்தில் இறந்துபோனோரின் பிள்ளைகளுக்கென அனாதைப் பிள்ளைகள் காப்பகம் ஒன்றைத் தொடங்கினார். பலநிலை பிள்ளைகளுக்குக் கல்வி வழங்கியவர் கிறிஸ்தவ அருள்பணியர் என்பதை இவைகள் மூலம் நாம் அறியலாம்.

பிரித்தானிய கிழக்கிந்திய கம்பெனி ( பி.கி.க.)யும் சில கல்விக்கூடங்களைத் தொடங்கியது. கல்கத்தாவில் கி.பி.1781இல் இசுலாமியருக்கென மத்ரிசா ( Madrissa) ஒன்று தொடங்கப்பட்டது. இங்கு பாரசீக மொழியைக் கற்பித்தனர். வாரனாசி / பனாரசில் கி.பி.1791இல் சமஸ்கிருத மொழியைக் கற்பித்த இந்து கல்லூரி தொடங்கப்பட்டது. அத்தகைய கல்விக்கூடங்களை நிறுவுவதின் மூலம் பி.கி.கம்பெனி இந்தியர்களுக்கு ஆதரவு அளிப்பதாகக் கருதியது.

## ஓரியண்டல் - இவாஞ்சலிக்கல் கருத்துப்பள்ளிகள்:

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் பிரித்தானியாவில் கல்விப்பணியைக் குறித்த முக்கியமான இரண்டு கருத்துப்பள்ளிகள் இருந்தன. ஒன்று ‘ ஓரியண்டல் ’ (கீழ்திசை மரபு) எனவும், மற்றொன்று ‘ இவாஞ்சலிக்கல் ’

(நற்செய்தி அறிவிப்பு மரபு) எனவும் பெயரிடப்பட்டிருந்தன. எட்மண்ட் பர்க், வில்லியம் ஜோன்ஸ், வில்லியம் இராபர்ட்சன், சர் சார்ல்ஸ் வில்லியம் என்பவர்கள் 'ஓரியண்டல்' குழுவைச் சேர்ந்த சிலராவர்.[1] கீழை நாடுகளின் மொழிகளை வளர்க்க / ஊக்கப்படுத்த வேண்டும் என்பதும், இந்தியர்களுக்கு இந்திய மொழிகளில் கல்வி தரப்படவேண்டும் என்பதும் இவர்களின் கருத்தாகும். சார்ல்ஸ் கிராண்ட், வில்லியம் வில்பேர்ஸ், மெக்காலே, ஜேம்ஸ் மில் என்பவர்கள் 'இவாஞ்சலிக்கல்' குழுவைச் சேர்ந்தவர்கள்.[2] ஆங்கில மொழியின் உயரிய தன்மையை எடுத்தோதுவதும், இந்து சமயத்தை அழிப்பது அல்லது பலவீனப்படுத்துவதும், ஆங்கில மொழி மூலம் கல்வி என்பதை மதமாற்றம் செய்ய ஒரு கருவியாகப் பயன்படுத்துவது என்பதும் அவர்களின் நோக்கமாக இருந்தது. இச்சூழலில் கி.பி.1793இல் பி.கி.கம்பெனியின் சாசனம் புதுப்பிக்கப்பட பிரித்தானிய நாடாளுமன்றத்திற்கு வந்தது. 'இவாஞ் சலிக்கல்' குழுவிலிருந்த, நாடாளுமன்ற உறுப்பினர் வில்லியம் வில்பர்போர்ஸ், இந்தியாவில் கல்விப்பணியையும், அருள்பணியாற்றலையும், பி.கி.கம்பெனியின் பொறுப்பாக ஆக்க வேண்டும் என்னும் கருத்தைத் தீவிரமாக வலியுறுத்தினார். ஆனால் அவரது கருத்து ஏற்கப்படவில்லை. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியிலும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் இந்தியாவிலிருந்த பிரித்தானிய அதிகாரிகள் இந்திய மொழிகளில் கல்வி கற்பிக்கப்படுவதை ஆதரித் தனர். அதற்கு எடுத்துக்காட்டாக சென்னை ஆளுநர் தாமஸ் மன்றோவையும், பம்பாய் ஆளுநர் எல்பின்ஸ்டன் என்பவரையும் கூறலாம்.

## கி.பி.1813 சாசனம் புதுப்பிக்கப்படல்:

பி.கி.கம்பனியின் சாசனம் கி.பி.1813இல் மீண்டும் புதுப்பிக்கப்பட்டது. ' இவாஞ் சலிக்கல்' குழுவினரின் உறுதியான, தொடர்ச்சியான ஆதரவு திரட்டலின் விளைவாக இந்தியா போன்ற குடியேற்றங்களில் நற்செய்தி அறிவிப்பு பணி, கல்விப்பணி ஆகியவற்றை அனுமதிக்க, புதுப்பிக்கப்பட்ட சாசனத்தில் சில விதிகள் சேர்க்கப்பட்டன. பிரித்தானியா அருள்பணிச் சங்கங்கள் இந்தியாவில் கல்விப்பணியிலும், நற்செய்தி பரப்பும் பணியிலும் ஈடுபட சட்டப்படி அனுமதி பெற்றனர். பி.கி.க.இந்தியாவில் கல்விப்பணி ஆற்றப்பட வருடத்திற்கு 3000 பிரித்தானிய பவுண்டுகளை ஒதுக்கியது. இதற்கிடையில், செராம்பூர் மூவருள் ஒருவரான ஜாஷ்வா மார்ஷ்மெனும், அவர் துணைவியார் அன்னாளும் டேனிஷ் குடியிருப்பான செராம்பூருக்கு உள்ளேயும், அருகிலேயும் கல்விகற்றோரின் பிள்ளைகளுக்கென பள்ளிக்கூடங்களை நிறு வினர். கல்விக் கட்டணம் செலுத்தப்பட்டு, உறைவிடப் பள்ளியாக இரு பாலருக்கும் உரிய கல்விக்கூடங்களும் தொடங்கப்பட்டன. மார்ஷ்மென் அகாடமி என்றழைக்கப் பட்ட ஐரோப்பியப் பிள்ளைகளுக்கானப் பள்ளிக்கூடமொன்றும் தொடங்கப்பட்டது.

## தொடக்கப்பள்ளிகள் காலம்:

கி.பி.1813 முதல் 1833 வரையிலான காலத்தைத் தொடக்கப்பள்ளிகளின் காலம்

எனலாம். இந்தியாவிற்குள் நுழைந்த அனேகமாக அனைத்து அருள்பணிச் சங்கங் களும் தாங்கள் பணியாற்றிய இடங்களில் தொடக்கப்பள்ளிக்கூடங்களை ஆரம்பித் தனர். மேலும் அவைகளில் எழுத, படிக்க, கணிதம் போடச் சொல்லித்தரப்பட்டது; போதனை மொழி, தாய் மொழியாக இருந்தது. கிறிஸ்தவப் போதனைகளுக்கும் முக்கியத்துவம் தரப்பட்டது. கிறிஸ்தவப் போதனை பெற்ற பள்ளி மாணவர்கள் மூலம் அவர்களது பெற்றோரைத் தொடவேண்டும் எனவும், அதனால் கிறிஸ்தவ சமய மாற்றம் ஏற்பட வழி பிறக்கும் என்பதை நோக்கில் கொண்டு இப்பள்ளிக்கூடங்கள் நடத்தப்பட்டன. இக்காலக்கட்டத்தில் பொதுவாகத் திருமணம் ஆகாத, தனித்திருந்தப் பெண்கள் அருள்பணியாற்ற அனுப்பப்படவில்லை. இதற்கு விதிவிலக்கும் இருந்தது. அருள்பணியாளர்களின் துணைவியரே பெண் பிள்ளைகளுக்கான பள்ளிக்கூடங் களை நிறுவினர். கி.பி.1821க்குள் செராம்பூர் அருள்பணியர் அமைப்பு 126 கிராமப் புறப் பள்ளிக்கூடங்களை நடத்தியது. செல்வி. குக் என்பவர் கல்கத்தாவில் கி.பி.1821இல் சிறுமியருக்கான பள்ளிக்கூடங்களை நடத்தி வந்தார்.[3]

### அலெக்சாண்டர் டஃப்: ஆங்கிலக் கல்வி / உயர் கல்வி:

கி.பி 1833 முதல் 1857 வரையிலான காலத்தை ஆங்கிலக் கல்வியின் காலம் எனலாம். பி.கி. கம்பெனியின் சாசனம் மீண்டுமாக கி.பி.1833இல் புதுப்பிக்கப்பட்டது. அதுவரை பிரித்தானியா அருள்பணிச் சங்கங்கள் மட்டும் நற்செய்திப்பணியாற்ற, கம்பெனியின் அனுமதி பெற்றிருந்தன; ஆனால் புதுப்பிக்கப்பட்ட சாசனத்தின் மூலம் நற்செய்திப்பணியாற்ற விரும்பும் பிறநாடுகளைச் சேர்ந்த அருள்பணிச் சங்கங் களுக்கும் பி.கி.கம்பெனியின் குடியேற்றங்கள் திறந்துவிடப்பட்டன. இந்தியாவினுள் ஆங்கில மொழி மூலம் கல்வியை அறிமுகப்படுத்திய சிறப்பு, அலெக்சாந்தர் டஃப் என்பவரையேச் சாரும். இவர் ஸ்காட்லாந்து பிரிஸ்பித்தீரிய நற்செய்திப்பணியாளராக கி.பி.1830இல் இந்தியாவிற்கு வந்தார். அவர் கல்கத்தாவில் தன் பணியைத் தொடங்கினார். அவர் ஆரம்பித்த பள்ளிக்கூடம் பின்னாளில் ஒரு கல்லூரியாக வளர்ந்தது மட்டுமல்லாமல், இந்தியாவில் மேற்கத்திய கல்விக்கான ஒரு மையமாகத் திகழ்ந்தது. மேற்கத்திய கல்விமுறையைச் 'சமய மாற்றத்திற்கான ஆயத்தமாக'[4]க் கருதினர். இந்தியாவின் உயர் குடியினருக்கு கிறிஸ்தவத்தின் அறைகூவலைத் தருவது அவருடைய நோக்கமாக இருந்தது. கிறிஸ்தவ அடித்தளத்தின்மீது உறுதியாகக் கட்டப்பட்ட ஆங்கிலமொழி வழி கல்வியே அதற்கான உரிய வழிமுறை என்று முடிவு செய்தார். அவர் கல்கத்தாவை அடைந்தபோது அந்நகரின் இளைஞரிடையே ஒரு வகை அறிவு சார்ந்த வேட்கை இருந்து வந்தது.18ஆம் நூற்றாண்டில் முற்றிலும் காணப்படாத, புதிய சிந்தனைகளை ஏற்கும் திறந்த மனப்பான்மை இருந்தது. பிரித்தானிய அரசாங்கம் கி.பி.1824இல் கல்கத்தாவில் தொடங்கியிருந்த இந்துக் கல்லூரி இந்த எழுச்சிக்கு ஒரு வழியில் காரணமாக இருந்திருக்கக்கூடும், "டஃப் தன் பள்ளிக்கூடத்தைத் தொடங்கிவைத்த நாளில் இராஜாராம் மோகன்ராய் அவர் பக்கத்தில் நின்று, இந்து மாணவர்கள் கிறிஸ்தவ

சாஸ்திரத்தை வாசிப்பதற்கு அஞ்சவேண்டிய தில்லை, ஏனெனில் தாமே அதிலிருந்து பல நன்மைகளைப் பெற்றுள்ளதாகக் கூறி உற்சாகப்படுத்தினார்,"[5] அவரின் கல்விப் பணியின் வாயிலாக, உயர் சாதி வாலிப மாணாக்கர் அவருடன் உரையாடல் செய்வதற்கு வாய்ப்பு ஏற்பட்டது, கி.பி.1832 ஆகஸ்டுக்கும் 1833 ஏப்ரலுக்கும் இடைப்பட்ட காலத்தில் உயர் சாதியைச் சேர்ந்த நான்கு வாலிபர் கிறிஸ்தவத்தை ஏற்றுக்கொண்டு, திருமுழுக்கு பெற்றனர். மோகேஷ் சுந்தர் கோஷ், கிருஷ்ணமோகன் பானர்ஜி, கோபினாத் நந்தி, ஆனந்தோ சுந்தர் மஜும்தார் ஆகியோரே அந்நால்வர்.[6] அவர்களில் ஒருவரான கோபிநாத் நந்தி பதேக்பூர் (Fatehpur) என்னுமிடத்தில் அமெரிக்க பிரஸ்பித்திரிய அருள்பணி அமைப்பின் ஆயரானார். அவரும் அவர் குடும்பத்தினரும் கி.பி.1857இல் நிகழ்ந்த 'சிப்பாய் கலகத் தின்போது' பெருந்துன்பங்களுக்கு ஆளாயினர். மற்றொருவரான கிருஷ்ணமோகன் பானர்ஜி தம் பதினெட்டாம் வயதில் முற்போக்குச் சிந்தனைகளைத் தாங்கிவந்த **'தி என்கொயரர்' (The Enquirer)** என்ற இதழின் ஆசிரியராகத் திகழ்ந்தார், அவர் பின்னாளில் ஆங்கிலத் திருச்சபையின் ஆயராகவும் வங்காளத்தில் மதிப்புமிக்க பொது மனிதரில் ஒருவராகவும் திகழ்ந்தார்.[7]

டஃப்பின் முயற்சி அவர் எதிர்பார்த்தது போன்று பெரிய அளவில் நிகழவில்லை. மதகின் கதவுகளைத் திறந்தவுடன் வரும் பெருந்திரளான நீரைப் போன்று மதமாற்றம் பெருமளவில் நடைபெறவில்லை. இந்தியாவில் அவர் பணியாற்றிய காலம் முழுவதிலும் முப்பத்தாறு நபர்கள் மட்டுமே கிறிஸ்தவத்தை ஏற்றனர். எனினும் அவருடைய முயற்சியின் செல்வாக்கு விரிவாகவும், பரந்துபட்டும் இருந்தது. அலெக்சாண்டர் டஃப்பின் முயற்சியைப் பலரும் பின்பற்றினர். அதன் விளைவாக உயர்கல்வி நிறுவனங்கள் எழுந்தன.

## செராம்பூர் கல்லூரி:

இந்நிகழ்வுக்கு முன்பே செராம்பூர் மூவர் கி.பி.1818இல் செராம்பூரில் ஒரு கல்லூரியைத் தொடங்கியிருந்தனர். அதில் கலை, அறிவியல் துறைகளுடன், இறை யியல் துறையும் செயல்பட்டது. இதில் கி.பி.1819 முதல் வகுப்புகள் நடைபெறத் தொடங்கின. கிறிஸ்தவர்களும், பிற சமயத்தவரும் அக்கல்லூரியில் சேர்க்கப்பெற் றனர். கல்லூரி விடுதியில் அம்மாணவர்கள் இணைந்து வாழச்செய்தனர். டென் மார்க் அரசர் கி.பி.1827இல் செராம்பூர் கல்லூரிக்கு கல்விப் பட்டங்கள் வழங்கும் உரிமையை ஒரு சாசனத்தின் மூலம் வழங்கினார்.[8]

## பிற கல்லூரிகள்:

கி.பி.1820இல் பேராயர் தாமஸ் மிடில்டன் இறையியல் உயர் கல்வி கற்பதற்கான கல்லூரி ஒன்றைத் தொடங்கினார். அது 'பிஷப்ஸ் கல்லூரி' என்ற பெயரினைப் பெற்றது. அது கல்கத்தாவில் நிறுவப்பட்டது. அது இந்தியாவில் இருந்த ஆங்கிலிக்

கன் திருச்சபையில், ஆயர்களாகப் பணியாற்ற இந்தியர்களைப் பயிற்றுவித்தது.

ஸ்காட்லாந்து திருச்சபையிலிருந்து வந்த நற்செய்திப்பணியாளர்கள் ஆங்கில மொழி மூலம் உயர் கல்வியைத் தருவதில் முன்னோடிகளாக இருந்தனர். கி.பி.1832 இல் ஜான் வில்சன் பம்பாயில் / மும்பையில் கல்லூரி ஒன்றை நிறுவினார். பின்னர் அக்கல்லூரி அவர் பெயரையேத் தாங்கியது. ஜான் ஆண்டர்சன் சென்னையில் கி.பி.1837இல் ' தி இன்ஸ்ட்டிடியூஷன்' (The Institution ) என்கின்ற கல்விக்கூடத்தைத் தொடங்கினார். அது பின்னர் சென்னைக் கிறிஸ்தவ கல்லூரியாக விரிவாக்கம் பெற்றது. கி.பி.1844இல் நாக்பூரில் ஸ்டீபன் ஹிஸ்லோப் என்பவர் கல்லூரி ஒன்றைத் தொடங்கினார். பின்னர் அது ஹிஸ்லோப் கல்லூரி என்றறியப்பட்டது. இக்காலக்கட்டத்தில் தொடங்கப்பட்ட கல்லூரிகளில் சில பின்வருமாறு: லாகூரில் ஃபோர்மன் கிறிஸ்தவக் கல்லூரி, சி.எம்.எஸ். சார்பில் மசூலிப்பட்டிணத்தில் கி.பி.1843 நவம்பரில் இராபர்ட் டி. நோபிள் ( Robert T.Noble ) தொடங்கிய கல்லூரி (இது பின்னர் நோபிள் கல்லூரி என்னும் பெயரை ஏற்றது), தாமஸ் வால்பி ஃபிரென்ச் ( Thomas Valpy French ) கி.பி. 1853இல் ஆக்ராவில் நிறுவிய தூய. ஜான் கல்லூரி. இவைகளுக்குப் பின்னர் தமிழ் நாட்டின் தஞ்சாவூர் மாவட்டத்தில் மன்னார்குடி என்னுமிடத்தில் வெஸ்லியன் மெத்தோடிஸ்ட்டு அருள்பணிச் சங்கம், ஃபின்லே கல்லூரி என்னும் பெயரில் கல்லூரி ஒன்றை நிறுவியது.

## அரசின் கல்விக்கொள்கை:

"அரசு ஆங்கிலக் கல்வியை ஊக்குவிக்க வேண்டும் என்று வலியுறுத்தியோருக்கு, டஃப்பின் கல்விப்பணி வலுவான சான்றாக அமைந்தது."[9] இச்சூழலில் தாமஸ் பாபிங்டன் மெக்காலே 'கல்விக் குறிப்பு' ஒன்றை கி.பி.1835 பெப் ரவரி இரண்டாம் நாள் எழுதினார்.[10] இது அன்றைய கவர்னல் ஜெனரல் வில்லியம் பெண்டிங் கி.பி.1835 மார்ச்சு ஏழாம் நாள் அரசு ஆணை ஒன்றினை வெளியிட வழி செய்தது. "இனி முதற்கொண்டு அரசின் மானியத்தை முக்கியமாக ஆங்கில மொழி மூலம் ஆங்கில இலக்கியம், அறிவியல் ஆகியவற்றைப் பயிற்றுவிக்கப் பயன்படுத்துவோம்" என்று அந்த அரசு ஆணை தெரிவித்தது.[11] இதன் பின்விளைவுகள் பரந்துபட்டதாக இருந்தது; குறிப்பாக நிர்வாகக் கொள்கையின் பலநிலைகளைப் பாதித்தது. கிறிஸ்தவக் கல்வித் திட்டங்களுக்கும் இது உந்துதல் தந்தது. கி.பி.1835இல் பெண்டிங் பிறப்பித்த ஆணை திட்டவட்டமாக டஃப்பின் கல்விப்பணிக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டே அமைந்தது. எனவே அதனையே டஃப்பின் திட்டங்களுக்குக் கிடைத்த வெற்றியாகவும், அதிலும் அது குறிப்பிடத்தகுந்த ஒன்றாகவும் கொள்ளலாம், அது அத்துடன் நின்றிடவில்லை, கி.பி.1853இல் பிரித்தானிய நாடாளுமன்றம் தன் குடியேற்றப் பகுதிகளில் ஆங்கிலக் கல்விமுறை செயல்படும் முறைமை குறித்து ஒரு விசாரணையை நடத்தியது. அதில் சாட்சியம் அளித்தவர்களில் முக்கியமான இருவர் டிரெவெல்யனும், டஃப்பும் ஆகும். இதன் விளைவாக

கி.பி.1854இல் வெளிவந்ததே சுருக்கமாக ' உட் அறிக்கை ' என்று அறியப்படும் சர் சார்ல்ஸ் உட் கல்விப்பணி அறிக்கை[12] என்பதாகும். அது அரசின் கல்விப்பணிக் கொள்கையை விவரித்தது; அத்துடன் தற்கால பொதுக் கல்வித் திட்டம் அமைக்கப் படவேண்டிய முறையையும் சுட்டிக்காட்டியது. அதனால் ஒவ்வொரு மாநிலத்திலும் பொதுக்கல்விக்கான துறைகள்[13] அமைக்கப்பட்டன; அரசாங்க மானியம் வழங்கும் முறையை அரசு அறிமுகப்படுத்தியது; மேலும் கல்கத்தா, சென்னை, பம்பாய் ஆகிய நகரங்களில் பல்கலைக்கழகங்கள் நிறுவப்பட்டன. ட்ஃப்பின் கல்விப்பணி முதலில் வங்காளத்திலும் பின்பு நாடெங்கிலும் மறுமலர்ச்சிக்கு வழிநடத்தியது.

## பாதிப்புகள்:

அருள்பணிச் சங்கங்கள் அமைத்த பள்ளிக்கூடங்களும், கல்லூரிகளும் அரசாங்கத்தின் பொது கல்வித்திட்டத்தின் கீழ் கொணரப்பட்டன. அரசாங்கத்தின் விதி முறைகள் தங்களுக்குப் பாரமாயும், தாங்கள் அவைகளைத் தொடங்கிய நோக்கம் நிறைவேற்றப்படுவதில் கட்டுப்பாடுகள் இருப்பதாகவும் அருள்பணிச் சங்கங்கள் உணர்ந்தன. கி.பி.1858ஆம் ஆண்டுக்குப்பின் அருள்பணிச் சங்கங்களின் கல்விப்பணியில் மிகுந்த சுதந்திரம் தர அரசு விரும்பவில்லை; தனியார் பள்ளிக் கூடங்கள் மீதும் அரசு புதிய கட்டுப்பாடுகளை விதித்தது. விக்டோரியா அரசியின் பிரித் தானிய அரசு சமயக்காரியங்களில் நடுநிலை வகிக்க விரும்பியதால், கல்விப்பணியில் ஒரு வகையான சமயம் சாராத்தன்மை அறிமுகமானது. கிறிஸ்தவப் பள்ளிக்கூடங் களில் திருமறை தொடர்ந்து கற்பிக்கப்பட்டு வந்தாலும், அதற்குரிய மைய இடம் தரப்படவில்லை. பேசில் அருள்பணிச் சங்கம் தங்களின் தொடக்க நோக்கம் நிறை வேற்றப்பட இயலாது என உணர்ந்தவுடன், கி.பி.1860இல் தம் பள்ளிக்கூடங்களை அரசாங்கத்தின் முறைமையிலிருந்து விலக்கிக்கொண்டனர். அது தன் பள்ளிக் கூடங்களை அரசாங்க மானியமின்றி நடத்த முற்பட்டது; ஆனால் அரசாங்கத்தின் பண உதவியின்றி கல்விக்கூடங்களை நடத்திச்செல்வது கடினமானதென்று உணர்ந்தவுடன், கி.பி.1867இல் அரசு திட்டத்திற்குத் திரும்பினர். ஏ.பி.சி.எஃப்.எம். அல்லது அமெரிக்கன் போர்டும், அதன் பின் பாப்திஸ்து அருள்பணிச் சங்கமும் அரசாங்கத்தின் புதிய விதிமுறைகளினால் தங்கள் கல்விப்பணியைச் சுருக்கிக் கொண்டன. “இது அருள்பணிச் சங்கங்கள் தங்களின் கல்விக்கூடங்களின் பங்க ளிப்பைக் குறித்து, திருச்சபையின் முழு நற்செய்திப்பணி பார்வையில் ஆங்கிலப் பள்ளிக்கூடங்களின் இடம் குறித்து மறுசிந்தனை செய்தன. கி.பி.1870க்குப்பின் பல அருள்பணிச் சங்கங்கள், ஆங்கிலப் பள்ளிக்கூடங்களை அமைப்பதை விடுத்து, கிராமங்களில் பள்ளிக்கூடங்களைத் தொடங்குவதில் கவனம் செலுத்தினர். பத்தொன் பதாம் நூற்றண்டின் இறுதிக்குள், உயர் கல்வித்துறையில் அரசாங்கமும், தனியார் அமைப்புகளும் தம் ஆளுமையைச் செலுத்தத் தொடங்கின. எனவே பெண்கள் கல்வி தவிர பிற நிலைகளில் கிறிஸ்தவக் கல்விப்பணி தனக்கிருந்த முதன்மை இடத்தை இழந்தது.”[14] இச்சூழலில் கிறிஸ்தவக் கல்விப்பணியில் ஈடுபட்டிருந்த சங்கங்

கள், தங்களின் கல்வி நிறுவனங்கள் மூலம் மறைமுகத் தாக்கங்கள் குறித்து சிந்திக்கத் தொடங்கின. தங்களின் மாணவர்கள் மூலமும், கல்வி கற்ற வகுப்பினர் மூலமும் கிறிஸ்தவ சிந்தனைகளும், அதன் உயரிய கொள்கைகளும் பரப்பப்பட்டு அவ்விதம் மறைமுகத் தாக்கம் ஏற்படும் என்று எண்ணினர்.

"கி.பி.1920க்குப் பின் பிராடஸ்டெண்ட் திருச்சபையின் கல்விப்பணி ஒரு சிறிதே விரிவடைந்தது. ஆனால் உரோமன் கத்தோலிக்கத் திருச்சபையின் பள்ளிக்கூடங் களும், கல்லூரிகளும் குறிப்பிடத்தக்க வகையில் அதிகரித்தன. இந்த நூற்றாண்டில் பிராடஸ்டெண்ட் கல்வியாளரின் அழுத்தம் எண்ணிக்கையில் அன்று, தரத்திலேயே என்றிருந்தது. இந்த நோக்கத்தை அவர்கள் நிறைவேற்றுவதில் வெற்றிக்கொண் டனரா இல்லையா எனக் கூறுவது கடினமே. கி.பி.1932இல் இந்தியாவில் இருந்த பிராடஸ்டெண்ட் கல்லூரிகள் அனைத்தின் செயல்பாடுகளையும் ஒருங்கிணைக்கும் நோக்குடன் இந்திய தேசியக் கிறிஸ்தவ மன்றத்தின் கீழ் கிறிஸ்தவ உயர்கல்வி மத்திய வாரியம் ஒன்று அமைக்கப்பட்டது. கி.பி.1966இல் சென்னைக்கருகிலுள்ள தாம் பரத்தில் பிராடஸ்டெண்ட், உரோமன் கத்தோலிக்கச் சபைகளின் கல்லூரி முதல்வர் களின் மாநாடு நடந்தது. அதில் இரண்டு சபை பிரிவுகளின் உயர் கல்விப்பணியை ஒருங்கிணைக்கவும், இணைந்து செயல்படுதல் குறித்து சிந்திக்கவும் ' கிறிஸ்தவ உயர் கல்வி தேசிய வாரியம்' ஒன்று உருவாக்கப்பட்டது. இந்த சென்னை மாநாடு கிறிஸ்தவ கல்விப்பணியின் நோக்கமாக வளர்ந்துவரும் நாட்டைக் (இந்தியாவை) கட்டியெழுப்பும் செயல்களில் ஈடுபடுதல் என்பதை முன் வைத்தது. இது முந்தையக் குறிக்கோளான கிறிஸ்தவப் பள்ளிக்கூடங்கள் நற்செய்தியை ஏற்க ஆயத்தக் களங்கள், திருச்சபையின் தலைவர்களுக்கான பயிற்சிக்களம் என்பதிலிருந்து விலகி இருந்தது எனலாம்."[15] தற்பொழுது இந்தியக் கிறிஸ்தவர்களுடைய, திருச்சபைகளு டைய கல்விப் பணியைக் கிரமமாக இணைக்க ' அனைத்திந்திய கிறிஸ்தவ உயர் கல்விச் சங்கம்' [16] என்பது செயல்பட்டு வருகிறது. இதன் தலைமை அலுவலகம் புதுதில்லியில் உள்ளது. இது கி.பி.1967இல் நிறுவப்பட்டது. இதில் திருச்சபையுடன் தொடர்புடைய 230 கல்லூரிகள் உறுப்பினராக உள்ளன. இந்தியாவிலுள்ள கிறிஸ்தவக் கல்லூரிகளின் தரத்தை உயர்த்தும் நோக்கோடும், புத்துயிர் தரவும், வளர்ச்சியடையச் செய்யும் நோக்கோடும் பல நிகழ்ச்சிகளைத் திட்டமிடுகிறது, ஏற்பாடு செய்கிறது, நடத்துகிறது. பொதுவாக இந்தியாவில் உயர் கல்வியின் பொருத்தத்தை யும் கணிக்க உதவுகிறது. மேலும் இந்த சங்கம் செய்தி மடல்களையும், **'கல்வியில் புது எல்கைகள்'**[17] என்னும் காலாண்டு இதழ் ஒன்றையும் வெளியிடுகிறது.

## பெண்கள் கல்வி :

பெண்களுக்கான கல்விப்பணியில் கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்கள் முன் னோடிகளாகத் திகழ்ந்துள்ளன. கி.பி.1870 முதல் பிராடஸ்டெண்ட் திருச்சபைகளும், அருள்பணிச் சங்கங்களும் இந்தியா முழுவதிலும் பெண்களுக்கான பள்ளிக்கூடங்

களையும், கல்லூரிகளையும் நிறுவி வந்துள்ளன. சாராள் தக்கர் கல்லூரி, பாளையங் கோட்டை; இசபெல்லா தோபெர்ன் கல்லூரி, லக்னோ; பெண்கள் கிறிஸ்தவக் கல்லூரி, சென்னை ஆகியவை, அவைகளுக்கு எடுத்துக்காட்டு. இந்திய பல்கலைக் கழகங்களின் முதல் பெண் பட்டதாரிகள், கிறிஸ்தவர்கள் என்பதும், அவர்கள் கிறிஸ் தவக் கல்லூரிகளில் படித்தவர்கள் என்பதும் குறிப்பிடக்கூடியது. மகளிருக்கான கிறிஸ்தவக் கல்விப்பணி அரசுக்கும், பிற அமைப்புகளுக்கும், தனி நபர்களுக்கும் பெண்களிடையே கல்விப்பணியாற்றத் தூண்டுதலாக இருந்துள்ளது. கோகலே போன்ற சீர்திருத்தவாதிகள் பெண்களுக்கு மேலான, சிறந்த கல்வி வழங்கப்பட வேண்டியதின் அவசியத்தை இந்துக்களிடையே உருவாக்கினர். கி.பி.1900க்குள், ஆரிய சமாஜம், பிரம்ம ஞான சபை / தியாசபிகல் சங்கம், இராமகிருஷ்ண இயக்கம், மேலும் பிற அமைப்புகள் பெண்கள்கல்வி மீது ஆர்வம் காட்டத்தொடங்கின.

### முடிவுரை:

கிறிஸ்தவ கல்விப்பணி குறுகிய நோக்கத்தோடு தொடங்கப்பட்டாலும், விரைவில் அது தன் நோக்கத்திலும், தாக்கத்திலும் பரந்து விரிந்திருந்தது. ஆங்கில மொழி வழிக் கல்வி, மேற்கத்தியக் கல்வி முறை ஆகியவற்றை அறிமுகம் செய்ததில் கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்கள் கருவியாகத் திகழ்ந்தன. அக்கல்வி முறை, மறுமலர்ச்சிக்கும், திறந்த மனச்சிந்தனைக்கும் இடமளித்தது. உண்மையிலேயே அதன் தாக்கம் பரந்தும், விரிந்தும் இருந்துள்ளது.

## *End Notes*

[1] Orientalists : Edmund Burke, William Jones, William Robertson, Sir Charles Williams.

[2] Evangelicals : Charles Grant, William Wilberforce, Macaulay, James Mill.

[3] Ms.Mary Ann Cooke, a cheerful competent young woman was sent out by the British and Foreign School Society to begin female education for the Indians of Calcutta. But its Calcutta branch was not prepared to support her and so she was employed by the Corresponding Committee of the Church Missionary Society. By 1822 she had established three girls' schools in different parts of Calcutta. Thus she became the first and remained for a very longtime the only woman CMS Missionary in India. A CMS Missionary, Isaac Wilson married Miss. Cooke in 1823. Though he died in 1828, she as Mrs. Mary Ann Wilson continued her female education work. M.E. Gibbs, **The Anglican Church in India** 1600-1970. pp.92-93.

[4] 'Preparatis Evangelis', meaning 'preparation for evangelism'

[5] Stephen C. Neill, **The Story of The Christian Church in India and Pakistan** pp. 80-81, 134.

[6] Mohesh Chunder Ghose, Krishna Mohun Banerjee, Gopinath Nandi and Anundo Chunder Mozoomdar.

[7] C.B.Firth, **An Introduction to Indian Church History**, p.183.

[8] M.K.Kuriakose, **History of Christianity in India : Source Materials.** pp. 109-110.

[9] C.B.Firth, **op.cit.** p.184.

[10] M.K.Kuriakose, **op.cit.** pp122-125.

[11] C.B.Firth, **op.cit.** p.185.

[12] Educational Despatch of Sir Charles Wood.

[13] Departments of Public Instruction.

[14] H.C.Perumalil & E.R. Hambye (eds.) **Christianity in India : A History in Ecumenical Perspective.** pp.274-275.

[15] **Ibid**. p.275.

[16] All India Association for Christian Higher Education. (A I A C H E).

[17] **New Frontiers in Education**.

## இயல் நான்கு

# மருத்துவப்பணியும், கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்களும்

இந்தியாவிற்கு அருள்பணியாற்ற வந்த சங்கங்களில் பெரும்பான்மையான வற்றிற்கும், இந்தியத் திருச்சபைக்கும் மருத்துவப்பணி அவர்களின் பணிகளில் பிரபலமான பணியாக இருக்கிறது. மிகவும் குறைந்த அளவில் மருத்துவ வசதிகள் இருந்த இந்தியாவிற்கு வந்த கிறிஸ்தவ அருள்பணி அமைப்புகள் நகரங்களிலும், கிராமங்களிலும் மருத்துவமனைகளையும், மருந்தகங்களையும் தொடங்க அந்த நிலைத் தூண்டியது.

### பத்தொன்பதாம் நூற்றாண்டு:

மருத்துவ அருள்பணியாளர்களை இந்தியாவிற்கு அனுப்ப முறையான ஒரு கொள்கையைக் கொண்டிருந்த முதல் அருள்பணிச் சங்கம் அமெரிக்கன் போர்ட் என்ற ஏ.பி.சி.எஃப்.எம்.. அவ்விதம் அனுப்பப்பட்டவர்கள் முதலில் ஆண்கள் மட்டுமே. அவர்கள் முறைப்படி மருத்துவப்படிப்பு படித்து, மருத்துவப் பட்டம் பெற்றவர்களாக வும், அருள்பொழிவு பெற்ற திருச்சபைப் பணியாளராகவும் இருந்தனர். எனவே அவர்கள் மருத்துவத் திருப்பணியர் என அழைக்கப்பட்டனர். இவ்வாறு முதன் முத லாக வந்தவர் ஜான் ஸ்கடர் ஆவார். இவர் கி.பி.1836இல் சென்னையை வந்தடைந் தார். பின்னர் அவரின் இரண்டு மகன்கள் அவருடன் மருத்துவப்பணியில் சேர்ந்துக் கொண்டனர். அவருடைய மூத்த மகன் ஹென்றி ஸ்கடர் மருத்துவத் திருப்பணியராக கி.பி,1851இல் ஆற்காடு சென்று, அங்கு ஒரு மருத்துவ அருள்பணியைத் தொடங் கினார். கி.பி.1857இல் ஆற்காடு பகுதி அமெரிக்காவின் டச்சு சீர்திருத்த திருச் சபையின் அமெரிக்க ஆற்காடு அருள்பணிக் குழுவின் கீழ் வந்தது. அமெரிக்கன் போர்ட் மதுரையில் கி.பி.1837இல் தன் மருத்துவப் பணியைத் தொடங்கியது. எல்.எம்.எஸ். என சுருக்கமாக அழைக்கப்படும் லண்டன் அருள்பணியர் சங்கம்,

முன்பு தென் திருவாங்கூர் பகுதியிலும், தற்போது தமிழ் நாட்டின் கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள நெய்யூரிலும் கி.பி.1838இல் தனது மருத்துவப் பணியைத் தொடங்கியது. என்றாலும் மைய மருத்துவமனையையும், கிளைகளையும் உடைய, பரந்த மருத்துவப் பணிக்களமாகப் பின்னரே வளர்ந்தது. கி.பி.1840 முதல் அமெரிக்கன் பாப்திஸ்து சங்கம் தென் வங்காளத்தில் இரண்டு மருத்துவத் திருப்பணியரைப் பயன்படுத்தி வந்தது. முதல் பிராடஸ்டென்ட் மருத்துவர், மருத்துவ அருள்பணியராக பஞ்சாபிலுள்ள லூதியானாவிற்குக் கி.பி.1842இல் வந்தார்.

கி.பி.1858க்குப் பின் பிராடஸ்டென்ட் கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்கள் மருத்துவத் திருப்பணிக்கு அதிக முக்கியத்துவம் தர முற்பட்டன. ஸ்கார்ட்லாந்தின் ஐக்கிய பிரஸ்பித்தீரிய அருள்பணிச் சங்கம் கி.பி.1860 முதல் இராஜஸ்தானில் தன் மருத்துவப் பணியைத் தொடங்கியது. அவர்களின் மருத்துவப் பணியரான ஷூல்பிரட் (Shoolbred), வேலன் டைன் என்பவர்கள் கிராமங்களில் நோயுற்றிருக்கும் மக்களை நாடிச் சென்றனர். நோயுற்றோர் மருத்துவரை நாடி வரும் நிலையை மாற்றினர். நோயுற்றிருந்தவர்களுக்கு மருந்துகள் தந்ததுடன், அவர்களுக்கு நற்செய்தியையும் அறிவித்தனர். இம்முறையைத்தான் எல்லா இடங்களிலும் இருந்த கிறிஸ்தவ மருத்துவ அருள் பணியர் பின்பற்றினர். ஸ்காட்லாந்தின் ஐக்கிய பிரஸ்பித்திரிய அருள்பணிச் சங்கம் தனது அடுத்த இருபதைந்து ஆண்டு பணிக்காலத்தில் இராஜஸ்தானில் பேவார், ஆஜ்மீர் என்னுமிடங்களிலும், பின்பு பிற மற்ற பணியிடங்களிலும் முதலில் மருந்தகங்களையும், பின்பு மருத்துவ மனைகளையும் நிறுவினர். இதேப் போன்று ஸ்காட் லாந்தின் சுயாதீன திருச்சபை அருள்பணிச் சங்கம் கி.பி.1857க்கும் 1903க்கும் இடைப்பட்ட காலத்தில் தன்னுடைய முக்கியப் பணித்தளங்களில் மருந்தகங்களை நிறுவியது. பேசில் அருள்பணி அமைப்பு கி.பி.1885 முதல், கோழிக்கோடு, பெத் கெரே, உடுப்பி என்னும் இடங்களில் மருத்துவமனைகளை நிறுவியது. கி.பி.1889 முதல் அமெரிக்க பிரெஸ்பித்திரிய சங்கம் மிராஜ் என்னுமிடத்தில் ஒரு முக்கியமான மருத்துவமனையை நடத்தி வந்தது. "பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிக்குள் அப்பணி வீரியத்துடன் வளர்ந்தது, நோக்கத்தில் அதிகரித்தது." எடுத்துக்காட்டாக: "(பிளவுபடாத) இந்தியா முழுவதிலும் கி.பி. 1858இல் ஏழு மருத்துவ அருள்பணியர்களே இருந்தனர். கி.பி. 1882இல் இருபத்தெட்டு பேர் இருந்தனர்; ஆனால் கி.பி.1895இல் அவ்வெண்ணிக்கை நூற்று நாற்பதாகவும், கி.பி.1905இல் இருநூற்று எண்பதாகவும் உயர்ந்தது."[1] இந்திய மருத்துவர்களின் எண்ணிக்கையும் மெல்ல மெல்ல உயர்ந்தது. கி.பி.1895இல் 168 இந்திய மருத்துவர் இருந்தனர்.

## பெண்களிடையே:

செனானாக்களில்[2] (அந்தப்புரங்களில்) இருந்த பெண்களிடையேப் பணி யாற்றிவந்த அருள்பணியர் பெண்களுக்குக், குறிப்பாக செனானாக்களிலும், இல்லங்களிலும் அடைத்து வைக்கப்பட்டிருந்த பெண்களுக்கு மருத்துவ உதவியின் தேவையை வெளிச்சத்திற்குக் கொண்டுவந்தனர். விரைவில், மருத்துவக்கல்வி

பெற்ற பெண் மருத்துவர் இந்தியாவிற்கு வந்தனர். அமெரிக்க மெத்தொடிஸ்டு அருள்பணிச் சங்கம்தான் முதன் முதலில் முழுமையாக மருத்துவராகப் பயிற்சிப் பெற்ற பெண் மருத்துவரை இந்தியாவிற்கு அனுப்பியது. அவருடைய பெயர் கிளாரா ஸ்வெய்ன் என்பதாகும். உத்திரப்பிரதேசத்திலுள்ள பரேய்லி என்னுமிடத்தைத் தன் பணித்தளமாகக் கொண்டு கி.பி.1870இல் தம் மருத்துவத் திருப்பணியைத் தொடங்கினார். பரேய்லியில் இராம்பூர் நவாப் அன்பளிப்பாகத் தந்த நிலத்தில் கி.பி.1874இல் பெண்களுக்கான மருத்துவமனை ஒன்றைத் திறந்தார். கிறிஸ்தவரல் லாதவரிடமிருந்து கிறிஸ்துவ மருத்துவப்பணிக்கு அதன் தொடக்கத்திலேயே கிடைத்த தாராள உதவிக்கு இது ஒரு சிறந்த முன் உதாரணம். பின்னர் இதுபோன்று உதாரத் துவத்துடன் உதவி அளித்தவர் பலர் இருந்தனர். அமெரிக்க பிரிஸ்பித்தீரிய அருள் பணிச் சங்கம் அனுப்பிய டாக்டர் சாரா சேவார்ட் என்பவர் அலகாபாத்தில் கி.பி.1871 இல் தன் மருத்துவப்பணியைத் தொடங்கினார். சபைப் பாகுபாடுகளுக்கப்பாற்பட்ட பிரித்தானிய செனானா, திருமறை மருத்துவ அருள்பணிக் குழுவினரும், இங்கிலாந்து திருச்சபையின் செனானா அருள்பணிச் சங்கமும்[3] பெண்களிடையேத் தங்கள் பணிகளைக் கி.பி.1880 முதல் செய்யத் தொடங்கினர். இந்தியாவின் பல்வேறு இடங்களில் பெண்கள், சிறார்களுக்கான மருத்துவமனைகளை இவர்கள் கட்டியெழுப்பினர். பிரித்தானிய மெத்தோடிஸ்டுகளும் மருத்துவப்பணியில் ஈடுபட்டனர். அவர்களின் பணிக்களங்களில் ஒன்று முன்னாள் சிற்றரசான மைசூர் ஆகும். அவர்கள் தங்கள் மருத்துவமனைகளைக் குறிப்பாக பெண்களுக்கும், சிறார்களுக்குமென்று அமைத்தனர். கி.பி.1906இல் மைசூர் நகரத்திலும், ஹாசனிலும் தொடங்கப்பட்டவைகள் அவர்களின் மருத்துவப்பணிக்குச். சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

## இசுலாமியரிடையே:

இசுலாமியரை அணுக, மருத்துவப்பணி சிறந்த வழிமுறை என்று அருள் பணிச் சங்கங்கள் உணர்ந்தன. எனவே எண்ணிக்கையில் இசுலாமியர் அதிகமாக இருந்த வடமேற்கு இந்தியா, காஷ்மீர் பகுதிகளில் சி.எம்.எஸ்.,[4] ஸ்காட்லாந்து திருச் சபை அருள்பணிச் சங்கம், அமெரிக்க பிரிஸ்பித்தீரிய அருள்பணிச் சங்கம் ஆகியவை மருத்துவமனைகளைக் குறிப்பாகப் பெண்கள்-சிறார்களுக்கென அமைத்தனர். கி.பி.1864 இல் ஸ்ரீநகரில் சி.எம்.எஸ். அமைத்த மருத்துவமனை, இந்தியாவில் நன்கு அறியப்பட்டிருந்த மருத்துவமனைகளில் ஒன்றாகத் திகழ்ந்தது. பிளவுபடாத இந்தியாவின் பஞ்சாப் 'மருத்துவ அருள்பணியருக்கு விருப்பமான பகுதி' என ஜுலியஸ் ரிக்டர் என்பவர் எழுதியுள்ளார்.[5]

## மருத்துவப்பள்ளிகள்:

மருத்துவப்பணிக்குப் பயிற்சி பெற்ற மருத்துவர், செவிலியர், தாதியர், மற்ற, இன்னபிற பணியாளர் தேவைப்பட்டக் காரணத்தினால் தெரிவுசெய்யப்பட்ட சில

மையங்களில் கிறிஸ்தவ மருத்துவக்கல்லூரிகளையும், தாதியர் பயிற்சி நிலையங்களையும் நிறுவினர். இவைகளில் இருந்த மாணவர்கள் பல்வேறு அருள்பணிச் சங்கங்களினால் ஆதரிக்கப்பட்டிருந்தனர்; அங்கு அவர்கள் அரசு நடத்திய தேர்வுக்கு ஆயத்தப்படுத்தப்பட்டனர். "ஐக்கிய பிரஸ்பித்தீரிய அருள்பணிச் சங்கத்தைச் சேர்ந்த மருத்துவர் வாலென்டைன் என்பவர் ஆக்ராவில் கி.பி.1881இல் தொடங்கிய ஆக்ரா மருத்துவப்பணியின் பயிற்சி நிலையமே இந்நோக்கில் எழுந்த முதல் நிலையமாகும். அரசு மருத்துவப்பணியுடன் இணைந்த கிறிஸ்தவ விடுதிபோன்று இது செயல்பட்டது. இதன் மாணவர்கள் அரசு மருத்துவப்பள்ளிக்குச் சென்றனர். என்றாலும் நிறைவுபடுத்தும் நோக்கோடு அவர்களுக்கு மருத்துவ, மற்றும் பிற துறை தொடர்பான வகுப்புகள் அவர்கள் தங்கியிருந்த பயிற்சி நிலையத்திலும் நடத்தப்பட்டன. மிகுந்த ஆர்வ எதிர்பார்ப்புடன் தொடங்கப்பெற்ற ஒன்று கிறிஸ்தவப் பெண்களுக்கான வடஇந்திய மருத்துவப்பள்ளி. இது கி.பி.1894இல் லூதியானாவில் மருத்துவர் ஈடித் பிரௌன், செல்வி கிரீன்பீல்ட்[6] என்பவர்களால் பெண் மருத்துவர், மருந்து கலந்து கொடுப்பவர், தாதியர் ஆகியோரைப் பயிற்றுவிக்கத் தொடங்கப்பட்ட முழுநிலை மருத்துவப் பள்ளியாகவும், பஞ்சாப் பல்கலைக்கழகத்துடன் இணைக்கப்பட்டதாகவும் நிறுவப்பட்டது."[7] மிராஜ் என்னும் இடத்தில் மருத்துவர் வில்லியம் வான்லெஸ் என்பவர் ஒரு கிறிஸ்தவ மருத்துவப்பள்ளியை நிறுவினார். "இது அனேகமாக ஐம்பதாண்டுகளாக ஆடவரைப் பயிற்றுவித்த முக்கியப் பள்ளியாக இருந்து வந்துள்ளது," அமெரிக்க ஆற்காடு அருள்பணிச் சங்கத்தைச் சேர்ந்த மருத்துவர் ஐடா எஸ். ஸ்கடர் என்பவர் கி.பி.1918 ஆகஸ்ட் இரண்டாம் நாள் வேலூரில் பெண்களுக்கான மருத்துவப்பள்ளி ஒன்றைத் தொடங்கினார். வேறு பத்து அருள்பணிச் சங்கங்கள் ஆதரித்த ஐக்கிய நிறுவனமாக விரைவில் இது மாறியது.

கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்கள் தொடங்கியவைகள் 'மருத்துவப் பள்ளிகள்' என்று அழைக்கப்பட்டன. அரசு விதித்த விதிமுறைகளுக்கேற்ப தரத்தை அப்பள்ளிகள் உயர்த்தவில்லையாயின் அரசு அங்கீகாரத்தை அவை இழக்க நேரிடும் என்னும் அச்சுறுத்தல் மாநில அரசுகளிடமிருந்து வந்தது. இதனால் முதலில் பாதிப்புக்குள்ளானது வேலூர் மருத்துவப்பள்ளியே. மருத்துவர் ஐடா எஸ்.ஸ்கடர், தான் தொடங்கிய மருத்துவப்பள்ளி, கல்லூரியாக தரஉயர்வு பெற அதிக சிரத்தையெடுத்தார்.அதன் விளைவாக அது சென்னைப் பல்கலைக்கழகத்தின் எம்.பி. ( M.B. / Bachelor of Medicine) என்னும் முதல் இரண்டு ஆண்டு மருத்துவப் படிப்பிற்கு கி.பி.1942 இல் சென்னைப் பல்கலைக்கழகத்தின் இணைப்பினைப் பெற்றது. இதற்காக ஐடா எஸ்.ஸ்கடர் கடுமையாக ஓய்வின்றி உழைத்து, யு.எஸ்.ஏ., ஐரோப்பாவிலிருந்தும், இந்தியாவிற்குள்ளிருந்தும் நிதி ஆதரவையும், ஒத்துழைப்பையும் பெற்று, ஆடவர் பெண்டிர் இருபாலருக்குமான முழுநிலை மருத்துவக் கல்லூரியாக கி.பி.1945இல் நிறுவினார். சூழலில் மாற்றம் ஏற்பட்டதால், மிராஜில் இருந்த கிறிஸ்தவ மருத்துவப் பள்ளி மூடப்பட்டு, வேலூர் கிறிஸ்தவ மருத்துவக் கல்லூரியுடன் இணைக்கப்பட்டது. லூதியானாவில் இருந்த ஒன்று,

வேலூரைப் பின்பற்றி, ஆடவர்- பெண்டிர் இரு பாலருக்குமான கல்லூரியாக மலர்ந்தது.

## செவிலியர் பயிற்சி:

கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்கள் செவிலியர் பயிற்சிக்கும், அத்துறைக்கும் ஆற்றியுள்ள பணி சிறப்பானதொன்றாகும். தொடக்கத்தில் செவிலியர் பணியை இந்தியர் பொதுவாக வரவேற்கவில்லை. "பல ஆண்டுகளாக ஆங்கிலோ -இந்தியரும், இந்தியக் கிறிஸ்தவரும் மட்டுமே செவிலியர் பணியை ஏற்றவர்களாக இருந்தனர். கி.பி.1940இல் இந்தியாவில் இருந்த செவிலியரில் 90% கிறிஸ்தவர்கள் எனவும், அவர்களில் 80% கிறிஸ்தவ மருத்துவமனைகளில் பயிற்றுவிக்கப்பட்ட வர்கள் எனவும் கணிக்கப்பட்டுள்ளது." [8] கி.பி.1940க்குப் பின் மற்ற சமயத்தைச் சேர்ந் தவர்களும், பிற சமுதாயத்தினரும் மருத்துவப்பணியில் இணையத்தொடங்கினர். அரசாங்கமும் பெரிய அளவில் இப்பணியில் நுழைந்துள்ளது. எனினும் அரசு மருத்துவமனைகளைவிட கிறிஸ்தவ மருத்துவமனைகளும், மற்ற சமூகத்துப் பணியாளர்களைவிட கிறிஸ்தவ மருத்துவர்களும், தாதியரும் சிறந்த முறையில் பணியாற்றுவதாக போற்றப்பட்டு வந்துள்ளது.

## சிறப்பு மருத்துவப்பணி:

மருத்துவத் துறையின் சில தனிப் பிரிவுகளில் கிறிஸ்தவ மருத்துவப்பணி அடியெடுத்துவைத்துள்ளது. அவற்றுள் ஒன்றாகக் கண் மருத்துவமனைகளைக் குறிப்பிடலாம். பீகாரின் பம்தா, மத்தியப் பிரதேசத்தின் ஜலால்பூர்-ஜட்டன், முங்கேலி[9] ஆகிய இடங்களில் இருந்தவைகள் அறுவை சிகிட்சைக்கும், கண் நோய்கள் மருத்துவ முறைக்கும் நன்கு அங்கீகரிக்கப்பட்டவைகளாக இருந்துள்ளன. சில, குறிப்பாக நெய்யூர், வேலூர், லூதியானா ஆகிய இடங்களிலுள்ள மருத்துவமனை கள் அறுவை சிகிச்சைக்குப் புகழ் பெற்றவையாயின.

பிராடெஸ்டென்ட் மருத்துவப்பணி எலும்புருக்கி நோய் பேணகங்கள், தொழு நோயாளர் இல்லங்கள், மனநல மருத்துவமனைகள் போன்றவற்றை நிறுவுவதிலும், நடத்திவருவதிலும் செயல்பட்டு வந்துள்ளது. அண்மைக் காலமாக உள நல மருந்தகங்களை நிறுவுவதிலும் ஈடுபட்டுள்ளது.

இந்தியாவில் எலும்புருக்கி நோய் பேணகங்களில் முன்னோடியாக ஒரு கிறிஸ்தவ நிறுவனம் உள்ளது. ஆந்திர மாநில ஆரோக்கியவரம் என்றுமிடத்தில் அமைந்துள்ள ஐக்கியக் கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்களின் எழும்புருக்கி நோய் பேணகமே அது. கி.பி.1915இல் பதினான்கு கிறிஸ்தவ அருள்பணிச்சங்கங்கள் இணைந்து ஐக்கிய நிறுவனமாக அதனை நிறுவினர். மருத்துவ முறைக்குமட்டுமல்லாது, ஆய்விற்கும் ஒரு முன்னோடி நிறுவனமாக உள்ளது. இதன் முதல் மேலாளர் டேனிஷ் அருள் பணிச் சங்கத்தைச் சேர்ந்த மருத்துவர் சி.ஃபிரைமெட் மோலர்.[10] இவரைத் தொடர்ந்து

மருத்துவர் பி.வி.பெஞ்சமின் மேலாளர் ஆனார். அவ்விருவரையும் இந்திய அரசு எலும்புருக்கி நோய் ஆலோசகராகக் கொண்டிருந்தது. ஆரோக்கியவரம் தவிர வேறு பதினொரு பேணகங்கள் இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் உள்ளன.

தொழு நோயாளிகளுக்கான காப்பகம் ஒன்றை கல்கத்தாவில் நிறுவ வில்லியம் கேரி தூண்டுதலாக இருந்தார். பின்னர் இந்தியா வந்த அருள்பணிச் சங்கங்கள் தொழு நோயாளருக்கு பணியாற்றுவதை ஒரு சிறப்புத் தொண்டாகக் கருதினர். என்றாலும் இப்பணியில் ஈடுபட்ட குறிப்பிடத்தக்க அமைப்பு ' தொழு நோயாளியருக்குத் திருப்பணி ' என்பதாகும். இது உத்தேசமாக கி.பி.1874இல் அயர்லாந்தின் டப்ளின் நகரில் வெல்லெஸ்லி பெய்லி என்பவர் தொடர் வேண்டுதலின் பேரில் பல நாடுகளைத் தழுவிய, பல திருச்சபைப் பிரிவுகளை உள்ளடக்கிய சங்கமாகத் தொடங்கப்பட்டது.[11] வெல்லெஸ்லி பெய்லி போலீஸ் படையில் சேரும் நோக்குடன் இந்தியாவிற்கு வந்தார். இங்கு வந்தபின் மனம் மாறி, அமெரிக்க பிரிஸ்பித்தீரிய அருள் சங்கத்தின் அருள்பணியராக அம்பாலாவில் பணியாற்றத் தொடங்கினார். 'தொழு நோயாளியருக்குத் திருப்பணி சங்கம்' இந்தியாவில் இருபத்தாறு தொழு நோயாளர் நிறுவனங்களை நடத்தி வருகின்றது, அத்துடன் முப்பத்து நான்கு பிற இல்லங்களையும், மருந்தகங்களையும் ஆதரித்து வருகின்றது. " அவைகளில் பெரிய குடியிருப்புகள், எடுத்துக்காட்டாக மேற்கு வங்கத்திலுள்ள புரூலியா, ஆந்திர மாநிலத்திள்ள டிச்பள்ளி என்பவை, அவைகளில் இருந்தோருக்கு உணவு, உறைவிடம், மருத்துவ கவனிப்பு ஆகியவற்றை நல்கியதுடன், தாங்கள் நடத்தி வந்த பெரிய விவசாயப் பண்ணைகள், பால் பண்ணைகளில் தொழு நோயாளிகளுக்குப் பணிசெய்ய வாய்ப்பு தந்தனர்; மேலும் அவர்களுக்குப் பணி வழி சிகிச்சை, கல்வி, சமுதாயப் பணிகள் ஆகியவற்றை நன்கு திட்டமிட்டு நடத்தினர். தொழு நோய் எதிர்ப்பு செயல் முறைக்கு வேலூர் அருகிலுள்ள கரிகிரி என்னுமிடத்திலுள்ள இச்சங்கத்தின் ஆய்வு – பயிற்சி மையம் தொடர்ந்து சிறந்த பங்களிப்பு அளித்துவருகின்றது."[12]

## சி.எம்.எ.ஐ.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்களிடையே இணைந்து செயல்படுவதும், திருச்சபைகளிடையே உதவியளிப்பதும் அதிகரித்துள்ளன. இந்தியாவிலிருந்த மருத்துவ அருள்பணியர் தங்கள் அனுபவங்களைப் பகிர்ந்துகொள்ளவும், ஆலோசனைகள் பெறவும் ஒன்றிணைந்து வருவது தேவை என உணர்ந்து, கி.பி.1905இல் மருத்துவ அருள்பணியர் கூட்டமைப்பு/சங்கம் ஒன்றை ஏற்படுத்தினர். கி.பி.1914இல் தேசிய அருள்பணியர் மன்றம் தொடங்கப்பட்டபோது அதன் கீழ் மருத்துவர் கூட்டமைப்பு வந்தது. பின்பு கி.பி.1926இல் அது இந்திய கிறிஸ்தவ மருத்துவச் சங்கம்[13] என்று பெயரிடப்பட்டது. இந்திய தேசியக் கிறிஸ்தவ சபைகள் மன்றத்தின் மருத்துவப்பணி குழுவாகச் செயல்படுகிறது. இந்த சி.எம்.எ.ஐ.யின் நோக்கங்களை ஏற்கும் கிறிஸ்தவ மருத்தவர் எவரும் அதன் அங்கத்தினராகலாம். கி.பி.1925 முதல் 1927 வரை அது இந்தியாவில் மருத்துவ

அருள்பணி குறித்த புள்ளிவிவரத்தைச் சேகரித்தது. அதன் அறிக்கையைக் கி.பி.1929இல் வெளியிட்டது. கி.பி.1932இல் வெளியிடப்பட்ட **இந்தியாவில் நலமளிக்கும் திருப்பணி**[14] என்னும் கையேட்டின் அடித்தளமாக அந்த அறிக்கை அமைந் திருந்தது. இந்தியாவிலுள்ள கிறிஸ்தவ மருத்துவத் துறைக்கு நலவுரையும், கருத் துரையும் வழங்கும் மத்திய ஆலோசனைக் குழுவாக சி.எம்.எ.ஐ. செயல்படுகிறது. தன்னுடைய இதழ்கள், மாநாடுகள், செயலர்களின் செயல்கள் வழி, தன் சிந்தனை களையும், பணிசார்ந்த செய்திகளையும் பகிர்ந்துகொள்கிறது. மேலும் மருத்துவத் துறை சந்திக்கும் நாளார்ந்த சிக்கல்களைப் பகிர்ந்துகொள்ளவும், திட்டங்கள் தீட்டவும் ஒரு பொது மன்றமாகச் செயல்படுகிறது. மருத்துவக்கல்வியின் பல்வகைத் துறை களில் பயில பணஉதவி தருகின்றது. கி.பி.1931 முதல் செவிலியருக்கான் துணை அமைப்பு ஒன்றினைக் கொண்டுள்ளது. “சி.எம்.எ.ஐ.யின் கண்ணோட்டம் என்ன வெனில் நலமளிக்கும் திருப்பணி என்பது நற்செய்திப்பணியுடன் இணைக்கப்பட் டுள்ள, ஆனால் முக்கியமில்லாமல் சேர்க்கப்பட்டுள்ள ஒன்று அல்ல; ஒருவேளை சமய மாற்றத்திற்காகச் சேர்க்கப்பட்டிருக்கலாம். ஆனால் அதுவே கிறிஸ்தவத் திருச்சபையின் அடிப்படைப் பணியின் பகுதியாக உள்ளது.” [15]

## முடிவுரை:

இந்தியா சுதந்திரம் பெற்ற நாள் முதல், இந்திய அரசு மருத்துவப்பணியில் மிகப் பெரிய அளவில் ஈடுபட்டு வருகிறது. அதே போன்று அநேக பிற சமய அமைப்பு களும், தனியார் நிறுவனங்களும், சங்கங்களும் மருத்துவப்பணியில் கவனம் செலுத்திவருகின்றன. இச்சூழலில் கிறிஸ்தவ மருத்துவமனைகளின், சுகமளிக்கும் பணியில் ஈடுபட்டுள்ள தனிக் கிறிஸ்தவ மருத்துவர்களின் தனித்தன்மையையும், சிறப்பு அம்சங்களும் எவ்விதம் இருக்கக்கூடும்? பணியில் தரம், உறவுகளில் இனிமை, தனிக்கவனம், நோயுற்றோரைப் பரிவுடன் அணுகி, மருத்துவம் பார்த்தல் ஆகியவற்றைக் கிறிஸ்தவ மருத்துவரும், மருத்துவமனைகளும், நம் நாட்டுக்களிக் கும் பங்களிப்பாகத் தரலாம்.

## *End Notes*

1 Julius Richter, **A History of Missions in India.** pp.347, 354; C.B.Firth, **An Introduction to Indian Church History.** p. 206.

2 Zenana, a Persian word, means the part of a house set apart exclusively for the females of a family: harem.

3 Undenominational Zenana and Bible Medical Mission from Britain and the Church of England Zenana Missionary Society.

4 Church Missionary Society (of the Church of England).

5 Julius Richter. **Ibid.** p.352.

6 Dr. Edith Brown and Miss. Greenfield.

7 C.B.Firth, **op.cit.** p.207.

[8] H.C. Perumalil & E.R.Hambye, (eds.) **Christianity in India: A History in Ecumenical Perspective.** p. 276.

[9] Bamdah (Bihar), Jalalpur – Jattan and Mungeli (M.P.).

[10] Dr.C. Frimedt Moeller of the Danish Mission.

[11] Mission to Lepers, an international and inter-denominational society formed at the repeated requests of Wellesley Bailey in Dublin, Ireland around 1874.

[12] C.B.Firth, **op.cit.** p.210

[13] Christian Medical Association of India.

[14] **The Ministry of Healing in India,** 1932.

[15] C.B.Firth, **op.cit.** p.211.

## இயல் ஐந்து

# பெண்கள், சிறார், உயர்வும், கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்களும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இந்தியாவுக்கு வந்த கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்களும், நற்செய்திப் பணியாளரும் இந்திய சமுதாயத்தை அவர்கள் கண்ட நோக்கில் சீர்திருத்துவது என்ற தீவிரத்துடன் செயல்பட்டனர். இத்தகையோருள் முதன்மையான முன்னோடி பிரித்தானிய பாப்திஸ்து நற்செய்தியாளர் வில்லியம் கேரி ஆவார். இவர் தன் அருள்பணியைக் கி.பி.1800இல் செராம்பூரில் தொடங்கினார். இவருக்கு ஜாஷ்வா மார்ஷ்மென் என்ற ஆசிரியரும், வில்லியம் வார்ட் என்ற அச்சுப்பணியரும் உடன் பணியாளர்களாக இருந்தனர். இம்மூவரும் செராம்பூர் மூவர் என்று பொதுவாக அழைக்கப்பட்டனர்.

### சிறார் பலி:

கி.பி.1802 ஆகஸ்ட் இருபதாம் ஆம் நாள் இந்தியாவின் கவர்னர்- ஜெனரலாக இருந்த வெல்லெஸ்லி பிரபு சாவ்காரா / சாகர் தீவுப் பகுதியிலும், பிற இடங்களிலும் சிறார்களை மூழ்கடித்தோ, சுறாக்களுக்கு எறிந்தோ நடத்தப்பட்ட சிறார் பலி பழக்க வழக்கத்தைத் தன் ஆணையின் மூலம் தடை செய்தார்.[1] அரசு எடுத்த இம்முடிவிற்கு பின்னணியாக இருந்தவர் வில்லியம் கேரி என்பர். ஏனெனில் கங்கை நதியில் குழந்தைகளைப் பலியிடும் வழக்கம் குறித்துக் கண்டறிய வெல்லெஸ்லி பிரபு கி.பி.1801இல் வில்லியம் கேரியைக் கேட்டிருந்தார். கேரி அளித்த அறிக்கையின் அடிப்படையில் அப்பழக்கம் தடை செய்யப்பட்டது.[2]

### கைம்பெண் எரிப்பு:

கி.பி.1818இல் செராம்பூர் மூவர் செய்தித்தாள் / பத்திரிக்கைத் துறையில்

நுழைந்தனர். ஜாஷ்வா மார்ஷ்மெனும் அவரது மைந்தனும் வங்காள மொழியில் **சமாசார் தர்பன்** என்ற வாரப் பத்திரிக்கையும், **தி பிரென்ட் ஆஃப் இந்தியா** (இந்தி யாவின் நண்பன்) என்கிற ஆங்கில மொழி திங்கள் இதழையும் வெளியிட்டனர். இவ் விரண்டு பத்திரிக்கைகளும் செராம்பூர் மூவர் கைகளில் சமுதாயச் சீர்திருத்தத்தை ஊக்குவிக்கும் கருவிகளாக அமைந்தன. அவர்களின் கவனத்தைக் கவர்ந்த ஒன்று 'சதிசககமன' என்ற இறந்த கணவரின் சிதையில் அவரின் விதவையான மனை வியை உயிருடன் எரிக்கும் பழக்கமாகும். இதைச் சுருக்கமாக ' சதி ' என்றும் அழைப் பர். ' உடன் கட்டை ஏறுதல்' என்றும் அறியப்பட்டுள்ளது. முதன் முதலில் அந்நிகழ்ச் சியைக் கண்ட விவரத்தை தன்னுடைய தினக்குறிப்பேட்டில் கி.பி.1799 ஏப்ரல் முதல் நாள் குறிப்பில் எழுதிவைத்துள்ளார்.[3] அது முதல் அப்பழக்கத்தை எதிர்த்துக் குரல் எழுப்பலானார்..." **தி பிரென்ட் ஆஃப் இந்தியா**, தன்னுடைய முதல் இதழில் விதவை- எரிப்பு குறித்த ஒரு கட்டுரையைத் தாங்கியிருந்தது. அக்கட்டுரை அந்நிகழ்வின் பின்னணியத்தையும், உண்மையான தகவல்களையும் உடைய சக்தி வாய்ந்த, அறிவுறுத்தும் கூற்றாக இருந்தது. அப்பத்திரிக்கை பொது மக்களிடையே விதவை எரிப்பு நிகழ்வுகளை, உள்ளது உள்ளபடியே தொடர்ந்து தெரிவித்து வந்தது."[4] இதன் விளைவாக அப்பழக்கத்திற்கெதிரான எதிர் கருத்து வளர்ந்தது. இராஜாராம் மோகன் ராயும், அவரைப் போன்று புத்தொளி பெற்ற சில இந்துக்களும் அப்பழக்கத்திற் கெதிராக குரல் எழுப்பினர். அதன் விளைவாக கி.பி.1829இல் வில்லியம் பென்டிங் பிரபு பி.கி.வியாபாரக் கம்பெனியின் எல்லைகளுக்குள் 'சதி ' பழக்கத்தைத் தடைசெய்து ஆணை பிறப்பித்தார்.

### செனானா பெண்களிடையே:

கி.பி.பத்தொன்பதாம் நூற்றாண்டின் முன்பாதியில் செனானாக்களில் இருந்த பெண்களை அருள்பணி மூலம் தொட முயற்சிகள் எடுக்கப்பட்டன. கி.பி.1834இல் அறிவர் டேவிட் அபியீல் என்பவரின் தூண்டுதலின் பேரில் இங்கிலாந்தில் ' கிழக்கில் பெண் கல்வி விரிவாக்கச் சங்கம் '[5] என்ற அமைப்பு உருவாக்கப்பட்டது. இச்சங்கம் கி.பி.1842 இல் செல்வி பார்ட்டன் என்பவரை மும்பாயில் எவ்வித உரிமையும் இல்லா மல் வாழ்ந்த பெண்கள் மத்தியில் பணியாற்ற அனுப்பியது. கி.பி.1852இல் பெரு மாட்டி கின்னார்ட் (Lady Kinnaird) என்பவர் தோவாகர் ( Dowager) என்னுமிடத்தில் பெண்களுக்கான பள்ளி ஒன்றைத் தொடங்கினார். இதன் விளைவாக இங்கிலாந்து திருச்சபையின் செனானா அருள்பணிச் சங்கம், செனானா, திருமறை மருத்துவ அருள்பணி அமைப்பு என்பவை தொடங்கப்பட்டன. கி.பி.1867இல் பாப்திஸ்து செனானா அருள்பணிச் சங்கம் தன் பணியைத் தொடங்கியது. பெண்களின் நிலையை உயர்த்த / மேம்படுத்த எடுக்கப்பட்ட முயற்சிகள் இவை.

### பெண் சிறார்:

மதுவிலக்கு பணியிலும் கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்கள் ஈடுபட்டன. இந்திய

தேசிய பெண்களுக்கான கிறிஸ்தவ மதுவிலக்கு ஒன்றியம்[6] என்னும் அமைப்பு பெண்களின் முன்னேற்றத்திற்கு முனைப்புடன் செயல்பட்டது. அது கி.பி.1896இல் புனேயில் ஒரு கூட்டத்தைக் கூட்டியது. அதில் பெண்சிறார்கள் தகாத வழியில் பயன் படுத்தப்படுவதைக் குறித்த தன் கவலையை வெளிப்படுத்தியது. பெண் சிறார் மனிதத் தன்மையற்ற பழக்கங்கள், கெட்ட நடத்தைகள் ஆகியவற்றிலிருந்து பாதுகாக்கப் படும் நோக்குடன் கல்கத்தாவில் கி.பி.1898இல் இந்தியாவிலுள்ள சிறாரைப் பாது காக்கும் சங்கம்[7] என்பது தொடங்கப்பட்டது.

## ஏமி கார்மைக்கேலும், தேவதாசிகளும் :

இந்து சமுதாயத்தில் பரவலாக இருந்த ஒரு முறைமை/ ஒழுங்கு, தேவதாசி முறைமை என்பது. இதன்படி பெற்றோர் தங்களின் ஒரு குழந்தையைச், சாதாரண மாக ஒரு பெண் குழந்தையைக் கடவுளுக்கு அர்ப்பணம் செய்வர்; அக்குழந்தை தேவதாசி என அழைக்கப்பட்டது. பிராடஸ்டென்ட் அருள்பணியாரில் ஒருவரான ஏமி கார்மைக்கேல் என்பவர் தேவதாசி முறையை, ஒரு சமுதாயத் தீமையாகக் கண்டார்.

ஏமி கார்மைக்கேல் (1867 – 1951) இந்தியாவிற்கு கி.பி.1895இல் இங்கிலாந்து திருச்சபையின் செனானா அருள்பணிச் சங்கத்தின் அருள்பணியராக வந்தார். கி.பி.1900 முதல் டோனாவூர் (திருநெல்வேலி மாவட்டம், தமிழ்நாடு) என்னுமி டத்தைத் தன் பணிக்களமாகக் கொண்டிருந்தார். கி.பி.1901 மார்ச் திங்களில் பண்ணைவிளை (திருநெல்வேலி மாவட்டம், தமிழ்நாடு) என்னுமிடத்திற்கு அருகில் இருந்த கிராமமொன்றைச் சேர்ந்த ஏழு வயது பெண் பிள்ளையை ஒரு தேவதாசி இல்லத்திலிருந்து மீட்கும் தருணத்தைப் பெற்றார். தேவதாசிகள் என அழைக்கப்பட்ட கோவில் பெண்களை மீட்கும் அவரது பணிக்கு அதுவே தொடக்கமாக இருந்தது.

தேவதாசி முறை என்றால் என்ன, அது எவ்விதம் செயல்படுகிறது எனக் கற்றறிந்தார். அதை அவர் ' தெய்வீகமாக்கப்பட்ட பாவம் ' (deified sin) என்று அழைத் தார். அவருடைய தலைமையின் கீழ் செயல்பட்ட இந்தியப் பெண் பணியாளர்களின் உதவியுடன் தேவதாசிகளை மீட்கத் தொடங்கினார். இத்தகையப் பணி அவருக்குப் பல சிக்கல்களை ஏற்படுத்தினாலும், அவர் அதில் விடாப்பிடியாக இருந்தார். பல நேரங்களில் அவர் நீதிமன்றங்களுக்கும் செல்ல வேண்டியிருந்தது. தேவதாசிப் பெண்களின் மோசமான நிலையைத் தன் எழுத்துக்களின் / புத்தகங்களின் வழி யாகத் தூக்கிக்காட்டினார். இது அரசு அதிகாரிகள், அருள்பணியர் உட்பட்ட அனேகரு டைய சிந்தனையைத் தாக்கியது. அதன் விளைவாக விரைவில் தேவதாசி முறை சட்டவிரோதமானது என அறிவிக்கப்பட்டது.

கி.பி.1925இல் சி.இ.இசெட்.எம்.எஸ். (CEZMS) சின் அருள்பணியர் நிலையி லிருந்து ஏமி, தன்னை, விலக்கிக்கொண்டார். அதன் விளைவாகக் கி.பி.1926இல் டோனாவூர் தோழமைக்குழு (Dohnavur Fellowship) என்பதை உருவாக்கினார். கி.பி.1927இல் அது சட்டப்படி பதிவு செய்யப்பட்ட அமைப்பானது. இது டோனா

வூரிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் உள்ள பெண்சிறார் மற்றும் பெண்களின் சமுதாய உயர்விற்கான பல செயல்த் திட்டங்களில் ஈடுபட்டுள்ளது. தொடர்ந்து தேவதாசி பிள்ளைகளைக் காப்பற்றுதல், கைவிடப்பட்ட சிறார்களைத் தத்தெடுத்தல் ஆகியப் பணிகளிலும் ஈடுபட்டு வருகின்றது.[8] துர்பாக்கியமாக, இந்திய வரலாற்று நூல்களில் ஏமி கார்மைக்கேலின் சீர்திருத்தப்பணிகள் இடம் பெறவில்லை.

## தோள் சேலைப் புரட்சி:

மரபின்படி, திருவிதாங்கூரிலிருந்த கீழ் சாதியைச் சேர்ந்த சாணார் பெண்டிர் தங்கள் இடுப்புக்கு மேல் ஆடை அணிதல் கூடாது என்ற விதியை உயர் சாதியினர் விதித்திருந்தனர். தென் திருவிதாங்கூரில் பணியாற்றிக்கொண்டிருந்த எல்.எம்.எஸ். நற்செய்திப்பணியாளரின் பணியினால் சாணார் இனத்தார் கிறிஸ்தவரானபோது, அத்திருப்பணியாளர் சாணார் இனப்பெண்களை மேலாடை / தோள் சேலை அணியக் கேட்டுக்கொண்டனர். தங்கள் உடம்பின் மேல் பகுதியை / மார்பகத்தை மறைக்க சாணார் பெண்கள் முற்பட்டவுடன், மேல் சாதி மக்கள் பெரும் கலவரத்தில் ஈடுபட்டனர். இதற்குத் தோள் சேலைப்புரட்சி / எழுச்சி எனப்பெயர். அங்கிருந்த நற்செய்திப் பணியாளர் தாங்கள் அறிந்திருந்த மேற்கத்திய அளவீடுகளுக்கேற்ப உந்துதல் பெற்றுத் தோள் சேலை அணிந்திடக் கூறியபோதிலும், அது ஒரு சமுதாய இயக்கமாக மாறியது. இறுதியாக, சூழலைப் புரிந்துகொண்ட சென்னை மாநில ஆளுநர் ஜி.இ.டிரெவெல்யன் (G.E.Trevelyan) அக்காரியத்தில் தலையிட்டு, திரு விதாங்கூரில் இருந்த ஆங்கில அரசின் பிரதிநிதியிடம் (British Resident) சாணார் பெண்டிர் சார்பில் செயல்பட வேண்டியதின் தேவையைத் தெரியப்படுத்தினார். இதனால் கி.பி.1859இல் திருவிதாங்கூர் அரசு ஓர் ஆணையைப் பிறப்பித்தது. அதன்படி மலபார் பகுதிகளில் இசுலாமியப் பெண்கள் அணியும் ஆடைக்கொத்த, 'குப்பாயம்' என்னும் மேலாடையைச் சாணார் சாதிப் பெண்கள் அணிய அனுமதி வழங்கப்பட்டது.[9]

இத்தகைய செயல்கள், தென்னிந்தியாவிலிருந்த தாழ்த்தப்பட்ட சாதியினருக்கும், ஒதுக்கப்பட்ட சாதியினருக்கும் மன உறுதியையும், ஊக்கத்தையும் தந்தன. மேல் சாதியினர் விதித்திருந்த அடிமை விலங்குகளை உடைத்தெறிந்து, மதிப்புடனும், சுயமரியாதையுடனும் வாழக்கூடிய வாழ்வைப்பெறும் உரிமைக்காகப் போராட அச்செயல்கள் வழி வகுத்தன.

## பெண்கள் கல்வி:

பிராட்டெஸ்டன்ட் அருள்பணி இயக்கங்கள் இந்தியாவில் தம் திருப்பணியின் தொடக்கம் முதலே பெண்களுக்குக் கல்வியின் தேவையை உணர்ந்திருந்தனர். தொடக்க ஆண்டுகளில் நற்செய்திப்பணியாளரின் மனைவியரும், மிகச் சில தனிப்பெண்கள், அருள்பணியராகவோ, தங்கள் தனிப் பொறுப்பிலோ பெண்

பிள்ளைகளுக்கான பள்ளிக்கூடங்களைத் தொடங்கினர். கிராமப்புறப் பள்ளிக் கூடங்கள் மூலமாகவும் பெண் கல்விக்கு முன்னோடியாகத் திகழ்ந்த திருமதி. அன்னாள் மார்ஷ்மென் செராம்பூர் அருள்பணி வரலாற்றில் அதிகமாக நினைவுகூரப் படுகிறவர். செல்வி மேரி ஆன் குக் என்பவர் கல்கத்தாவில் கி.பி.1821இல் பெண் பிள்ளைகளுக்கான கல்விக்கூடங்களை நிறுவினார்.

பெண்கள் அருள்பணியராக கி.பி.1860லிருந்து தான் அனுப்பிவைக்கப்பட்டனர். எனவே பத்தொன்பதாம் நூற்றாண்டின் பின்பகுதியில் தான் பெண்கள் கல்விக்கு, அதிலும் குறிப்பாக பெண்களுக்கான உயர் கல்விக்கு முதன்மையிடம் அளிக்கத் தொடங்கினர். உண்மையில், கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்கள் தான் பெண்கள் கல்வித்துறையில் முன்னோடிகள். கி.பி.1870 முதல் பிராடெஸ்டென்ட் அருள்பணி இயக்கங்கள் இந்தியாவின் பல பகுதிகளிலும் பெரும் அளவில் பெண்களுக்கான பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும் நிறுவினர். சாராள் தக்கர் கல்லூரி, பாளையங்கோட்டை; இசபெல்லா தோபர்ன் கல்லூரி, லக்னோ; பெண்கள் கிறிஸ தவக்கல்லூரி, சென்னை என்பவை அவற்றுள் சில. இந்தியப் பல்கலைக்கழகங் களின் முதல் பெண் பட்டதாரிகளில் சிலர் கிறிஸ்தவக் கல்லூரிகளில் பயின்றோரே. கிறிஸ்தவர்கள் பெண்களுக்கான கல்விப்பணியைத் தொடங்கி நடத்தி வந்ததினால், உந்துதல் பெற்ற அரசும், பிற நிறுவனங்களும் அத்துறையில் இறங்கின. கோகலே போன்ற சமூகச் சீர்திருத்தவாதிகள் பெண்களுக்கு மேம்பட்ட கல்வி வாய்ப்புகளை அளிக்கவேண்டியதின் அவசியத்தை, இந்து சமுதாயத்தின் முன் வைத்தனர். கி.பி.1900 ஆண்டுக்குள் ஆரிய சமாஜம், பிரம்ம ஞான சபை, இராமகிருஷ்ணா மிஷன், இன்னும் பிற அமைப்புகள் பெண்களுக்குக் கல்வி புகட்டுவதில் ஆர்வம் காட்டத்தொடங்கின.

### மருத்துவப்பணி:

மருத்துவத் துறையில், குறிப்பாகப் பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் மருத்துவப்பணியாற்றியதில் கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்களின் பங்களிப்பு சிறப்பானதாக இருந்துள்ளது. பெண்களுக்கான தனிப்பட்ட மருத்துவத் தேவையை வெளிச்சத்திற்குக் கொண்டு வந்தவர்கள் ஜெனானா பணியாளர்களே. இதன் விளைவாக பெண் மருத்துவ அருள்பணியர் இந்தியாவிற்கு வரத்தொடங்கினர். அமெரிக்க பேராயராளுகை மெத்தோடிஸ்டு அருள்பணிச் சங்கம் தான் முதன் முதலில் முழு தகுதி பெற்ற பெண் மருத்துவரை இந்தியாவிற்கு அனுப்பியது. அவர் பெயர் கிளாரா ஸ்வெய்ன் (Clara Swain ) என்பது. அவர் கி.பி.1870இல் பரேய்லியில் தன் மருத்துவப் பணியைத் தொடங்கினார். கி.பி.1874இல் இராம்பூர் நவாப் இனாமாகத் தந்த இடத்தில் அங்கொரு மருத்துவமனையைத் திறந்தார். கிறிஸ்தவர் அல்லாதோரிடமிருந்து மீண்டும் மீண்டும் மருத்துவ அருள்பணிக் குழுக்கள் பெற்ற தாராளமான உதவிக்கு, அதுவே தொடக்ககால எடுத்துக்காட்டு.

அமெரிக்க மூப்பராளுகை/பிரிஸ்பித்தீரிய அருள்பணிச் சங்கம் அனுப்பிய சாரா சேவர்டு ( Sarah Seward ) கி.பி.1871இல் அலகாபாத்தில் தன் மருத்துவப்பணியைத் தொடங்கினார். இரண்டு பிரித்தானியச் சங்கங்கள் இணைந்து தொடங்கிய, திருச் சபைப் பகுப்பற்ற, ஜெனானா, திருமறை மருத்துவ அருள்பணிக் குழுவும், இங்கிலாந்து திருச்சபையின் ஜெனானா அருள்பணிச் சங்கமும் கி.பி.1880 முதல் பெண்களி டையே தங்கள் பணியைத் தொடங்கின; பெண்களுக்கும், சிறாருக்கும் நாடு முழு வதிலும் அநேக இடங்களில் மருத்துவமனைகளைக் கட்டினர். டபிள்யூ.எம்.எம்.எஸ். என்ற பிரிட்டிஷ் மெத்தோடிஸ்ட் அருள்பணிச் சங்கம் முன்னாள் மைசூர் அரசரின் பகுதிகளில் பணியாற்றத் தொடங்கிய பின், மைசூர் நகரிலும், ஹாசனிலும் கி.பி.1906இல் தொடங்கிய மருத்துவமனைகள் பெண்கள் சிறார்கள் மருத்துவ மனைகளாகவே இருந்தன.

இசுலாமியப் பெண்களை நற்செய்தியுடன் அணுகுவதற்கு மருத்துவப் பணி சிறந்த வழிமுறை என மருத்துவ அருள்பணிச் சங்கங்கள் கருதின. எனவே இசுலா மியர் எண்ணிக்கையில் அதிகம் இருந்த வடமேற்கு இந்தியாவிலும், காஷ்மீரிலும் சி.எம்.எஸ், ஸ்காட்லாந்து திருச்சபை அருள்பணிச் சங்கம், அமெரிக்க பிரிஸ்பித்தீரிய அருள்பணிச் சங்கம் ஆகியவைப் பல இடங்களில் பெண்கள்-சிறார்கள் மருத்துவ மனைகளை எழுப்பின. ஸ்ரீநகரில் கி.பி.1864இல் சி.எம்.எஸ். தொடங்கிய மருத்துவ மனை இந்தியாவில் குறிப்பிடத்தக்க மருத்துவமனைகளில் ஒன்றாகத் திகழலாயிற்று.

மருத்துவத் திருப்பணிக்குப் பயிற்சிப் பெற்ற மருத்துவரும், செவிலியரும், பிற மருத்துவப்பணித்தொண்டரும் தேவைப்பட்டக் காரணத்தினால் சில குறிப்பிட்ட மையங்களில், கிறிஸ்துவ மருத்துவக் கல்லூரிகளையும், செவிலியர் பயிற்சி நிறுவனங்களையும் நிறுவினர். மருத்துவர் ஈடித் பிரௌனும், செல்வி கிரீன் பீல்ட்டும் கி.பி.1894இல் லூதியானாவில் கிறிஸ்துவப் பெண்களுக்கான வட இந்திய மருத்துவப்பள்ளியைத் தொடங்கினர். இது பெண் மருத்துவர், மருந்தகர், செவிலியர் ஆகியோருக்குப் பயிற்சி தந்த முழு நிலை மருத்துவப் பள்ளியாகத் திகழ்ந்தது. பஞ்சாப் பல்கலைக் கழகத்துடன் இணைவு பெற்ற நிறுவனமாக அது செயல்பட்டது. அமெரிக்க டச்சு சீர்திருத்தச் சபையின், அமெரிக்க ஆற்காடு அருள்பணிச் சங் கத்தைச் சேர்ந்த மருத்துவர் ஐடா எஸ்.ஸ்கடர் வேலூரில் பெண்களுக்கான மருத் துவப்பள்ளி ஒன்றைத் தொடங்கினார். வெகு விரைவில் வேறு பத்து அருள்பணிச் சங்கங்கள், அமெரிக்க ஆற்காடு அருள்பணிச் சங்கத்துடன் இணைந்து அம்மருத் துவமனையை ஒரு ஐக்கிய நிறுவனமாக நடத்தினர்.[10]

## சிறு தொழில்:

பொருளாதாரத்தில் பின் தங்கிய மக்களுக்கு வாழ்வாதாரம் தரும் நோக்கோடு சில அருள்பணிச் சங்கங்கள் ஒருவகை சிறு தொழில் பட்டரைகளைத் தொடங்கும் முயற் சியில் இறங்கின. கைம்பெண்டிருக்கும், கைவிடப்பட்ட பெண்களுக்கும் மறுவாழ்வு

தரும் திட்டங்களாகவும் அவைகளைத் திட்டமிட்டனர். ஈக்காடு (திருவள்ளூர் அருகில், தமிழ்நாடு) என்ற இடத்தில் பிரித்தானிய மெத்தோடிஸ்டுகள் கைத்தறித் துணி தொழிற் சாலையை அமைத்தனர். எல்.எம்.எஸ். அருள்பணியர் திருவனந்தபுரத்திலும், ஆந்திர மாநிலம் தும்மெகூடத்திலும், சரிகைவேலை தொழிற்கூடமும், சித்திரத் தையல் வேலை தொழிற்கூடமும் அமைத்தனர். மேற்கூறப்பட்ட நோக்கோடு அமைக்கப்பட்ட சிறு தொழில்களுக்கு இவை சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

### பண்டித இரமாபாய்:

கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்கள் எடுத்த மேற்கூறப்பட்ட செயல்கள், திட்டங்கள் மூலம் இந்தியா முழுவதிலும் உள்ள பெண்களின் நிலையில் அதிகமான முன்னேற் றங்கள் ஏற்பட்டன. கிறிஸ்தவப் போதனையினாலும், அன்புச் செயலாலும் ஈர்க்கப்பட்ட இந்தியக் கிறிஸ்தவப் பெண்களுள் சிறப்பிடம் பெறுகிறவர் பண்டித இரமாபாய் ஆவார்.

இந்தியப் பெண்களின் விடுதலைக்கு பண்டித இரமாபாயை (1858 -1922) விட அதிகமாகச் செயல்பட்டவர் வேறு எவரும் இலர் எனலாம். பத்தொன்பதாம் நூற் றாண்டிலும் கூட இந்தியப் பெண்களின் நிலை, இடைக்காலச் சமுதாயத்திலிருந்ததைப் போன்ற, அதாவது பரிதாபகரமான, துன்பம் நிறைந்த ஒன்றாகவும், ஆடவர் மீது எதற்கும் சார்ந்திருக்கும் போங்கிலும் இருந்தது. பெண் ஒருவர் தனது சிறுபிள்ளைப் பருவத்தே தம் தந்தையையும், இளமைப் பருவத்தே தம் கணவரையும், முதுமை யிலே தம் மைந்தரையும் சார்ந்திருக்க வேண்டும் என இடைக்காலத்து / மத்திய காலத்து இந்து சட்டம் வழங்கியோர் வகுத்து வைத்தனர். எனவே எவ்வகையிலும் அறிவு சார்ந்தும், உடல் சார்ந்தும் பெண்ணை ஒடுக்குவதற்கு எல்லாவற்றையும் செய்திருந்தனர். குழந்தைத் திருமணமும், பெண் சிசுக்கொலையும், கைம்பெண்டிர் எரிப்பும், பர்தா முறையும் இருந்த அக்காலத்தில் பெண்கள் விடுதலை என்ற பேச்சுக்கே இடமில்லாமல் இருந்தது.

இரமாபாயின் தந்தை ஆனந்த சாஸ்திரி மராத்திய பிராமணர் வகுப்பைச் சார்ந் தவர். அவர் சுயாதீனமான சிந்தைகளை / கண்ணோட்டங்களை உடையவராக இருந் தார். எனவே முதலில் தம் மனைவிக்குச் சமஸ்கிருத மொழியைக் கற்றுத்தந்தார். அதன் பின் தன் மகள் இரமாபாய்க்கும் அதனைக் கற்பித்தார். இதனால் பொது நிகழ்வு களில் சமஸ்கிருத ஸ்லோகங்களை ஒப்பிக்க / சொல்ல இரமாபாய்க்கு வாய்ப்புகள் கிடைத்தன. கி.பி.1876 -77இல் நிலவிய கடுமையான பஞ்சத்தில் அவர் தன் பெற்றோரையும், இளைய சகோதரியையும் இழந்தார். பட்டினியினால் அவர்கள் இறந்தனர். அவர் தன் சகோதரன் சீனிவாசனுடன் கி.பி.1878இல் கல்கத்தாவைச் சென்றடைந்தார். கல்கத்தாவில் இருந்தபோது கிறிஸ்தவர்களுடனும், பிரம்ம சமாஜத் துடனும் தொடர்பு ஏற்பட்டது. கி.பி.1880இல் அவரது சகோதரரும் இறந்து போனார். தம் சாதியைச் சேராத வங்காள வழக்கறிஞர் ஒருவரைத் திருமணம் செய்தார்.

பத்தொன்பது மாத மகிழ்ச்சியான திருமண வாழ்விற்குப்பின் அவரது கணவர் காலமானார். ஒரு மகளுடன் அவர் இளம் கைம்பெண் ஆனார். கைக்குழந்தையுடன் மகாராஷ்டிரா திரும்பிய அவர் ஓராண்டு காலம் புனேயில் வாழ்ந்தார். அங்கு அவர் தம்மை பிரார்த்தனா சமாஜத்துடன் இணைத்துக்கொண்டார். சமுதாயச் சீர்திருத்தங் களைக் குறிப்பாக இளம் கைம்பெண்டிரின் கல்வியையும், மறுவாழ்வு தரும் நடவடிக்கைகளையும் ஆதரிப்பவரானார். இக்காலத்தே கிறிஸ்தவ அருள்பணியரின் நடவடிக்கைகளாலும், நெகேமியா கோரே என்கிற உயர் சாதி பிராமண கிறிஸ்தவ போதகரின் அருளுரைகளாலும் கவரப்பட்டார். நெகேமியா கோரே கி.பி.1848இல் திருமுழுக்குப் பெற்று, சிறந்த கிறிஸ்தவ அறிஞரானார் ( Shastri ) இவர் இரமாபாய்க்குப் பல ஆலோசனைகளையும் வழங்கினார். இரமாபாய் தாம் ஈடுபட விரும்பிய பணிக்குப் பயிற்சி தேவை என உணர்ந்து இங்கிலாந்து சென்றார். அங்கே தூய கன்னி மரியாளின் சகோதரிகள் / வான்டேஜ் சகோதரிகள் ( Wantage Sisters ) என்ற அமைப்புடன் அவருக்குத் தொடர்பு ஏற்பட்டது. கி.பி.1883இல் அங்கு தம் மகளுடன் திருமுழுக்குப் பெற்றார். இங்கிலாந்தில் தன் படிப்பை முடித்த பின், அமெரிக்க ஐக்கிய நாடுகள் சென்று மூன்று ஆண்டுகள் இளம் குழந்தைகளுக்கான கல்வி முறைமையிலும் ( Kindergarten training ), பல்வகைக் கைவினைப் பொருள்கள் செய்வதிலும் பயிற்சி பெற்றார். அமெரிக்காவில் பொதுவாகப் இந்தியப் பெண்களின் நிலைமை குறித்தும், இளம் / சிறு பருவக் கைம்பெண்டிரிடையே தாம் செய்ய எண்ணியுள்ள பணிக்குறித்தும் உரையாற்றினார். கி.பி.1887இல் மிகுந்த பரபரப்பையூட்டிய **உயர் சாதி இந்தியப் பெண்**[11] என்ற நூலை அமெரிக்காவில் வெளியிட்டார். அவருக்குச் சில அமெரிக்க அனுதாபிகள் கிடைத்தனர். அவர்கள் இணைந்து இரமாபாய் சங்கம் என்பதை நிறுவி, அவரின் பணிகளுக்குத் தேவையான நிதியைத் திரட்டினர்.

இந்தியா திரும்பிய பின் கி.பி.1889 மார்ச் முதலாம் நாள் 'சாரதா சாதன்' (ஞானத் தின் இல்லம்) என்பதை மும்பையில் தொடங்கினார். இதற்கு மகாதேவ் கோவிந்த இரானடே, மற்றும் வேறு சில பிரார்த்தனா சமாஜத்தின் முன்னணி உறுப்பினரின் ஆதரவையும் பெற்றார். அது கி.பி.1890இல் புனேக்கு அருகிலுள்ள கேட்காவுன் ( Kedgaon) என்ற இடத்திற்கு மாற்றப்பட்டது. சாரதா சாதன் அமைப்பைக் கிறிஸ்த வத்தைப் பரப்பப் பயன்படுத்துகிறார் என்கிற குற்றச்சாட்டு எழுப்பப்பட்டது. என்றாலும் அது உண்மைக்குப் புறம்பானதாகும். சாரதா சாதனுக்கு நிதி உதவி வாக்களித்திருந்த பலர் பின் வாங்கினர் என்றாலும் அதன் பணி தொடர்ந்தது. கி.பி.1896இல் மத்திய இந்தியாவில் ஏற்பட்ட பஞ்சத்தின் போது, பஞ்சத்தினால் பாதிக்கப்பட்டப் பகுதிக ளுக்குச் சென்று பெற்றோரை இழந்த பெண் பிள்ளைகளைக் காப்பாற்றினார். புனே இல்லத்தில் இருந்த இடத்திற்கும் அதிகமாக இப்பிள்ளைகளின் எண்ணிக்கை இருந் தது. நண்பர்களிடமிருந்தும், ஆதரவாளர்களிடமிருந்தும் தமக்கு உதவி கிடைக்கும் என்னும் எதிர்பார்ப்பில் 'முக்தி' (மீட்பு) என்ற அமைப்பை கேட்காவுனிலேயேத் தொடங்கினார். கி.பி.1898இல் அமெரிக்காவிற்கு மீண்டும் சென்றார். அங்கு சாரதா

சாதனையும், 'முக்தி' யையும் ஆதரிக்க முன் வந்தவர்களைக் கொண்டு, ஆதரவாளர் குழு ஒன்றைப் புதிதாக அமைத்தார். 'முக்தி' ஒரு பெரிய நிறுவனமாக வளர்ந்தது. அதில் அயல் நாட்டைச் சேர்ந்த இருபது உதவியாளர் பணியாற்றினர். உதவிபெறும் கைம்பெண்களின் எண்ணிக்கையும், தொடர்ந்து ஏற்பட்ட பஞ்சத்தினால் பெற்றோரை இழந்த பெண் பிள்ளைகளின் எண்ணிக்கையும், உதவி தேவைப்பட்ட தாழ்த்தப்பட்ட சாதிப் பெண்களின் எண்ணிக்கையும் வளர்ந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிக்குள் ஆயிரத்திற்கும் மேலானோர் அதன் நிழலின் கீழ் வந்தனர். பால்பண்ணை, துணி நெசவு, தையல், கயிறு திரித்தல், இன்னும் பிற தொழில்களின் வழியாக 'முக்தி' யிலிருந்தோர் வேலை வாய்ப்பினைப் பெற்றனர். அங்கு தங்கியிருந்து உதவி பெற்ற பெண்கள், கிறிஸ்தவராக வேண்டும் என்று வலியுறுத்தப்படவில்லை. என்றாலும் பலர் மனமுவந்து தாமாகவே கிறிஸ்தவத்தை ஏற்றனர். குறிப்பாக கி.பி.1901இல் ஏற்பட்ட ஆன்மிக எழுச்சியின்போது நூற்றுக்கணக்கானோர் தாமாகவே விரும்பி கிறிஸ்தவத்தைத் தழுவினர். கி.பி.1922 இல் இரமாபாய் காலமானார். என்றாலும் இரமாபாய் 'முக்தி' திருப்பணி அமைப்பு தன் பணியைத் தொடர்ந்து செய்து வருகின்றது.

இரமாபாய் ஒப்பற்றவர். கல்வியில் சிறந்த இந்தியர், அவருக்குப் 'பண்டிதை' என்ற பட்டத்தை அளித்தனர். இப்பட்டம் அதற்கு முன் எந்த ஒரு பெண்ணுக்கும் கொடுக்கப்பட்டதில்லை. இந்திய வரலாற்றில் அவருக்கு முன் வாழ்ந்த எந்தவொரு பெண்ணும், இந்துவோ, இசுலாமியரோ, கிறிஸ்தவரோ, அவரைப்போல் தனது நோக்கத்தின் மேல் கட்டற்ற ஒப்படைப்புடன் செயல்பட்டதில்லை, இந்தியப் பெண்களின், குறிப்பாக கைம்பெண்களின் வாழ்க்கை மேம்பாட்டில் அவரைப்போல் அக்கறையுடன் ஈடுபட்டவர் எவருமில்லை எனலாம்.

அது முதற்கொண்டு இந்தியப் பெண்களின் நிலையில் குறிப்பிடத்தக்க மாற்றமும், வளர்ச்சியும் நிகழ்ந்துள்ளது.

## *End Notes*

[1] M.K.Kuriakose, **History of Christianity in India : Source Materials.** pp.75-76.

[2] C.B.Firth, **An Introduction to Indian Church History.** p.154.

[3] M.K.Kuriakose, **op.cit.** pp.72-73.

[4] C.B.Firth, **op.cit.** p.154 .

[5] The Society for Promoting Female Education in the East; Dr.David Abeel.

[6] Indian National Women's Christian Temperance Union.

[7] Society for the Protection of Children in India.

[8] D.Arthur Jeyakumar, " Amy Carmichael of Dohanavur 1867-1951." **Indian Church History Review,** vol. xxxvi, No.1., June 2002, pp.5-11.

[9] M.K.Kuriakose, **op.cit.** pp. 184-191; cf J.W.Gladstone, **Protestant Christianity and People's Movements in Kerala : 1850-1936.**

[10] C.B.Firth, **op.cit.** p.207.

[11] **The High-caste Hindu Woman (1887)**

## இயல் ஆறு

# கிறிஸ்தவ அருள்பணிச் சங்கங்களும், சாதி கடைப்பிடிப்புக் குறித்த அவற்றின் எண்ணமும்.

### சாதியப் பகுப்பு:

சாதியைப் பின்பற்றுகிற வழக்கமும், சாதியின் அடிப்படையில் சமுதாயத்தைக் கூறுபோடுதலும் இந்தியாவுக்கு மட்டுமே உரிய தன்மையாகும். பிராமணர், சத்ரியர், வைசியர், சூத்திரர் என்கிற நான்கு முக்கிய சாதிகள் இந்தியாவில் இருப்பதாகப் பொதுவாக அறியப்பட்டுள்ளது. இந்தியாவில் ஏறத்தாழ மூவாயிரம் கிளைச் சாதிகள் இருப்பதாகச் சமூகவியலாளர் கணித்துள்ளனர். சாதிப் பகுப்புக்குள் வராதோரைச் சாதிய அமைப்பிற்கு வெளியே இருப்பதாகக் கருதி, அவர்களை சாதிக்குப் புறம் பானோர் எனப் பெயரிட்டனர். அத்தகையோருக்குத் தற்காலத்தில் தாழ்த்தப்பட்ட வகுப் பினர், ஷெட்யூல்டு / அட்டவணையிடப்பட்ட சாதியினர், ஹரிஜன்கள், ஆதித் திராவிடர், தலித் போன்ற பல்வேறு பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

இந்தியாவில் சாதிய முறையின் தொடக்கம் குறித்து மாறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. ஒருவர் செய்த தொழிலின் அடிப்படையில் சாதியமுறை வந்தது எனச் சிலரும், இனம், நிறம் சார்ந்து வந்திருக்கக்கூடும் என வேறு சிலரும் கருதுகின்றனர். ஆனால் பொதுவான கருத்து என்னவெனில் சாதியமுறைமை, திட்டவட்டமாக இந்து சமய நூல்களின் அடிப்படையில் ஏற்பட்ட இந்து சமயமுறை; குறிப்பாக பிராமண ருக்குச் சிறப்பு முதன்மையிடம் வழங்கப்பட்டுள்ள ரிக் வேதத்தின் அடிப்படையிலும், மனு என்பவர் விவரித்துள்ள சட்டங்கள் வழியிலும் வந்துள்ளது என்பதே. 'புருஷா' கோட்பாடு பழங்கால இந்தியாவின் மனுக்குலத்தை நான்கு முக்கிய சாதிகளாகப் பிரித்து அவ்விதம் கூறுபோடுதல் நிகழ்ந்துள்ளது.

இத்தகையச் சூழலில் இந்தியாவிற்குள் கிறிஸ்தவம் வந்தது. எனவே அது அதனைச் சந்திக்க வேண்டியிருந்தது. சாதியக் கடைப்பிடிப்பைத் திருச்சபைகளும், இந்தியாவிற்கு வந்த அருள்பணிச் சங்கங்களும் எவ்விதம் சமாளித்தன என இக்கட்டுரையில் வரலாறு சார்ந்து காண்போம்.

## மலபார் சீரியன் கிறிஸ்தவர்:

தங்களிடையே சாதியப் பாகுபாட்டை ஏற்றுக்கொண்ட மலபார் சீரியன் கிறிஸ்த வரிடையே இருந்து நாம் தொடங்குவோம். தூய தோமா உயர் சாதியினரை மட்டுமே கிறிஸ்தவராக்கினார் எனக்கருதப்படுகிறது. மலபாரில் தூய தோமாவினால் கிறிஸ்த வரானோம் என உரிமை பாராட்டும் குடும்பங்கள் உயர் சாதியினராகவே உள்ளனர். அத்தகைய குடும்பங்களின் பெயர்களாவன: பக்கோலமட்டம், சங்கராபுரி, கள்ளி, களிகாவு, கொய்க்கம், மாதேய்பூர், முட்டோடல், நெடும்பள்ளி, பனக்கமட்டம், கோதக் களி என்பவையாகும். தூய தோமா நியமித்த தொடக்க காலத் திருச்சபைப் பணி யாளர்கள்கூட உயர் சாதியினரே. இந்தியாவிற்குச் சீரியாவிலிருந்து கானானியனாகிய தோமா, மார்வான் சப்ரிசோ என்பவர்கள் தலைமையில் முறையே கி.பி. நான்காம், ஒன்பதாம் நூற்றாண்டுகளில் இடம் பெயர்ந்து, இரண்டு குழுக்களாக வந்த மக்களை ஏற்றுக்கொண்ட அப்போதைய அப்பகுதி ஆட்சியாளர்கள் அவர்களுக்குச் சிறப் புரிமைகளைச் செப்பேடுகளில் வழங்கினர். அக்குழுவினர் உயர் சாதியினராக / வகுப்புவினராகத் தங்களைக் கருதி, பிறருடன் அவ்விதம் நடந்து கொள்ளவும். செயல்படவும் கேட்டுக்கொள்ளப்பட்டனர். அதன் அடிப்படையில் அவர்கள் அரசர்க ளால் சிறப்பான வகையில் நடத்தப்பட்டனர். மலபார் சீரியன் கிறிஸ்தவர் ஒரு குழு வினரிடையே இன்று வரை இருந்துவரும் வடக்கும்பகார், தெற்கும்பகார் என்றும் பிரிவு, அவர்கள் பேணி வந்துள்ள சாதி / வகுப்பு வேறுபாட்டினை வெளிப்படுத்து கின்றது, இன்றளவும் அவர்களிடையே திருமண உறவு கிடையாது.[1] இடம் பெயர்ந்து வந்த சீரியன் கிறிஸ்தவர்கள் சிறப்புத் தகுதிகளைப் பெற்றக் காரணத்தால் அவர்கள் கீழ் சாதி மக்களைக் கிறிஸ்தவராக மாற்ற முற்படவில்லை. உள்ளூர் அரசர்கள் அவர்களைத் தங்களது மெய்க்காப்பாளர்களாக வைத்துக் கொண்டனர். வணிகத்தில் ஈடுபட்ட அவர்கள், உள்ளூர் அரசர்களின் அவைகளில் ஆலோசகர்களாகவும், இன்னபிற பணிகளிலும் ஈடுபட்டனர்.

## உரோமன் திருச்சபை:

அடுத்து உரோமன் திருச்சபையினர் குறித்துக் காண்போம். அதன் திருப்பணி யராக பிரான்சிஸ் சேவியர் என்பவர் இந்தியாவில் கி.பி.1542 முதல் 1552 வரைப் பணியாற்றினார். தாழ்ந்த சாதியினராகக் கருதப்பட்ட, முத்துக்குளித்தல் தொழிலில் ஈடுபடிருந்த பரதவர்களையும், மீன்பிடி தொழிலில் ஈடுபட்டிருந்த முக்குவர்களையும் கிறிஸ்தவராக மாற்ற அதிகம் செயல்பட்டார். மேல் சாதியினரைக் கிறிஸ்தவராக்குவது கடினமெனக் கண்டார். இதன் விளைவாக உரோமன்

கத்தோலிக்கக் கிறிஸ்தவர்கள் 'பரங்கியர்' என பரிகாசப்பெயர் பெற்றனர். அப்பகுதியில் இருந்த உயர் சாதியினர், கிறிஸ்தவத்தைத் தாழ் சாதியினர் சமயம் எனக்கருதினர். அதனைப் 'பரங்கியர் சமயம்' என்றழைத்தனர். 'பரங்கி' என்ற சொல் போர்த்துக்கீசியரைச் சுட்டிக்காட்டப் பயன்படுத்தப்பட்டது என்றாலும் உட்பொருள் கொண்ட சொல்லாகவும் பயன்படுத்தப்பட்டது. புலால் உண்ணுதல், மது அருந்துதல், கண்டிப்பில்லாமல் / கட்டுப்பாடற்று வாழ்தல், கர்வமான நபர்கள் ஆகியவற்றை இச்சொல் சுட்டியது.[2] இத்தகைய மக்களுடன் சமுதாய உறவுகொள்வது என்பது எண்ணவும் முடியாதது என்றும், ஒவ்வாதது என்றும் மேல் சாதியினர் கருதினர்.

இச்சூழலில் இத்தாலிய இயேசு சங்கத் துறவி இராபர்ட்டு டெ நொபிலி இந்தியா விற்கு வந்தார். கி.பி.1606இல் மதுரையை வந்தடைந்தார். கிறிஸ்தவத்தை இந்திய மயமாக்கும் முயற்சியில் உடனடியாக இறங்கினார். அவர் அவ்விதம் சிந்திக்கத் தூண்டியவர் மற்றொரு இத்தாலிய இயேசு சங்கத் துறவி மத்தேயோ ரிக்கி எனலாம். ரிக்கி சீனாவில் கி.பி.1586 முதல் 1610 வரை இருந்தார். அவர் சீன கன்பூசிய சமய சிந்தையைக் கிறிஸ்தவத்துக்குள் புகுத்தி, கிறிஸ்தவத்திற்குச் சீன மணம் சேர்த்திட முயன்றார். இதை அறிந்திருந்த நொபிலி, அதேபோன்று இங்கும் அணுகு முறையில் மாற்றம் வேண்டும் என்று உணர்ந்தார். உயர்சாதி இந்துக்களுக்கும், கிறிஸ்தவர் களுக்குமிடையே நிலவிய பெரும் பிளவை நீக்க, அணுகுமுறை மாற்றம் பெற வேண்டும் எனத் திட்டவட்டமாக உணர்ந்தார். முதலில் தன்னையே இந்திய மயமாக்கிட முடிவெடுத்தார். அவர் இத்தாலியின் பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்தவராக இருந்த காரணத்தினால் தாம் இந்திய சத்ரியர் சாதிக்கு நிகராகக் கருதப்படலாம் என எண்ணி னார். தம்மைச் 'சன்னியாசி குரு' என்றழைத்துக்கொள்ள எண்ணினார். அவ்வித வாழ்க்கை நெறியைப் பின்பற்ற தன் இயேசு சங்க உயர் அதிகாரிகளின் இசை வினை நாடினார். இசைவைப் பெற்றவுடன், பிராமணர் ஒருவரைத் தமக்குச் சமையல் காரராக அமர்த்திக்கொண்டார், அத்துடன் இந்திய முறையில் வாழத் தொடங்கினார்.

கி.பி.1607 நவம்பரிலிருந்து அவர் தன்னுடைய கருப்பு நிற அங்கிக்குப் பதிலாக, இந்திய சன்னியாசிகள் பயன்படுத்திய காவி நிற அங்கியையும், தன்னுடைய தோல் காலணிக்குப் பதிலாக கட்டைச் செருப்பையும் பயன்படுத்திக்கொள்ள அனுமதி வழங்கப்பட்டது. நொபிலி பின்பற்றிய புதிய முறைமையின் பொருட்டு மதுரை அருள் பணியின் மூத்தத் துறவியான அருள்தந்தை பெர்னாண்டஸிடமிருந்து விலகி இருக்க நேர்ந்தது. மதுரையின் வேறு பகுதியில் நிலமொன்று வாங்கி அங்கு மடமொன்று அமைத்தார். இந்தியத் துறவியர் வாழ்வு நெறியையே இவரும் பின் பற்றினார். அரிசி உணவு, காய்கறிகள். பழம், பால் ஆகியவற்றையே உட்கொண்டார். ஒரு நாளுக்கு ஒரு வேளை உணவே உட்கொண்டார். தனிமையான வாழ்வைப் பின்பற்றினார். சிவதர்மா என்ற தெலுங்கு பிராமண பண்டிதரின் உதவியுடன் சமஸ்கிருதம் பயின் றார். அந்நாட்களில் வேதங்களைப் படிக்க பிராமணர் மட்டுமே அனுமதிக்கப் பட்டிருந்தாலும், வேதத்தின் சில பகுதிகளைத் தனக்குச் சொல்லிதரவும், எழுதித்

தந்திடவும் சிவதர்மாவிடம் வேண்டிக்கொணடார், அதற்கு அவரை இணங்கவும் வைத்தார். பிராமணருடன் உரையாடல் நிகழ்த்திட இது மிகவும் இன்றியமையானது என்று நொபிலி கருதினார். நொபிலியின் இம்முறை உயர்சாதி இளைஞரைக் கவர்ந்தது. அதன் விளைவாகச் சிலர் கிறிஸ்தவராயினர். அவ்விதம் கிறிஸ்தவத்தை ஏற்றோரில், பிராமணர் உட்பட பல சாதியிலிருந்து வந்தோர் இருந்தனர். மதம்மாறி யோர் இலத்தின் முறைமையின்படி திரித்துவ / மூவொரு கடவுளின் பெயரால் திருமுழுக்குப் பெற்றனரேயாயினும், "அவர்கள் தங்கள் சாதியத்திலிருந்து வெளி வரவோ, ஆடை முறைமை, உணவு, வாழ்க்கைமுறை ஆகியவற்றை மாற்றிக் கொள்ளவோ எதிர்பார்க்கப்படவில்லை. என்றாலும் சிலை வழிபாட்டைத் தவிர்த்திட வேண்டும். பரதவரின் திருச்சபையுடன் தங்களை இணைத்துக்கொள்ள அவர்கள் எதிர்பார்க்கப்படவில்லை."[3] பூணூல் அணிந்து கொள்ளவும், குடுமி வைத்துக் கொள்ள வும் அனுமதிக்கப்பட்டனர். சடங்குக் குளியலின்போதும், பிற சடங்குகளின் போதும் இந்து மந்திரங்களுக்குப் பதில் கிறிஸ்தவ இறைமன்றாட்டுகளைப் பயன்படுத்தினர். சாதியத்தை ஒரு சமூக அமைப்பாகவும், ஐரோப்பாவில் நிலவிவந்த வர்க்க, வகுப்பு முறைக்கு இணையான பழக்கவழக்கம் எனவும் நொபிலி புரிந்துகொண்டார். கிறிஸ்தவத்தை ஒருவர் தழுவும்பொழுது, அவர் தன்னுடைய சாதியத்தையோ, வாழ்க்கை நிலையையோ விட்டு விலக வேண்டியது இல்லை என்று வெளிப்படையாகவே போதித்தார், நம்பினார். அவருடைய அணுகுமுறை 'ஏற்பு நிலைக் கோட்பாடு' அல்லது 'பொருந்திப்போகும் முறை' (Accomodation Theory) என்றழைக்கப்படலாயிற்று.

நொபிலியின் முறைமைக்கு போர்த்துக்கீசிய உரோமன் கத்தோலிக்கரிட மிருந்தும், உள்ளூர் மக்களிடமிருந்தும் எதிர்ப்பு எழுந்தது. இதைக் குறித்த விவாதம் தொடர்ந்தது. இதன் விளைவாக போப்பு பதினைந்தாம் கிரிகோரி அனல் பறக்கும் விவாதமாகிவிட்ட நொபிலியின் நற்செய்திப்பணி முறையை ஆய்வு செய்திட ஆர்மாக் தலைமைப் பேராயர் பீட்டர் இலம்பார்டு என்பவரையும், லிஸ்பன் (ஸ்பெயின்) சமய விசாரணை மன்றத்தையும் நியமித்தார்.[4] கி.பி.1623 ஜனவரி 31ஆம் நாள் வெளியிடப் பட்ட 'ரோமானேயி செடிஸ் ஆன்டிஸ்டிடெஸ்' (Romanaee Sedis Antisitites) என்ற போப்புவின் ஆணை நொபிலியின் முறைக்கு ஆதரவு வழங்கியது. கிறிஸ்தவத்தைத் தழுவும் பிராமணரும், பிறரும் பூணூல் அணியவும், குடுமி வைத்துக்கொள்ளவும் அது அனுமதி வழங்கியது. இவைகள் பல்வேறு சாதியினரை வேறுபடுத்திக்காட்டவும், உயர் குடியினருக்கு அடையாளமாகவும், செய்துவந்த அலுவல், சமூகநிலை ஆகியவற்றைச் சுட்டிக்காட்டும் அறிகுறியாகவும் கருதப்படுகின்ற காரணத்தால் அவற்றை அணிய அனுமதி வழங்கப்படுகிறது என போப்புவின் ஆணை தெரிவித்தது. மேலும் சந்தனப்பசை உடலுக்கு அணிகலனாக இருக்கின்ற காரணத்தினால் அனுமதிக்கப் படுகின்றது எனவும், பல்வகை நீராடல்கள் உடல்நலம், தூய்மை சார்ந்தவையாக உள்ளன என்பதாலும் அவைகளைப்

பின்பற்றலாம் என போப்புவின் ஆணை கூறியது. என்றாலும் அது மூட நம்பிக் கையை நீக்கிட இந்து மந்திரங்களையும், மன்றாட்டுகளையும் பயன்படுத்துவதற்குத் தடை விதித்தது. மூன்று புரிகளாக அமைந்த பூணூல், வழக்கமாக சிலைகளுக்கு மதிப்பளிக்கும் வண்ணம் செய்யப்படுவதைப் போன்றல்லாமல், போற்றுதற்குரிய திரித்துவத்திற்கு மதிப்பளிக்கும் வண்ணம் இருக்க வேண்டும் என்றும் அறிவித்தது.[5]

கி.பி.1623க்குப் பின் நொபிலி தன் பணி எல்லையை சேலம், திருச்சிராப்பள்ளி, மோரமங்கலம் பகுதிகளுக்கும் விரிவுபடுத்தினார். இக்காலத்தில் சூத்திரர் சாதியி னரும், ஆதிதிராவிடரும் அதிக எண்ணிக்கையில் கிறிஸ்தவராயினர். இதனால் அவர் களுக்குத் திருப்பணி ஆற்றுவது ஒரு சிக்கலானது. “சில காலம் நற்செய்திப் பணியாளர் பகல் பொழுதில் உயர் சாதியினருக்கும், இரவில் கீழ் சாதியினருக்கும் பணிவிடை செய்து அச்சிக்கலைத் தீர்க்க முற்பட்டனர். ஆனால் அது நிறைவு தருவதாக அமையவில்லை. எனவே தாழ் சாதி மக்களிடையேப் பணியாற்ற சிறப்பு நிலை அருள்பணியரை நியமிக்க முடிவெடுக்கப்பட்டது.”[6] அவர்கள் பண்டார சாமிகள் என அழைக்கப்பட்டனர். உயர் சாதி கிறிஸ்தவருக்குப் பணியாற்றியோர் பிராமண சந்நியாசிகள் என அறியப்பட்டனர்.

கி.பி.1773இல் போப்பு பதினான்காம் கிளமெந்து இயேசு சங்கத்தைத் தடை செய்யும் வரை, நொபிலிக்குப் பின் வந்த இயேசு சங்கத்துறவிகள் அவரின் முறைமையையேப் பின்பற்றினர். என்றாலும் பிராமண சன்னியாசிகளின் எண் ணிக்கை ஒப்பீட்டளவில் பண்டார சுவாமிகளின் எண்ணிக்கையைவிடக் குறை வாகவே இருந்தது. உயர் சாதியிலிருந்து கிறிஸ்தவத்திற்கு மதம் மாறியவர்களின் எண்ணிக்கை குறைவாகவே இருந்தது. மதம் மாறியவர்களில் பெரும்பான்மை யோர் சூத்திர சாதிகளிலிருந்தும், தாழ்த்தப்பட்ட வகுப்புகளிலிருந்தும் வந்திருந்தனர். எனவே எண்ணிக்கை அடிப்படையில் நொபிலியின் அனுசரணக் கொள்கை / பொருந்திப் போதல்முறை வெற்றி எனக்கொள்ளமுடியாது. இராபர்ட்டு டே நொபி லியும் அவருக்குப் பின் மதுரை அருள்பணிக்களத்திற்கு வந்த இயேசு சங்கத்துற விகளும் கிறிஸ்தவத்தை, இந்து சமயத்துக்கு மிக நெருக்கமாக எடுத்துச் சென்று இந்து மயமாக்கிவிட்டனர் என்று விமர்சிக்கப்படுவதுண்டு. என்றாலும் அடிப்படைப் பற்றுறுதியில் நொபிலி ஒரு போதும் விட்டுக்கொடுத்ததில்லை. அவர் ‘உமி’யை ( Husk) மாற்றினாரே தவிர, ‘பருப்பை’ ( Kernel) அல்ல. அதாவது அவர் மாற்றியது மீட்பிற்குத் தேவையற்றவைகளையே (Non-essential) தவிர, அதற்குத் தேவையான அடிப்படை களையல்ல. அவருடைய காலத்திலேயே கிறிஸ்தவத்தை இந்திய மயமாக்க முற்பட்ட நொபிலியின் தைரியத்தைப் பாராட்டுதல் தகும்.

ஆனால் நொபிலியின் முறை சாதியின் அடிப்படையில் கிறிஸ்தவர்களைப் பிரித்தது, அது மட்டுமல்லாமல் அது நெடுநாள் நிலைத்துவிட்டது. தொடக்கத்தில் தனித்தனி வழிபாட்டுத்தலங்கள் இல்லை என்றாலும் “சாதிக் கிறிஸ்தவர்களையும், சாதிமுறைக்கு வெளியில் இருந்த தாழ்த்தப்பட்டக் கிறிஸ்தவர்களையும் தனித்தனி

இடங்களில் அமரவைக்கும் வகையில் வழிபடுமனைகள் கட்டப்பட்டிருந்தன. "[7] பின்னர் வெவ்வேறு சாதிக் கிறிஸ்தவக் குழுக்களுக்குத் தனித்தனி வழிபாடுகள் நடத்தப்பட்டன. சாதிக்கொரு கல்லறைத் தோட்டமும் இருந்தது. சில வழிபடுமனைகளின் உள்ளேயே சாதி அடிப்படையில் திருச்சபை மக்களைப் பிரித்துவைக்கத் தடுப்புச் சுவர்கள் கட்டப்பட்டிருந்தன. திருவிருந்து பொருட்கள் முதலில் உயர் சாதி கிறிஸ்த வர்களுக்கும், பின்பு மற்றவர்களுக்கும் பரிமாறப்பட்டன. இப்பழக்கம் இருபதாம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரைக்கும் தொடர்ந்த ஒன்றாக இருந்துள்ளது.

## பிராடெஸ்டென்ட் திருச்சபையினர்:

### (அ) தரங்கம்பாடி அருள்பணியர்:

டென்மார்க் அரசர் நான்காம் பிரடெரிக்கின் முயற்சியினால் பிராடெஸ்டன்ட் திருச் சபையின் முதல் நற்செய்தியாளர் குழு இந்தியாவுக்கு வந்தது. முதல் பிராடெஸ்டன்ட் நற்செய்தியாளர்களான பர்த்தொலொமேயு சீகன்பால்க்கும், ஹென்றி புளுட்சோவும் லூத்தரன் திருச்சபையினர். அத்துடன் அவர்கள் ஜெர்மன் பக்தி இயக்கத்தின் விளைவுகள். தரங்கம்பாடியில் இவர்களின் நற்செய்திப்பணியின் விளைவால் கிறிஸ்தவத்தை ஏற்ற முதல் கிறிஸ்தவர்களில் சிலர் உரோமன் திருச்சபையி லிருந்து வந்திருந்தனர்: அவர்கள் அவ்விதம் வந்தபொழுது, தங்களுடன் தங்கள் சாதி வேறுபாட்டையும் கொண்டுவந்தனர். தங்கள் பணியினால் கிறிஸ்தவத் திற்குள் வந்த மக்களிடையே காணப்பட்ட சாதியத்தைக் களைய சீகன்பால்க் உறுதியான முடிவொன்றும் எடுக்கவில்லை. தன்னுடைய முன்னோடி அருள் பணி முயற்சியில் அவர் சந்தித்த பல சிக்கல்கள் இதற்குக் காரணமாக இருந் திருக்கலாம். தரங்கம்பாடியில் இவர் வடிவமைத்துக் கட்டியெழுப்பிய புதிய எருசலேம் திருச்சபைக் கட்டிடம் சிலுவை வடிவிலானது. "அந்த வழிபடுமனையின் நடுக்கூடத்தின் ஒரு பகுதியில் சூத்திர சாதி ஆண்களும், மறுபகுதியில் பிறசாதி ஆண்களும் அமர்ந்தனர்; அதேபோன்று வழிபடுமனையின் பக்கவாட்டுப் பகுதியின் ஒன்றில் சூத்திர சாதிப் பெண்களும், மற்றதில் பிறசாதிப் பெண்களும் அமர்ந்திருந்தனர். திருவிருந்தின்போது சூத்திர இனத்து ஆடவரும், பெண்டிரும் முதலில் பங்கு பெற்றனர்; அதன்பின் மற்றவர்கள் பங்கு பெற்றனர். கல்விக் கூடத்திலும் இத்தகைய சாதிய பகுப்புகள் கடைபிடிக்கப்பட்டன. என்றாலும் சாதிய உணர்வை மட்டுப்படுத்தும் நோக்குடன் கற்பதில் திறம் மிக்க ஆதி திராவிடப் பிள்ளைகளுக்குப் போர்த்துக்கீசிய மொழியைக் கற்றுக்கொடுத்தனர், அவர்களுக்குப் போர்த்துக்கீசிய முறைப்படி மேற்கத்திய ஆடைகளை அணிவித்தனர். இவ்வித முறைகளினால், ஒரு கட்டத்தில் அவர்கள் 'போர்த்துக்கீசியர்' என்கிற நிலைக்கு உயர்வர் என்று எண்ணினர்."[8] கி.பி.1720 போல் தரங்கை அருள் பணிக்குத் தலைமைவகித்த

சூல்ட்சேக்கு தரங்கை அருள்பணித்தளத்தில் சாதிய வேறுபாடு கடைபிடிக்கப்படுவது விருப்பமற்றதாக இருந்தது. எனவே அதனைக் குறித்த தன் கருத்துக்களை ஒளித்துக் கூறாமல், வெளிப்பாடையாகவே அக்கொள்கையைத் தாக்கினார். அதனைத் தனது ஒரு ஆணையினால் நிறுத்த முற்பட்டார். அதனால் எதிர்ப்பும், அதிருப்தியும் விளைந்தன. இந்தியக் கிறிஸ்தவர்களில் சிலர் தரங்கம்பாடி அருள்பணித் திருச்சபையை விட்டு விட்டு, உரோமன் திருச்சபையில் இணையப் போவதாக அச்சுறுத்தினர். இதனால் டேனிஷ்-ஹல்லே அருள்பணி அமைப்பு சூல்ட்சேயைத் திரும்பவும் அழைத்துக் கொண்டது. அவர் தரங்கம்பாடியை விட்டகன்ற பின், கி.பி.1725இல் அருள்பணியராக வந்த வால்தெரும் (Walther), பிரஸ்சியரும் (Pressier) பழைய முறைமையை மீண்டும் நடைமுறைப்படுத்தினர்.

டேனிஷ்-ஹல்லே அருள்பணியராக இந்தியாவிற்கு வந்த சி.எஃப்.சுவார்ட்ஸ், தரங்கை அருள்பணித்தளத்தில் கி.பி.1750 முதல் 1762 வரை பணியாற்றினார். அதன் பின் எஸ்.பி.சி.கே சங்கம் அவரைத் தத்தெடுத்துத் தன்னுடைய 'ஆங்கில அருள்பணித்தளங்களில் பயன்படுத்தியது. எஸ்.பி.சி.கே.யின் அருள்பணியராக கி.பி.1762 முதல் 1798 வரை இராணுவ ஆயராகவும், நற்செய்தியாளராகவும் திருச்சிராப்பள்ளியிலும் (1762 – 1776), தஞ்சாவூரிலும் (1776 – 1798) பணியாற்றி னார்; அவர் இந்தியாவில் மொத்தம் 48 ஆண்டுகள் இருந்தார். ஆனால் ஒரு முறைகூட தன் தாய் நாட்டிற்குத் திரும்பச் சென்றதில்லை. இந்தியக் கிறிஸ்த வரிடையே இருந்த சாதிய வேற்றுமைகளைக் களைவதென்பது அத்துணை எளிதன்று என்பதை சுவார்ட்ஸ் ஏற்றுக்கொண்டிருந்தார். என்றாலும் கல்வியைத் தருவது மூலம் அதனைக் காலப்போக்கில் வென்றுவிடலாம் எனக்கருதினார். அவரு டைய ஒரு அறிக்கையின்படி உயர்சாதி ஆண்களும், பெண்களும் வழிபடுமனை யின் ஒரு பகுதியிலும், தாழ்சாதியினர் மறு பக்கத்திலும் அமர்ந்திருந்தனர். தாழ்ந்த சாதி கிறிஸ்தவர்கள், தூய்மையான ஆடைகளை அணியுமாறு செய்தார். அப்போது மேல் / உயர் சாதியினர் அவர்களை மதிப்புடன் நடத்திடுவர் எனக்கருதினார். அவரு டைய பணிக்காலத்தில் இந்தியக் குருக்களும். கிறிஸ்தவப் போதனையாளர்களும் ( Catechists ) பொதுவாகவே உயர் சாதியைச் சேர்ந்தவராகவே இருந்தனர். தம்மிடம் பணியாற்றிய கிறிஸ்தவப் போதனையாளர்களில் ஒருவரான காபிரியேல் என்பவர் தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவராக இருந்தாலும், தூய்மையான ஆடைகளை நல்ல முறையில் அணிய அவர் கவனம் செலுத்தியக் காரணத்தினால், மேல் சாதியின ருடனும் சுலபமாகவும், தயக்கமின்றியும் பேச முடிந்தது என சுவார்ட்ஸ் தன் அறிக் கையில் எழுதியுள்ளார். என்றாலும் நாட்டின் உள் பகுதிகளில் அத்தகைய மனித உறவுகள் இலகுவாக இருப்பதில்லை எனவும் தெரிவித்துள்ளார். கிறிஸ்தவத்தை ஏற்றுக்கொண்டோரிடையே சாதிய வேறுபாடுகள் மெல்ல மெல்ல மறைந்து வருகின்றது என்றும் காலப்போக்கில் அது முற்றிலும் மறக்கப்பட்டுவிடும் என்றும் நம்புவதாக எழுதுகிறார்.[9]

## (ஆ) செராம்பூர் அருள்பணியர்:

வில்லியம் கேரி, ஜாஷ்வா மார்ஸ்மென், வில்லியம் வார்டு என்னும் செராம்பூர் அருள்பணியர், தங்களின் பணி வழியே கிறிஸ்தவத்தையேற்றோர் சாதிப்பாகு பாட்டைப் பின்பற்றுவதை அனுமதிக்கவில்லை. தங்கள் பணியின் தொடக்கத்தி லிருந்து அதில் அவர்கள் கண்டிப்பாக இருந்தனர், ஏனெனில் இந்து சமுதாயத் தில் சாதிப்பாகுபாடென்பது முழுக்க முழுக்கச் சமயம் சார்ந்தது எனவும், அது சமு தாயம் சார்ந்தன்று என்றும் கணித்திருந்தனர். கி.பி.1803இல் கிருஷ்ணபிரசாத் என்னும் பிராமண கிறிஸ்தவர், கிருஷ்ணபால் என்ற சூத்திரரின் இரண்டாவது மகள் ஓனுந்தோ (ஆனந்தா; Onundo)வைத் திருமணம் செய்து கொண்டார். இது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். ஏனெனில் திருமணத்தில் சாதியக் கட்டுப்பாடுகள் மிகவும் தீவிரமாக இருந்தன. அத்திருமணச் சடங்குகளில், செராம்பூர் நற்செய்தி யாளர்கள் கலந்துக் கொண்டனர். மறுநாள் நடைபெற்ற திருமண விருந்தில், அவர்கள் புதுமணத் தம்பதியருடனும், அவர்கள் நண்பர்களுடனும் ஒரே மேசையில் அமர்ந்து உணவு உட்கொண்டனர்.[10] வடஇந்தியாவில் பணியாற்றிய அருள்பணிச் சங்கங்களிடையே இத்தகையக் கொள்கை பொதுவான முன் மாதிரியானது.

## (இ) ஆங்கிலத் திருச்சபை:

இந்தியாவில் இருந்த இங்கிலாந்து திருச்சபையும், எஸ்.பி.ஜி. என்னும் சங்கமும்[11] மாறுபட்ட கருத்தைக் கொண்டிருந்தன. இந்திய இங்கிலாந்து திருச் சபையின் பேராயராக இருந்த ரெஜினால்ட்டு ஹீபர் கி.பி.1826ஆம் நாள் எழுதிய ஒரு கடிதத்தில் தென் இந்தியாவிலும், இலங்கையிலும் இருந்த கிறிஸ்தவர்கள் சாதியம் உட்பட்ட பல தொன்மையான பழக்க வழக்கங்களைக் கடைபிடித்தும், பாதுகாத்தும் வருவதாகத் தெரிவிக்கிறார். " பழைய சிந்தனை மரபில் வந்த நற் செய்தியாளர் இவைகளைச் சமுதாயப் பாகுபாடுகள் எனக்கருதி அவைகளைச் சகித்து வந்துள்ளனர். புதிய கிறிஸ்தவர்கள் கல்வி கற்பதின் மூலம் அறிவிலும், சிந்தனையிலும் வளர்ச்சியுற்றபின் அவை மறைந்துவிடும் என்று நம்பினர். ஆனால் இது வரை அவ்விதம் நடைபெறவில்லை. ஆனல் சில இளம் ஜெர்மானிய, ஆங்கிலேய நற்செய்தியாளர்கள் சாதிய பாகுபாடுகளுக்கெதிராக அக்கறையுடன் அருளுரையாற்றுவது, போதிப்பது மட்டுமின்றி, தங்களது பள்ளிகளை நடத்திச் செல்வதிலும், திருச்சபையினரை அமரவைப்பதிலும் சாதியப் பாகுபாடுகளை எந்த அளவிற்குத் தவிர்க்க முடியுமோ, அந்த அளவிற்குத் தவிர்க்கின்றனர் " என ஹீபர் எழுதியுள்ளார்.[12] பிரித்தானிய நாடாளுமன்றம் கி.பி.1813இல் பிரித்தானிய கிழக்கிந்திய வணிபச் சங்கத்தின் சாசனத்தைப் புதுப்பித்தது. அதன்படி அதே ஆண்டில் இந்தியாவில் ஆங்கிலிக்கன் திருச்சபையின் பேராயம் ஒன்று, கல்கத்தாவைத் தலைமையிடமாகக் கொண்டு அமைக்கப்பட்டது. அதன் நான் காவது பேராயரே ரெஜினால்ட்டு ஹீபர். அவர் கி.பி.1827இல் திருச்சிராப்பள்ளிக்கு

வந்திருந்தபோது குளத்தில் மூழ்கி மாண்டுபோனார். முன்கூறியக் கூற்றின்படி எஸ்.பி.ஜி. சங்கம் தன் சபையின் இந்தியக் கிறிஸ்தவரிடையே சாதியம் பின்பற்றப் படுவதை நீக்கிட முயற்சிகளை மேற்கொண்டது என்ற முடிவிற்கு வரலாம். ஆனால் அத்தகைய முயற்சி இந்தியக் கிறிஸ்தவர்களிடையே வரவேற்பைப் பெறவில்லை. நற்செய்தியாளர் ஒருவர் தன்னுடைய வழிபடுமனையில் ஆதி திராவிடப் பிள்ளைகளையும், சூத்திரர் சாதிப்பிள்ளைகளையும் ஒன்றாக உட்கார வைத்ததினால் சென்னையிலிருந்த ஒரு சபையினர் கிளர்ந்தெழுந்தனர். இச்செய்தி பேராயர் ஹீபரைச் சென்றடைந்தவுடன், தென்னிந்தியாவில் பணியாற்றிக் கொண்டிருந்த மற்ற நற்செய்தியாளர்களைக் கலந்து பேசினார். அவர்களில் பெரும்பான்மையோர் சாதியம் குறித்த எண்ணங்களுக்கெதிரான நேரடிச் செயல் பாட்டை விரும்பவில்லை. எனவே குறிப்பிட்ட நற்செய்தியாளரைச் சென்னை யிலிருந்து தஞ்சாவூருக்குப் பணிமாற்றம் செய்தார்.[13]

எஸ்.பி.ஜி.யின் பணிக்களங்களில் சாதியத்தைக் கடைபிடிப்பது குறித்த வினா, விவாதத்திற்கான தலைப்பானது. இதனைப் பேராயர் ஹீபரைத் தொடர்ந்து பேராயரான டேனியல் வில்சன் கி.பி.1828இல் அனுப்பிய வினா நிரலுக்கு ( Questionnaire) தஞ்சாவூரிலிருந்த நற்செய்தியாளர் தந்த பதிலுரைகளிலிருந்து உணர லாம். இந்தியக் கிறிஸ்துவரிடையே சாதியப் பாகுபாடுகள் இன்னமும் பின்பற்றப் படுகின்றன என, தஞ்சாவூர் நற்செய்திப்பணியாளர் ஒத்துக்கொண்டபோதும், அது தமக்கு விவாதத்திற்குரிய காரியமாக ஆகவில்லையெனவும், என்றாலும் அதனை மிகுந்த எச்சரிக்கையுடன் கையாளுவதாகவும் தெரிவித்திருந்தனர்.[14] இந்தியக் கிறிஸ்தவர் பின்பற்றிய சாதிய வேற்றுமைகளைப் பேராயர் டேனியல் வில்சன் எதிர்த்தவர். கி.பி.1833 ஜூலை 5ஆம் நாள் கல்கத்தா பேராயத்தில் பணியாற்றிக்கொண்டிருந்த நற்செய்திப் பணியாளர்களுக்கு எழுதியக் கடிதத் தில், இந்தியக் கிறிஸ்தவர்களிடையே நிலவிவந்த சாதி வேறுபாடுகளை அகற்ற ஒருமுகப்படுத்தப்பட்ட நடவடிக்கை எடுக்குமாறு அவர்களைப் பேராயர் டேனியல் வில்சன் கேட்டுக்கொண்டார். “சாதி வேறுபாடுகள் தீர்மானமாக, உடனடியாக, முடிவாகக் கைவிடப்பட வேண்டும்.... புறச் சமயத்தவர் தம் பயன்பாட்டிற்காகத் திணித்துள்ள சாதிய வேறுபாடுகள் போன்ற சமுதாய வித்தியாசங்களை நற்செய்தி ஏற்பதில்லை... ” என்று எழுதினார்.[15] சென்னையிலிருந்த ஒரு திருச்சபையில் திடப்படுத்தல், திருவிருந்து வழிபாடு நடத்திய பின் கி.பி.1835 ஜனவரி 27இல் அவர் தன்னுடைய நாட்குறிப்பில் சாதி, வகுப்பு வேறுபாடுகள் அசட்டை செய்யப்பெறுகின்றன என்று குறித்திருந்தார்.[16]

பேராயர் டேனியல் வில்சனின் சாதியத்திற்கு எதிரான கண்டிப்பான போக்கு எதிர்விளைவுகளையும் கொண்டிருந்தது. சென்னையிலிருந்த உயர் சாதி இந்தியக் கிறிஸ்தவர்களில் சிலர் பேராயர் டேனியல் வில்சனின் நிலைப்பாட்டிற்கு உடன்பட மறுத்து, சென்னையிலிருந்த லைப்சிக் இவாஞ்சலிக்கல் லூத்தரன்

மிஷனில்[17] (எல்.இ.எல்.எம்.) இணைந்தனர். டேனிஷ்–ஹல்லே மிஷனிடமிருந்து தரங்கம்பாடி அருள்பணித்தளங்களைத் தன் பொறுப்பில் ஏற்றிருந்த எல்.இ.எல். எம்., தரங்கம்பாடி அருள்பணியர் சாதிய வேறுபாடுகளை அனுமதித்திருந்த அதே வழியைப் பின்பற்றியிருந்தது. எனவே பேராயர் வில்சனின் சாதியக் கண்டிப்புக் கொள்கையை ஏற்காது, எஸ்.பி.ஜி. மிஷனைவிட்டு வெளிவந்த இந்தியக் கிறிஸ்தவர்களை எல்.இ.எல்.எம் ஏற்றுக்கொண்டது. இது விவாதத்திற்குரிய காரியமாகி, இரண்டு அருள்பணிச் சங்கங்களும் அது குறித்தத் தங்கள் கருத்துக்களைக் கடிதங்கள் வாயிலாகப் பகிர்ந்துக்கொண்டன.[18]

திருநெல்வேலி– பாளையங்கோட்டையில் சி.எம்.எஸ்.சின் நற்செய்திப் பணி யாளராகப் பணியாற்றிய சி.டி.இ. ரேனியஸ் தன்னுடைய பயிற்சி நிறுவனத்தில் இறையியல் படித்துக்கொண்டிருந்த தன்னுடைய மாணவர்கள், அங்கு சாதிய வேற்றுமைகளைக் கடைபிடிக்க இசைவளிக்கவில்லை. அம்மாணவர்கள் அவருக்குக் கீழ்ப்படிய மறுத்தபோது, அப்பயிற்சி நிறுவனத்தைச் சிலகாலம் மூடி விட்டார். அம்மாணவர்கள் ரேனியசின் நிலைப்பாட்டை ஏற்றுக்கொள்ள முன் வந்த பிறகே அதனைத் திறந்தார். இது உத்தேசமாக கி.பி.1825 இல் நடை பெற்றது.

### (ஈ) பேசில் திருப்பணிக் குழு:

கனரா / கர்நாடகாவில் திருப்பணியாற்றிய பேசில் மிஷன் தங்கள் பணியின் விளைவாகக் கிறிஸ்தவத்தை ஏற்றவர்கள் சாதிய வேறுபாடுகளைப் பின்பற்று வதற்கு இடமளிக்கவிலை. கி.பி.1834 முதற்கொண்டு, மதம் மாறிய இந்தியர் களை அவர்களின் பூர்வீகத்தலத்திலிருந்து இடம் பெயர்த்து, தொலைவான வேறு இடத்தில் குடியமர்த்தினர். மேலும் தாங்கள் நடத்தியத் தொழில் அமைப்புகளிலும், கல்வி நிறுவனங்களிலும் அக்கிறிஸ்தவர்கள் கலந்து செயல்படும் கொள்கை யையும் பின்பற்றினர்.

### (உ) அருள்பணியர் மாநாடுகள் :

தென்னிந்திய வட்டார அருள்பணியரின் முதல் மாநாடு உதகை மண்டலத்தில் / ஊட்டியில் கி.பி.1858 ஏப்ரல் 19 முதல் மே மாதம் 5 வரை நடைபெற்றது. இதில் தாய் மொழியில் நற்செய்தி அறிவித்தல், இந்தியப்பணியாளர், பெண்கள் கல்வி, கல்விப் பணிக்கொள்கை, சாதியம் ஆகியவைக் குறித்துத் தீர்மானங்கள் நிறை வேற்றப்பட்டன. அவைகளில் சாதியம் குறித்தவை இங்கு குறிப்பிடத்தக்கன. அவையாவன:

1. " இந்து மக்கள் பின்பற்றும் சாதியம், அதன் கோட்பாடு அளவிலும், பழக் கத்திலும் (செயல் முறையிலும்) வெறும் சமுதாய வேறுபாடன்று, ஆனால் அழுத்தம் திருத்தமாக சமய அமைப்பு என்று இம்மாநாடு கருதுகின்றது.

இவ்விதம் பார்க்கையில் அதன் உண்மைத் தன்மையில் அது பயங்கர மான தீமை. இந்தியா முழுவதிலும் அதன் சக்தியும், தாக்கமும் பரவி யுள்ளது. அதன் சட்டங்களிலும் கொடுங்கோன்மையானதாகவும், குரூர மானதாகவும் உள்ளது. சிறு தவறுகளுக்கும் பெருந்தண்டனையைத் தற் காலத்திலும், வருங்காலத்திலும் அளிப்பதாக பயமுறுத்துகிறது. எனினும் தன்னை வெளிப்படுத்துகையில் மாறக்கூடியது போன்றும், எல்லாரை யும் ஏற்றுக்கொள்ளுதல் போன்றும் தோற்றம் தரும். இதனால் எண் ணிறந்தோர் காலங்காலமாக அதன் காலடியில் விழுந்து கிடப்பதில் ஒன்றும் வியப்பில்லை. அதன் கொடும் பிடியிலிருந்து எந்த ஒரு மானுட ஆற்ற லும் மக்களை விடுவிக்க முடியாது."

2. " எக்கடினப்பாட்டையும் பொருட்படுத்தாமல், எல்லாச் சூழல்களிலும் சாதியத்தின் தவறுகளையும், பொய்மையையும் வெளிப்படுத்த வேண்டி யது, அனைத்து நற்செய்திப்பணியாளர்களின் கடமையாகும்....., இவ் வுலக வாழ்வில் வளர்ச்சியுறுவதற்கான எல்லா முயற்சிகளுக்கும் அது எந்த அளவிற்குப் பெருந்தடையாக உள்ளது என்பதனையும் எடுத்து ரைக்க வேண்டும்."

3. " கிறிஸ்தவத்தை அறிக்கை செய்ய முன்வரும் அனைவரிடத்தும், மீட்பரின் பணியில் சேரும் அனைவரிடத்தும், சாதியத்திற்கு எந்த ஓர் இடமும் வைக்காமல், சந்தேகத்திற்கு இடமளிக்காத வகையில், சாதியம் வெளிப்படுத்தும் வடிவங்கள் அனைத்தையும் தள்ளிவிடக் கேட்பது அனைத்து நற்செய்திப் பணியாளர்களுடையதும், திருச்சபைகளுடைய கடமையுமாகும். "[19]

கி.பி.1879இல் பெங்களூரில் நடைபெற்ற தென்னிந்திய, இலங்கை நற்செய்திப் பணியாளர் மாநாட்டில் பின்வரும் முடிவுகளை எடுத்தனர்:

1. " இந்து மதத்தின் சாதியத்தை, அதன் கோட்பாடு, செயல்பாடு உட்பட, வெறும் சமுதாய வேறுபாடு என இந்த மாநாடு கருதவில்லை; மாறாக அழுத்தம் திருத்தமாக அதனைச் சமய அமைப்பாகவே கருதுகிறது. "

2. " இவ்வெளிச்சத்தில் நோக்கும்பொழுது கிறிஸ்தவக் கொள்கையான அனைவருக்கும் ஒரே மனிதத்தன்மை, அனைத்துக் கிறிஸ்தவர்களும் உடன் பிறப்புகளே என்பதற்கு நேர் எதிரிடையானதாக இருப்பதை அறியலாம். "

3. " கிறிஸ்துவின் திருச்சபைக்குள் நுழைய விரும்பும் அனைவரும் சாதியத்தை முற்றாகத்துறந்து அதன் வெளிப்படையான உருவங்கள் அனைத்தையும் மறுத்துவிட்டு வர உரிமையுடன் கேட்பது அனைத்து நற்செய்திப்பணியாளர்களின், திருச்சபைகளின் கடமையாகும். "[20]

கி.பி.1900 ஜனவரி 2 முதல் 5 வரை சென்னையில் நடைபெற்ற தென்னிந்திய அருள்பணியர் மாநாட்டில். “ தென் இந்தியக் கிறிஸ்தவத் திருச்சபையினுள் இருக்கும் சாதியத் தீமைகளை மேற்கொள்ள, அதன் வெளிப்பாடுகள் அனைத்தையும் தடைசெய்வது மிகவும் அவசியமாகின்றது. எனவே அருள்பணிச் சங்கங்களில் பணி யாற்றும் அனைத்து இந்தியப் பணியாளர்களும், திருச்சபை அங்கத்தினர்களும் சாதிய வேறுபாடுகளின் அறிவீனத்தையும், பொல்லாங்குத் தன்மைகளையும் உணரச்செய்ய அனைத்து முயற்சிகளையும் எடுக்க வேண்டும் என முடிவெடுக்கப் படுகிறது. ”[21] என்று கூறினர்.

## முடிவுரை:

கி.பி.1858 முதல் கி.பி.1902 வரை தென்னிந்தியாவில் நடைபெற்ற எல்லா அருள்பணியர் மாநாடுகளிலும் இந்தியக் கிறிஸ்தவர் சாதியத்தைப் பின்பற்றுவது விவாதத்திற்குரிய தலைப்பாக இருந்தது என்பது அருள்பணியர் அனைவரும் பொதுவாக சாதியம் பின்பற்றப்படுவதை நீக்க முற்பட்டாலும் இந்தியக் கிறிஸ்தவ சமுதாயத்தினால் அதிலிருந்து விடுபட இயலவில்லை என அறியமுடிகிறது. நற்செய்திப்பணியாளர்கள் தங்களது நிறுவனங்கள் மூலம் சாதிய வேறுபாடுகளைப் பின்பற்றுவதனால் உள்ள பயனின்மையை உணர்த்த, அறிவுறுத்த முற்பட்டனர். கிறிஸ்தவக் கல்விநிறுவனங்களில் மாணாக்கர் சாதி வேறுபாடின்றி ஒன்றாக அமரவைக்கப்பட்டனர். கிறிஸ்தவ மருத்துவமனைகளுக்கோ, மருத்துவ மையங் களுக்கோ வந்த பிணியாளிகளுக்கு எவ்வித சாதிப் பாகுபாடுமின்றி மருத்துவமளித் தனர். உள் நோயாளிகளாக சேர்ந்தவர்களுக்கு வேறுபாடின்றி படுக்கைகள் தரப் பட்டன, இதனையே தொழில் நுட்பக் கல்விக்கூடங்களிலும், தொழில் சார்ந்த கல்வி மையங்களிலும் பின்பற்றினர். இத்துடன் தொழில் புரட்சியும், மேற்கத்திய கல்வி முறையும் இணைந்து சாதியம் பின்பற்றப்படுவதையும், அதன் வேற்றுமை பாராட்டும் போக்கையும் முற்றிலும் அழிக்க இயலவில்லை என்றாலும் அதைக் குறைக்க வழிசெய்திருக்கிறது என்று கூறலாம்.

நம் நாட்டின் விடுதலைக்குப் பின் இந்தியத் திருச்சபையின் உள்ளேயும், வெளி யேயும் சாதிய உணர்வுகளின் எழுச்சியைக் காணமுடிகின்றது. திருச்சபைகளில் நடைபெறும் தேர்தல்கள் கூட சாதியடிப்படையிலேயே நடத்தப்படுகின்றன, இன வாதம் வளர்ந்து வரும் அதே நேரத்தில், மண்ணின் மைந்தர் என்ற கோட்பாடும் வளர்ந்து வருகின்றது. சாதியத்தின் அடிப்படையில் வேற்றுமைகளைக் காட்டுவது முற்றிலும் களையப்பட்டு, சமூக நீதி, அன்பு, மனிதரை மனிதராக மதிக்கும் போங் குடைய சமத்துவச் சமுதாயம் தோன்றித் தழைக்கும் என்ற நன்னம்பிக்கையுடன் செயல்படுவோம்.

## *End Notes*

[1] Cf. C.B.Firth, **An Introduction to Indian Church History.** pp.29 f.

[2] **Ibid.** p.111.

[3] **Ibid.** p.113.

[4] Peter Lombard, Arch Bishop of Armagh and the Lisbon Inquisition.

[5] M.K.Kuriakose, **History of Christianity in India : Source Materials.** pp.52-53.

[6] C.B.Firth, **op.cit.** p.117.

[7] **Ibid.** p.120.

[8] **Ibid.** pp.137-138.

[9] M.K.Kuriakose, **op.cit.** pp.69-70.

[10] **Ibid.** pp.76-77.

[11] Society for the Propagation of the Gospel.

[12] **Ibid.** pp.108-109.

[13] C.B.Firth, **op.cit.** p.162.

[14] M.K.Kuriakose, **op.cit.** pp.111-115.

[15] **Ibid.** pp118-119.

[16] **Ibid.** p.121.

[17] Leipzig Evangelical Lutheran Mission.

[18] **Ibid.** pp.149-152.

[19] **Ibid.** pp.174-175.

[20] **Ibid.** p228.

[21] **Ibid.** p.273.

# இயல் ஏழு

# கிறிஸ்தவக் குழு இயக்கங்கள்

## அறிமுகம்:

கிறிஸ்தவம் தன்னுடைய தொடக்க கால வரலாற்றிலிருந்தே தன் பற்றுறுதியைப் பரப்புகின்ற மதமாக இருந்து வந்துள்ளது, இதன் விளைவாக, வரலாற்றின் பல்வேறு காலக்கட்டங்களில் உலகத்தின் பல பகுதிகளில் மக்கள் பெரும் திரளாகக் கிறிஸ்தவத்தை ஏற்றுள்ளனர். இதற்கான சிறந்த எடுத்துக்காட்டுகளைத் திருத்தூதுவர் செயல்பாடுகள் ( Acts of the Apostles ) நூலில் காணலாம். குறிப்பிட்ட ஒரு சமயத்தில் மூவாயிரம் நபர்களும், மற்றொரு சமயத்தில் ஐயாயிரம் நபர்களும் கிறிஸ்தவத்தை ஏற்றதாக அந்நூலில் வாசிக்கிறோம். பிற்காலத்திலும் இதேப்போக்கு தொடர்ந்தது. இத்தகையக் குழு இயக்கங்களுக்கானக் காரணங்கள் வெவ்வேறாக இருந்திருக்கக்கூடும். இருந்தாலும், மக்கள் குழுக்கள், குழுக்களாக / பெருந்திரளாக கிறிஸ்தவத்தை ஏற்றது என்பது அதன் வரலாற்றில் அசாதாரணமான நிகழ்வு அல்ல.

இந்த இயலில், பத்தொன்பதாம், இருபதாம் நூற்றாண்டுகளில் இந்தியாவில் நிகழ்ந்த குழு இயக்கங்களயும், அவற்றிற்கானக் காரணங்களையும், விளைவுகளையும் காண முற்படுவோம்.

## சொல் விளக்கம்:

திரள் திரளாக மக்கள் கிறிஸ்தவத்தை ஏற்கும் நிகழ்வை 'கும்பல் இயக்கம்' என்றழைப்பர். இவ்வார்த்தை மிகவும் சாதாரணமாகப் பயன்படுத்தப்பட்டச் சொல்லாகும். மக்கள் குழுக்களை, கும்பலான மக்கள் எனக்குறிப்பிடுவது பத்தொன்பதாவது நூற்றாண்டு வரலாற்றாசிரியர்களிடையேயும், அதற்கு முந்திய காலத்திலும்

மிகவும் சாதாரணமாக இருந்துள்ளது. ஆனால் வரலாற்றாசிரியர்கள் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் முதல், திரள் திரளாக மக்கள் ஒரு மதத்திலிருந்து மற்றொரு மதத்திற்கு மாறுவதற்கு 'குழு இயக்கம்' என்ற வார்த்தையைப் பயன்படுத்த முற்பட்டுள்ளனர். முந்தைய வார்த்தையைவிட இச்சொல் மரியாதையானதாகவும், பொருளுள்ளதாகவும் கருதப்படுகின்றது.

குழு இயக்கம் என்னும் சொல், மக்கள் குழுக்கள் குழுக்களாகக் கிறிஸ்தவத்தை ஏற்பதைக் குறிக்கிறது. ஒரு குறிப்பிட்டக் குலம் அல்லது பழங்குடி மக்கள் இனம் அல்லது சாதிக் குழு அல்லது குடும்பம் அல்லது மக்கள் சமுதாயம் கணிசமான, அடை யாளம் காணக்கூடிய எண்ணிக்கையில், எடுத்துக்காட்டாக, ஒரே வேளையில் நூற்றுக்கணக்கானோர் கிறிஸ்தவத்தை ஏற்பதை குழு இயக்கம் என அழைக்கிறோம். இப்பின்னணியத்தின் அடிப்படையில் கிறிஸ்தவக் குழு இயக்கங்களைக் காண விளைவோம்.

**காரணங்கள்:**

இந்தியக் கிறிஸ்தவ வரலாற்றைப் படிக்கும்பொழுது குழு இயக்கங்கள் அசாதாரணமான நிகழ்வுகள் அல்ல என உணரலாம். இந்தியாவிலுள்ள ஒவ்வொரு கிறிஸ்தவப் பிரிவிலும் / பாரம்பரியத்திலும் இது நிகழ்ந்துள்ளது. என்றாலும் அதற் கானக் காரணங்களும், நோக்கங்களும் மிகவும் மாறுபட்டவைகளாக இருந்துள்ளன என நாம் அறிய முடிகின்றது. **இந்தியாவில் கிறிஸ்தவக் குழு இயக்கங்கள்** என்ற தம்முடைய நூலில் ஜே.வாஷோம் பிக்கெட் "நற்செய்திப் பறிமாறிக்கொள்ளப் பட்டபோது அதனைக் கேட்ட / ஏற்றுக்கொண்ட மக்கள் மனதிலே முழுமையான வாழ்வு வாழ வேண்டும், வாழ்க்கையை முன்னேற்றமடையச் செய்யவேண்டும். அதுவரை வாழ்ந்து வந்த வாழ்க்கையைவிடச் சற்று சிறப்பான வாழ்க்கை வாழ வேண்டும். தங்களிடையேக் காட்டப்பட்ட அன்பையும், பரிவையும் மதிக்க வேண்டும். நூற் றாண்டுகளாக வினா எதுவும் எழுப்பாமல் அதுவரை சகித்துவந்த கொடுமைகளி லிருந்து விடுபட வேண்டும். தங்கள் பிள்ளைகள் உயரிய வாழ்க்கை வாழ வேண்டும் என்பவை போன்ற விழிப்புணர்வுகளை நற்செய்தி ஏற்படுத்தியது " என்கிறார்.[1] எனவே தாங்கள் மனிதர்களாக நடத்தப்பட வேண்டும் என விரும்பியவர்கள், சமுதாய விடுதலை, ஆன்மிக விடுதலை போன்றவற்றைப் பெற விரும்பியவர்கள் கிறிஸ்தவராயினர் என நாம் கூறலாம்.

எனவே கிறிஸ்தவக் குழு இயக்கங்களுக்கானக் காரணங்களை மூன்று விரிவான தலைப்பின் கீழ், அதாவது ஆன்மிக, சமுதாய, சமயம் சார்ந்தக் காரணங்கள் என வகைப்படுத்தலாம். ஒரு சில எடுத்துக்காட்டுகள் மூலம் அவைகளை நாம் காண முற்படுவோம்.

**ஆன்மிகக் காரணங்கள்: ( Spiritual Reasons )**

**திருத்தூதுவர் செயல்கள்** என்னும் நூலில் குறிப்பிடப்படுகின்ற கிறிஸ்தவத்தை நோக்கிய குழு இயக்கங்கள் ஆன்மிகக் காரணங்களுக்கான சிறந்த எடுத்துக் காட்டுகளாகும். திருத்தூதுவர் தூய தோமாவினால் கிறிஸ்தவத்தை ஏற்ற மலபார் மக்கள், கிறிஸ்தவ நம்பிக்கையைப் பின்பற்ற வேண்டும் என்கிற உண்மையான ஆவலினால் தாங்கள் கிறிஸ்தவத்தை ஏற்றதாகத் தெரிவிக்கின்றனர். பிராட்டெஸ் டன்ட்டு திருச்சபைப் பிரிவுகளில் ஆன்மிகக் காரணத்தின் அடிப்படையில் நிகழ்ந்த குழு இயக்கத்திற்கு மகராசன் வேதமாணிக்கத்தின் சமயமாற்றமும் அதனைத் தொடர்ந்த அவரது சாம்பவார் சாதியினரும் கிறிஸ்தவத்தை ஏற்ற நிகழ்வும் சுட்டிக் காட்டப்படுகிறது. **அவர் கிருபையின் வெற்றிகள் ( Triumphs of His Grace )** என்னும் தனது நூலில் இராஜையா டி.பால், வேதமாணிக்கத்தின் மதமாற்றத்தை மிகவும் தெளிவாக எழுதியுள்ளார்.[2] அதன் சுருக்கம் பின்வருமாறு:

தமிழ்நாட்டின் கன்னியாகுமரி மாவட்டத்தில் மைலாடி என்னும் சிற்றூர் உள்ளது. அவ்விடத்தைச் சேர்ந்தவர் மகராசன் வேதமாணிக்கம் என்னும் சிவ பக்தர். இந்தியச் சமுதாயத்தின் அடித்தளத்தில் வைக்கப்பட்டிருந்த சாம்பவார் என்னும் மிகவும் தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவர் அவர். எனவே அவர் ஒரு தலித். தன்னுடைய ஊரிலிருந்து நெடுந்தொலைவில் இருந்த சிதம்பரம் என்னும் ஊருக்குப் புனிதப் பயணமாகச் செல்ல விரும்பினார். சிதம்பரத்தில் ஒரு புகழ்பெற்ற சிவன் ஆலயம் இருந்தது. எனவே மகராசன் வேதமாணிக்கம் தன் நெருங்கிய ஒரு உறவினருடன் கால்நடையாகப் புனிதப் பயணத்தைத் தொடங்கினார். இருவரும் திரும்பி வரக்கூடிய நாளையும் தன் இனத்தவருக்குத் தெரிவித்துவிட்டுப் புறப்பட்டனர். அனேக நாட்கள் பயணத்திற்குப் பின் சிதம்பரத்தை அடைந்தனர். ஆனால் மிகுந்த ஆர்வத்துடன் சென்ற அவர், அவருடைய கீழ்சாதியின் அடிப்படையில் சிதம்பரம் கோவிலினுள் அனுமதிக்கப்படவில்லை. அது அவருக்குத் தாங்க இயலாத அதிர்ச்சியை ஏற்படுத் தியது. மனமுடைந்துபோன அவர் அவ்வாலயக் குளத்தின் படிக்கட்டுகளில் உட் கார்ந்து கண்களை மூடிய வண்ணம் ஓய்வெடுத்துக்கொண்டிருந்தார். அச்சமயத்தில், வெண் ஆடைதரித்த ஒருவர் அவர் கனவில் தோன்றி அவரைத் தஞ்சாவூர் செல்ல ஆலோசனைக் கூறினார். தஞ்சாவூரிலும் ஒரு சிவன் ஆலயம் இருந்தது. அத்துடன் அவருடைய உறவினர்களும் அங்கு வாழ்ந்து வந்தனர். அவருடைய கனவைக் கடவுளின் வாக்காக எடுத்துக்கொண்ட அவர் தன்னுடன் வந்த உறவினரையும் கூட்டிக்கொண்டு தஞ்சாவூர் சென்றார். அங்கு அவர் செல்லுமுன்பாகவே அவரு டைய உறவினர்கள் கிறிஸ்தவத்தைத் தழுவியிருந்ததை அவர் அறிந்துகொண்டார். அவ்வுறவினர்கள் தங்களின் கிறிஸ்தவத் தொழுகைக்கூடத்திற்கு வேதமாணிக் கத்தை அழைத்தனர். அவர் அங்கு சென்றடைந்தபோது அங்கிருந்த நற்செய்திப் பணியாளர் அவரைத் திறந்த மனதுடன் வரவேற்றார். அது அவருக்கு அதிக வியப்பைத் தந்தது. அதனால் கிறிஸ்தவ நம்பிக்கையை அறிந்துக்கொள்ள வேண்டும் என்னும்

ஆர்வத்தை அவருக்குள் ஏற்படுத்தியது. அவர் பெற்ற கிறிஸ்தவப் போதனை அவருக்கு மிகுந்த மகிழ்ச்சியையும், மனநிறைவையும் தந்தது. அதனால் அவர் கிறிஸ்தவத்தைத் தழுவினார். மையிலாடியிலிருந்த தனது சாதி மக்களுக்கும், தான் பெற்ற இன்பத்தையும், அனுபவத்தையும் பகிர்ந்துக்கொள்ள விரும்பினார். எனவே தன்னுடைய ஊருக்குத் திரும்பும் பயணத்தைத் தொடங்கினார். அவர் ஊர் திரும்ப அவர் குறித்திருந்த நாள் கடந்துவிட்டக் காரணத்தினால், அவருடைய உறவினர்கள், அவர் காலமாகியிருப்பார் எனக்கருதி, இறந்துபோனவர்கள் நினைவாகச் செய்யப் படும் சடங்குகளைச் செய்ய ஆயத்தப்பட்டுக் கொண்டிருந்தனர். அக்குறிப்பிட்ட வேளையில் மகராசன் வேதமாணிக்கம் மையிலாடியை அடைந்தார். அவரை உயிருடனும், நல்ல சுகத்துடனும், பெலத்துடனும் கண்ட அவருடைய உறவினர்கள் மிகுந்த திகைப்படைந்தனர். நடந்ததைக் கேள்விப்பட்ட அவர்கள் அனைவரும் கிறிஸ்தவத்தை ஏற்க முன் வந்தனர்.

வேதமாணிக்கத்தின் மதமாற்ற வரலாற்றின் மூலம் நாம் ஊகிக்கக்கூடிய தென்னவெனில், ஆன்மிகக் காரணமே அவருடைய மதமாற்றத்தின் முதன்மை யானக் காரணமாக இருந்தது என்பதே. அதே வேளையில், இந்தியச் சமுதாயத்தில் காணப்பட்ட சாதிப்பகுப்பு முறையும் அவரது முடிவிற்குக் காரணமாகவும் இருந் திருக்கக்கூடும் எனக்கருதலாம். கிறிஸ்தவம் வேதமாணிக்கத்தையும், அவருடைய சாம்பவார் சமூகத்தினரையும் கௌரவத்துடன் நடத்தியக் காரணத்தினால், அவர்கள் கிறிஸ்தவத்தை மனமுவந்து ஏற்றனர். தொடக்கத்தில் எஸ்.பி,சி,கே. மூலமும், பின்பு எல்.எம்.எஸ். மூலமும் நற்செய்திப்பணியாளராகச் செயல்பட்டுக்கொண்டிருந்த டபிள்யூ.டி.ரிங்கல்தோபே (W.T.Ringeltaube), வேதமாணிக்கத்தின் உதவியுடன் மையி லாடியிலும், அதன் சுற்றுப்புறங்களிலும் நிகழ்ந்த கிறிஸ்தவ சமயமாற்றத்தைப் பலப் படுத்தினார்.

வேதமாணிக்கத்தின் சமயமாற்ற அனுபவத்திற்கொத்த நிகழ்வுகள் இந்தியாவின் பிற பகுதிகளிலும் நிகழ்ந்துள்ளன. ஆன்மிகத் தாகத்தின் அடிப்படையில் ஏற்பட்ட சமயமாற்றங்களுக்குச் சான்றாக பின்வரும் எடுத்துக்காட்டுகளைக் கூறலாம். பிளவுபடாத பஞ்சாபில் இருந்த சியால்கோட் என்னுமிடத்தில் இருந்தவர் டிட் (Ditt) என்பவர். அவர் சூஹ்ரா (Chuhhra) சமுதாயத்தைச் சேர்ந்தவர். இவர்கள் துப்புரவுத் தொழிலில் ஈடுபட்ட தலித் மக்கள். கி.பி.1855இல் டிட் கிறிஸ்தவத்தைத் தழுவினார். ஸ்காட்லாந்திலிருந்து வந்திருந்த ஐக்கிய பிரஸ்பித்தீரிய மிஷன் இதற்குக் காரணமாகும். அருள்திரு எஸ்.மார்டின் என்னும் திருப்பணியர், டிட் கிறிஸ்தவத்தைப் புரிந்துக்கொள்ள உதவினார். திருப்பணியர்கள் அவரைத் தங்களுடன் தங்கியிருக்க கேட்டபொழுதும், அவர் தன் இன மக்களிடம் சென்று வாழவும், தான் பெற்ற, புதிய சமய அனுபவத்தை அவர்களுடன் பகிர்ந்துக் கொள்ளவும் விருப்பினார். அதன் விளைவாக அவருடைய சூஹ்ரா சாதி மக்களிடையே குழு இயக்கம் ஏற்பட்டது. அந் நூற்றாண்டின் இறுதிக்குள் அக்குழுவினர் அனைவரும் கிறிஸ்தவத்தைத் தழுவினர்.

மேகாலயா மாநிலத்தில் வாழும் காரோ (Garo ) பழங்குடியினர் இனத்தைச் சேர்ந்த ஓமெத் (Omed) என்பவர் கி.பி.1863இல் கிறிஸ்தவத்தைத் தழுவினார். அவர் கிறிஸ்தவ நற்செய்தி அடங்கிய துண்டுத்தாளொன்றை வாசித்தக் காரணத்தினால் கிறிஸ்தவரானார். அச்சமயத்தில் அவர் குவாஹத்தியில் / கௌஹத்தியில் ஒரு படைவீரராக இருந்தார். வெகு விரைவில் அவர் ஒரு திருச்சபைப் பணியாளரானார். தன்னுடைய இன மக்களிடையே நற்செய்தியை அறிவித்தார். அவருடைய பணியின் விளைவாக, அவர்களில் அனேகர் கிறிஸ்தவத்தை ஏற்று, குழு இயக்கத்தைத் தொடங்கி வைத்தனர். அங்கு மிகப் பெரிய கிறிஸ்தவ சமுதாயம் அமையப்பெற்றது.[3] வடகிழக்கிந்தியாவிலுள்ள ஆவோ நாகா (Ao Naga) பழங்குடியினரிடையேயும், மிசோ (Mizo) பழங்குடியினரிடையேயும் நடைபெற்ற அனேகக் குழு இயக்கங்கள் அவர்களிடையே ஏற்பட்ட ஆன்மிக எழுச்சிகள் மூலமே நடைபெற்றன.

இதே போன்று இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலும் குழு இயக்கங்கள் நடை பெற்றுள்ளன. விஜயவாடாவில் சி.எம்.எஸ்.பணியின் விளைவாக கிறிஸ்தவத்தை ஏற்ற கள்ளர் இனத்தைச் சேர்ந்த வெங்கையாவும், கிறிஸ்தவத்தைக் குழுவாக ஏற்ற அவரது கள்ளர் இன மக்களும், ஓங்கோலில் பணியாற்றிய அமெரிக்க பாப்திஸ்து அருள்பணிக் குழு மூலம் கிறிஸ்தவதை ஏற்ற ஒய்.பெரையாவும் அவர் மூலம் கிறிஸ்தவத்தை ஏற்ற மாதிகா இனக்குழு இயக்கமும் குறிப்பிடத்தக்க எடுத்துக்காட்டு கள். இவைகளையும், இதற்கொத்த குழு இயக்கங்களையும் விவரிக்க இடம் போதாது என்கின்ற காரணத்தினால் இத்துடன் இவைகளை நிறுத்திக் கொள்வோம்.

## சமுதாயக் காரணங்கள்: (Social Reasons )

இந்தியாவில் கூட்டுக்குடும்ப வாழ்க்கைமுறை மிகவும் சாதாரணமாக நிலவி வந்தது. அத்தகைய சமுதாய முறையில் ஒரு குறிப்பிட்ட குடும்பத்தின் அல்லது குழுவின் அல்லது சாதியின் தலைவரோ, வயதில் மூத்த அங்கத்தினரோ கிறிஸ் தவத்தைத் தழுவினால், அக்குடும்பமோ, சமுதாயமோ அந்நபரைப் பின்பற்றும். "என்னுடைய சொந்தக்காரர்கள் கிறிஸ்தவரானபின், நான் தொடர்ந்து இந்துவாக இருக்க விரும்பவில்லை" என்பது அதிகமாக, மறுபடியும் மறுபடியும் கூறப்பட்ட மிகவும் சாதாரணமான மறுமொழியாக இருந்தது. எனவே சமுதாய முறைமையும், நெருங்கியக் குடும்ப உறவுகளும் குழு இயக்கங்களுக்கு வழி நடத்தின. வடகிழக்கு இந்தியா, சோட்டா நாகபுரி, மத்திய இந்தியா ஆகிய பகுதிகளில் வாழ்ந்து வந்த பழங்குடியினமக்களும் கிறிஸ்தவத்தைக் குழுக்கள் குழுக்களாகத் தழுவவும் அதுவே காரணம் எனலாம். பழங்குடியினமக்கள் தலைவர்கள் கிறிஸ்தவத்தைத் தழுவிய பொழுது அவர்களின் செல்வாக்கு அவர்களின் இன மக்கள் குழுக்களாகக் கிறிஸ்தவத்தைத் தழுவத் தூண்டியது.

இந்தியாவிற்கு வந்த நற்செய்திப்பணியாளர்கள் குறிப்பாக பிரித்தானியாவி லிருந்து வந்தவர்கள் இந்தியச் சமுதாயத்தில் நிலவி வந்த சில 'நாகரிகமற்ற' பழக்கங்

களைக் கண்டு திடுக்கிட்டனர். எனவே அவைகளைக் களைந்துவிடவும், சமுதாயத் தில் சீர்திருத்தத்தைக் கொண்டு வரவும் முயற்சித்தனர். அத்தகைய ஒரு முயற்சி இந்திய அரசர்களின் கீழிருந்த திருவாங்கூர்- கொச்சி பகுதியில் நற்செய்திப் பணியாற்றிக்கொண்டிருந்த இலண்டன் அருள்பணிச்சங்க (எல்.எம்.எஸ்) ஊழியர் களால் செய்யப்பட்டது. அங்கு பிரித்தானிய அரசின் பிரதிநிதி ஒருவரும் இருந்தார். அவர்களின் சீர்திருத்த முயற்சி பெண்கள் மேலாடை அணிவதைப் பற்றியது. பாரம் பரியத்தின்படி, நாடார்கள் எனப் பின்பு அறியப்பட்ட, கீழ்சாதி சாணார் பெண்கள் திருவிதாங்கூர் பகுதியிலிருந்த மேல் சாதியினரால் இடுப்புக்கு மேல் எவ்வித ஆடையும் அணிய அனுமதிக்கப்படவில்லை. ஆனால் சாணார் பெண்கள் கிறிஸ்த வத்தைத் தழுவிய பொழுது, அவர்கள் தங்கள் உடம்பின் மேல்பகுதிகளை ஆடையி னால் மூடிக்கொள்ள எல்.எம்.எஸ். நற்செய்திப்பணியாளர்கள் அவர்களை ஊக்கப் படுத்தினர்.

கி.பி.1829இல் கிறிஸ்தவத்தைத் தழுவிய சாணார் பெண்கள் மட்டும் 'குப்பாயம்' என்னும் மேலாடையை அணிய அனுமதிக்கும் அரசு ஆணை ஒன்றைத் திருவிதாங்கூர் அரசி வெளியிட்டார். திருவிதாங்கூர் அரசுப் பகுதியில் பெரும்பான்மையினராக இருந்த சூத்திரர்களால் அவ்வாணை மிகவும் தீவிரமாக எதிர்க்கப்பட்டது. அதன் விளைவாக 'மேலாடை கலகம்'/'தோள் சீலை கலகம்' எனப் பொதுவாக அறியப்படும் பரந்துபட்ட போராட்டம் வெடித்தது. மேலாடை அணிந்த வண்ணம் இரணியல் (Eraniel ) என்னுமிடத்திலிருந்த சந்தைக்குச் சென்றக் கிறிஸ்தவப் பெண்கள் துன் புறுத்தப்பட்டனர். அவர்கள் அணிந்திருந்த மேலாடைகள் கிழிக்கப்பட்டன. அத்தகைய நிகழ்வு ஒன்று கோட்டார் சந்தையிலும் நடந்தது. இரணியல் நிகழ்வு உக்கிரமானதாக ஆகியது மட்டுமல்லாமல், பிற இடங்களுக்கும் பரவியது. மேகோடு (Maycode) என்னுமிடத்திலிருந்த வழிபாட்டுமனையொன்று தீயிடப்பட்டு எரிக்கப் பட்டது. நாகர்கோவிலிலிருந்த பிரித்தானிய அரசுபிரதிநிதியின் பங்களாவும், இரண்டு மிஷன் பள்ளிக்கூடங்களும், பல்வேறு இடங்களிலிருந்த வழிபாட்டுமனைகளும் எரிக்கப்பட்டன. திட்டுவிளை என்னுமிடத்தில் ஒரு சாணார் கிறிஸ்தவரும் அவருடைய மனைவியும் சூத்திரர்களின் கலகக்காரக் கூட்டமொன்றினால் தாக்கப்பட்டனர். அத்துடன் அவர்களின் வீடும், அதற்கருகிலிருந்த இருபத்தேழு வீடுகளும் எரிக்கப் பட்டன. இத்தகையக் கலகங்கள் பெருமளவிற்கு 1850ஆம் ஆண்டுகளில் நடை பெற்றன. இத்தோள் சீலைக் கலகத்தை ஓர் முடிவிற்குக் கொண்டுவர அப்பகுதியி லிருந்த நற்செய்திப்பணியாளர்கள் அதிக சிரத்தை எடுத்தனர் என்பதை அவர்களில் நால்வர் கி.பி.1859 மார்ச் மாதம் 26ஆம் நாள் இந்தியாவின் அரசு செயலராக ( Secretary of State for India ) இருந்த ஸ்டான்லி பிரபு என்பவருக்கு எழுதியக் கடிதத்தின் வாயிலாக அறிய முடிகிறது.[4] சாணார் பெண்கள் மேலாடை அணிய அனுமதிக்கும் அரசு ஆணையொன்று திருவாங்கூர் அரசினால் கி.பி.1859இல் வெளியிடப்பட்டது. இதற்குச் சென்னை மாநில ஆளுநர் சி.எ. த்ரெவெல்யனின் (C.E.Trevelyan)

தூண்டுதலும் காரணம் என்பர்.[5] இதன் விளைவாகத் தற்கால கன்னியாகுமரி மாவட்டத்திலிருந்த தென் திருவாங்கூர் சாணார்கள், குழுவாகக் கிறிஸ்தவத்தைத் தழுவினார்கள். பிரித்தானிய இந்தியாவின் பிறப்பகுதிகளிலும் இருந்தக் கிறிஸ்தவப் பெண்களுக்கு மேலாடை அணியும் உரிமை வழங்கப்பட மேற்கூறப்பட்ட நிகழ்வு தூண்டுகோலாக அமைந்தது. மேலாடை அணியும் உரிமையும், அதைத் தொடர்ந்த, குழுக்கள் குழுக்களாகக் கிறிஸ்தவ சமயத்தை ஏற்ற இயக்கங்களும் மனித விடுதலைக்கும், மதிப்பிற்கும், அடையாளப்படுத்துதலுக்கும் சான்றாக உள்ளன.

சமுதாய மாற்றத்திற்கான ஆர்வத்தைத் தூண்டிவிட்டதும், காலம் காலமாக இந்து சமுதாயம் கடைபிடித்து வந்த சாதி வேற்றுமைகள், மனிதத் தன்மையை மதிக்காத பழக்கங்கள் ஆகிய விலங்குகளை உடைத்தெரிய உதவியதுமான கிறிஸ்தவத்தைப், பாதிக்கப்பட்டவர்கள் குழுக்களாக ஏற்றனர். இருபதாம் நூற்றாண்டில் நிகழ்ந்த இந்து கோவில்களுக்குள் நுழையும் போராட்ட இயக்கம் கூட அத்தகைய ஆர்வத்தின் விளைவே. தாழ்த்தப்பட்ட மக்களும், தலித்களும் கிறிஸ்தவத்தைத் தழுவுவதைத் தடுக்கவும் இந்து கோவில் நுழைவு போராட்டத்திற்கான ( Temple-entry Movement ) காரணம் என்ற ஒரு கருத்தும் தெரிவிக்கப்படுகிறது.

பிராட்டஸ்டன்ட் நற்செய்திப்பணியாளர்களின் கல்விக்கூடங்கள் அனைத்து சாதி யினரையும் ஏற்றுக்கொண்ட காரணத்தினால் அனைத்துப் பிரிவினரும், குழு வினரும் விழிப்புணர்வு பெற்றனர். சமுதாயத்தில் முன்னேறிவரக் கல்வி மிகவும் அவ சியம் என, குறிப்பாகத் தாழ்த்தப்பட்ட சாதியினரும், தலித்களும் உணர்ந்தனர். எனவே ஒரு சில இடங்களில் குழு இயக்கத்திற்குக் கல்வியும் ஒரு கருவி எனக்கூறலாம்.

மன்னர்கள் ஆட்சிக்குட்பட்ட இந்தியப் பகுதிகளில் வெளியிடப்பட்ட அடிமை ஒழிப்புச் சட்டங்கள், குழு சமயமாற்ற இயக்கத்திற்குக் காரணமாக இருந்திருக்கக் கூடும் எனலாம். அத்தகையச் சட்டம் ஒன்று திருவிதாங்கூர் அரசினால் கி.பி.1853 இல் வெளியிடப்பட்டது.[6] அடிமை ஒழிப்புச் சட்டம் திட்டவட்டமாகவே சமுதாய மாற்றத்திற்கும், சுய மரியாதைக்கும் வழிநடத்தியது எனலாம்.

### சமய சார்பற்றக் காரணங்கள்: (Secular Reasons)

இந்தியர்கள் சமய சார்பற்றக் காரணங்களுக்காகவும் கிறிஸ்தவத்தைத் தழுவினர் எனலாம். கி.பி.1870ஆம் ஆண்டுகளில் இந்தியாவில் அதிகக் கடுமையானப் பஞ்சங்கள் ஏற்பட்டன. அனேகமாக இந்தியாவின் அனைத்துப் பகுதிகளும் அதினால் பாதிக்கப்பட்டிருந்தன. அதின் விளைவாக ஆயிரமாயிரம் மக்கள் குறிப்பாக ஏழைகள் மரித்துப்போயினர். அச்சூழலில் கிறிஸ்தவ நற்செய்திப்பணி யாளர்கள் பஞ்ச நிவாரணப் பணிகளில் ஈடுபட்டனர். அவர்களின் உணவிற்காக வேலைத் திட்டங்கள் ( Food for Work ), அனேகர் கிறிஸ்தவத்தை ஏற்கவும், குழு இயக்கங்கள் ஏற்படவும் உதவின எனலாம். ஓங்கோலில் நடைபெற்ற அத்தகைய ஒரு திட்டம் பக்கிங்ஹாம் கால்வாய் வெட்டும் திட்டமாகும். இதனால் அனேகர்

மரணத்தின் வாயிலிலிருந்து தப்புவிக்கப்பட்டனர். கிறிஸ்தவத்தை அவர்கள் ஏற்கக் காரணமென்ன என்று கேட்கப்பட்டபொழுது அவர்கள் தெரிவித்ததாவது; இந்து ஆலயங்களுக்குப் பரந்துபட்ட விளைச்சல் நிலங்கள் உண்டு; அவைகளில் விளையும் தானியங்களைச் சேர்த்து வைக்கும் களஞ்சியங்களும் உண்டு; அவைகளில் அதிக தானியங்களும் உண்டு. என்றாலும் பஞ்சக் காலத்தில் பாதிக்கப்பட்ட மக்களுக்கு அவைகளைப் பகிர்ந்து கொள்ளவோ, உதவவோ இந்து ஆலயங்கள் முன் வரவில்லை. எனவே தாங்கள் இந்து சமயத்தில் தொடர்ந்து இருக்க விரும்பவில்லை; அதே வேளையில் தங்களது நிவாரணப் பணிகளினால் பஞ்சத்தினால் பாதிக்கப்பட்ட மக்களைக் காப்பாற்றிய கிறிஸ்தவப் பணியாளர்களும் அவர்கள் காட்டிய அன்பும் தங்களைக் கிறிஸ்தவத்தை ஏற்கச் செய்தது என்பதே. எனவே கி.பி.1870களிலும், அதன் பின்பும் இயற்கை ஏற்படுத்திய பெருந்துன்ப நேரங்களில் மக்கள் பாதிக்கப்பட்டபொழுது இந்து சமயத் தலைவர்கள் காண்பித்த அக்கறையின்மையும், உணர்ச்சியின்மையும் கிறிஸ்தவத்தை நோக்கியக் குழு இயக்கங்கள் ஏற்படக் காரணம் எனலாம்.

வடகிழக்கு இந்தியாவிலுள்ள மிசோராமில் கி.பி.1911 – 1912களில் மூங்கில் பஞ்சம் ஏற்பட்டது. அச்சமயத்தில் அங்கிருந்த கிறிஸ்தவர்கள் கிறிஸ்தவத்தை ஏற்காத, தங்களின் அருகாமையிலிருந்த பழங்குடி மக்களை அன்புடனும், அக்கறையுடனும் கவனித்துக் கொண்டனர். அதனால் அனேகர் கிறிஸ்தவத்தை ஏற்றனர். எனவே மூங்கில் பஞ்சமும் குழு இயக்கத்திற்குக் காரணம் எனலாம்.[7]

போர்த்துக்கீசிய அல்லது பிரித்தானிய குடியேற்ற கிறிஸ்தவ அரசுகளிட மிருந்து பெற்றப் பாதுகாப்பின் விளைவாகவும் குழு இயக்கங்கள் ஏற்பட்டன. தூத்துக்குடிக்கும், கன்னியாகுமரிக்கும் இடைப்பட்ட சோழ மண்டல / கோரமண்டல் கடற்கரையில் வாழ்ந்து வந்த பரதவர்கள் கி.பி.16ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் கிறிஸ்தவத்தைத் தழுவினர். இது போர்த்துக்கீசியர் ஆட்சி காலத்தில் நடைபெற்ற ஒன்று. முத்துக்குளிக்கும் தொழிலில் ஈடுபட்டிருந்த பரதவர்கள் அரேபிய வர்த்தகர் களால் கொடுமையாக நடத்தப்பட்டனர். இடையூறுகளுக்குள்ளாயினர். அப்போது அவர்கள் பாண்டிய அரசனின் பாதுகாவலை நாடினர். அது அவர்களுக்குக் கிட்டாத போது கொச்சியிலிருந்த போர்த்துக்கீசியரின் உதவியை நாடினர். போர்த்துக்கீசியர் பரதவர்களுக்குத் தேவையான பாதுகாப்பை அளித்தக் காரணத்தினால், அவர்கள் ஒரு சமுதாயமாகப் போர்த்துக்கீசியர் பின்பற்றிய கிறிஸ்தவ சமயத்திற்கு மாறினர்.[8]

சோடா நாகபுரியிலிருந்த பழங்குடி இனத்தவர், சமவெளியிலிருந்த வட்டிக்குப் பணம் கொடுப்பவர்களாலும், நிலச்சுவான்தார்களாலும் சுரண்டப்பட்டனர். அடிமைகளைவிடக் கேவலமாகவும் நடத்தப்பட்டனர். எனவே கி.பி.1850ஆம் ஆண்டுகளில் பிரித்தானிய இந்திய அரசு அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கத் தொடங்கியது. மேலும் கி.பி.1880ஆம் ஆண்டுகளில் பல நற்செய்திப்பணியாளர்கள் அவர்களிடையேப் பணியாற்றி வந்தனர். குறிப்பாக உரோமன் கத்தோலிக்கச்

சபையைச் சேர்ந்த பெல்ஜிய நாட்டு இயேசு சங்கத் துறவிகள் அவர்களை அடிமைப் படுத்தியிருந்தவர்களின் கைகளிலிருந்து விடுவிக்க வேண்டி, அவர்கள் சார்பில் வழக்குகள் தொடுத்து, நீதிமன்றங்களில் வாதாடி, அவர்களுக்கு விடுதலையும், நீதியும் வழங்கப்படச் செய்தனர். அதனால் பழங்குடி இனத்தவர் விடுதலை மட்டு மின்றி, சுய மரியாதையையும் பெற்றனர். எனவே கி.பி.19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி முழுவதிலும் அவர்களிடையே குழு இயக்கங்கள் நடைபெற்றன.அவர்கள் தங்கள் சொந்தக் கால்களிலேயே நிற்கத் தூண்டப்பட்டனர். அதற்காக அவர் களிடையே பல்வேறு கூட்டுறவு சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டன. அதனால் பழங்குடி இன மக்கள் கௌரவத்துடனும், மதிப்புடனும் வாழ முடிந்தது.[9]

## சில முக்கிய சிறப்புகள்:

இந்தியாவில் கிறிஸ்தவத்தை நோக்கி வந்த குழு இயக்கங்கள் அசாதாரண மானவை அல்ல. அவைகளுக்கான காரணங்கள் வெவ்வேறாக இருந்தாலும், ஒன் றோடொன்று பிணைந்திருந்தாலும் அவைகளில் சில சிறப்பம்சங்கள் காணக் கிடக்கின்றன.

1. இந்தியர்கள் பொதுவாகச் சமயச் சிந்தனையுடையவர்களாகவும், சமுதாயத்தில் நெருக்கமான உறவு உடையவர்களாகவும் இருந்ததினால், கிறிஸ்தவத்தை ஏற்பதற்கு குழு இயக்கம் இயற்கையான வழிமுறையாக இருந்தது.

2. மேல் சாதியைச் சேர்ந்தவர்கள் தனி நபர்களாகத், தன்னந்தனியே கிறிஸ்தவத்தை ஏற்றபொழுது அவர்களுக்கு அவர்கள் சமுதாயத்தின் பாதுகாப்பு கிட்டவில்லை. ஆனால் குழு இயக்கங்களில் அச்சிக்கல் இல்லை. ஏனெனில் சமுதாயத்தின் பாதுகாப்பும், தங்கள் சமுதாயத்துடன் இணைந்திருத்தலும், அதன் பிணைப்பும் கிறிஸ்தவத்தை ஏற்றவர்க ளுக்குக் கிடைத்தது ஒரு சிறப்பு.

3. அதே சாதியையோ இனத்தையோ சேர்ந்த ஆனால் கிறிஸ்தவத்தை அது வரை ஏற்காதோருக்கு, குழு இயக்கம் உதவியாக இருந்தது. குறிப்பாக பழங்குடி இனத்தவரிடையே இருந்த சமுதாய உணர்வும், ஐக்கிய உணர் வும் பிறர் கிறிஸ்தவத்தை ஏற்கத் தூண்டுதலாக இருந்தன. ஒரு குறிப்பிட்ட சாதியினரோ, பழங்குடி இனத்தவரோ கிறிஸ்தவத்தை ஏற்றவுடன் அச்செய்தி விரைவில் பரவியது. அதனால் மற்ற கிராமங்களிலிருந்த அதே சமுதாயத்தினர் கிறிஸ்தவத்தை ஏற்பது இலகுவாக இருந்தது.

4. குழு இயக்கம் ஏற்பட்ட இடங்களில் மேற்கத்திய கலாச்சாரத்தின் பாதிப்பு மிகவும் குறைவாக இருந்தது. அனேகக் குழு இயக்கங்கள் கிராமங்களில் ஏற்பட்டக் காரணத்தால், அங்கு காணப்பட்ட சமுதாய அமைப்புகளும்,

கலாச்சாரப் பழக்கவழக்கங்களும், வழிபாடுகளில் இந்திய இசைக் கருவிகளைப் பயன்படுத்துதலும் தொடர்ந்தன.

## மதிப்பீடு:

1. இந்தியாவில் குழு இயக்கங்கள் பெருமளவிற்கு ஒடுக்கப்பட்ட, தள்ளப்பட்ட தலித் மக்களிடையே ஏற்பட்டக் காரணத்தினால் கிறிஸ்தவம் தாழ்த்தப் பட்டவர்களுக்கான மதம் எனக்கருதப்படுகின்றது. அதே வேளையில் அதேக் காரணத்தினால் அது அதன் குணத்திலும், பொருளிலும் விடுதலை அளிக்கக்கூடியது என்பதையும் உறுதி செய்கிறது.

2. குழு இயக்கங்கள் கிறிஸ்தவத் திருச்சபையில் சாதி பழக்கவழக்கங்களும், பாகுபாடுகளும் கடைபிடிக்கப்பட வழி வகுத்துள்ளன. அது எதிர் விளைவு களை ஏற்படுத்துவதாக அமைந்துள்ளது. ஒரு குறிப்பிட்ட இடத்திலுள்ள ஒரு சாதியைச் சேர்ந்தவர்கள் குழுவாகக் கிறிஸ்தவத்தைத் தழுவிய பொழுது, அது அப்பகுதியிலுள்ள மற்ற சாதியினர் கிறிஸ்தவத்தை ஏற்ப தற்குத் தடையாக இருந்துள்ளது. அதனால் குழு இயக்கங்களின் வேகம் குறைந்துள்ளது. ஆனால் வடகிழக்கு இந்தியா இதற்கு விதிவிலக் கெனலாம்.

3. குழு இயக்கங்களில் தனிநபரின் மனமாற்றம் அசட்டை செய்யப்பட் டுள்ளது. அவ்விடங்களில் கிறிஸ்தவத்தைத் தழுவியவர்களின் எண்ணிக் கைக்கேற்ப முழு நேர திருச்சபைப் பணியாளர்கள் இல்லாத காரணத்தி னால், போதிய கிறிஸ்தவப் போதனை தரப்பட இயலவில்லை. அதினால் தனிநபர் மனமாற்றம் அழுத்தம் பெறவில்லை எனலாம். போதிய கிறிஸ் தவப் போதனையும், கவனிப்பும் இல்லாத இடங்களில் பெயர் கிறிஸ்தவம் நிலவி வந்துள்ளது.

4. குழு இயக்கங்களில் பெரும்பான்மையானவை பொருளாதாரத்தில் பின்தங்கிய, சுரண்டப்பட்ட சமுதாயத்தினரிடையே நிகழ்ந்துள்ளன எனவே அது சில பின்னடைவுகளுக்கு வழி நடத்தியுள்ளன. அத்தகைய கிறிஸ்தவர்கள் தங்கள் திருச்சபைகளைத் தற்சார்புடையவைகளாக ஆக்கவோ, பொருளாதாரத்தில் தங்கள் சொந்தக் கால்களில் நிற்கத் திறனற்றவர்களாகவோ இருப்பதினால், வெளிநாட்டு திருச்சபைகளின் பண உதவியை இன்னமும் நாடி நிற்கின்றன.

5. சமுதாயத்தில் குழு இயக்க மக்களின் தாழ்நிலை, அவர்களில் கல்வி கற்றோரின் எண்ணிக்கையைப் பாதித்துள்ளது. அதனால் சிறந்த, உயர்ந்த குணமும் திறமைகளும் உடையத் தலைவர்கள் உருவாக்கப் படுவதில் குறைவுள்ளது. இதனால் திருச்சபையில் ஊழல், குழுச் சண்டைகள், கட்சி அரசியல், போன்றவை வளர்ந்தன / வளர்கின்றன.

**முடிவுரை:**

முன்பே சுட்டிக்காட்டப்பட்டுள்ள வண்ணம், கிறிஸ்தவக் குழு இயக்கங்கள் இந்தியக் கிறிஸ்தவ வரலாற்றில் ஓர் அசாதாரணமான நிகழ்வு அல்ல. அப்படி யாயின், இந்நாட்களில் அவை நிகழாததற்கான காரணம் என்ன என்கின்ற வினா எழுப்பப்படுகின்றது அதற்கு ஒரு காரணம் மட்டுமே உள்ளது எனக்கூற இயலாது. அதற்கான ஒரு சில காரணிகளைச் சுட்டிக் காட்டலாம்:

1. வைதீக இந்து சமயத்தில் புத்தெழுச்சி ஏற்பட்டுள்ளது. அதனால் எதிர்க்கும் தன்மையுள்ள குழுக்கள் வைதீக இந்து சமயத்தில் எழும்பி உள்ளன. அவை இந்திய அரசியல் அடிப்படைச் சட்டத்தில் கூறப்பட்டுள்ள மதச் சுதந்திரத்தை மதிப்பதில்லை. அவைகள் பிற மதத்தினரைப் பற்றிய பொய் பிரச்சாரங்களைச் செய்து, இனக்கலவரத்தையும், வெறியையும், வெறுப் பையும், தூண்டிவிடுகின்றன. இந்தியாவிலுள்ள சில மாகாணங்களில் வெளியிடப்பட்டுள்ள மதச் சுதந்திர சட்டங்கள் அத்தகைய இந்து சமய புத்தெழுச்சிக்கு எடுத்துக்காட்டுகள் எனலாம்.

2. இன்றைக்குள்ள வரலாற்றுச் சூழல் வித்தியாசமானது. அடிப்படை வாழ்க்கை நிலைகளில் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. படித்தவர்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது. சமுதாயத்தில் முன்னேற வேண்டு மென்பது பொருளாதாரத்தின் அடிப்படையிலேயே இருக்கிறது. பொரு ளாதாரத்தில் முன்னேறிவிட்டால், சமுதாயத்தில் மதிப்பும், மரியாதையும் கிட்டும் என்று கருதப்படுகிறது. தொழில்மயம், நகரமயம் போன்றவை களும் குழு இயக்கங்களுக்குத் தடையாக உள்ளன.

3. குழு இயக்க கிறிஸ்தவர்களைப் பற்றிய கருத்தும் ஒரு காரணி எனலாம். அத்தகைய கிறிஸ்தவர்கள் ஆண்டவரும், மீட்பருமாகிய இயேசு கிறிஸ்து விற்கு உண்மையான சாட்சிகளாக வாழ்வதில்லை என்பது அனேகரின் கருத்து. அவர்களின் அன்றாடக வாழ்க்கை கிறிஸ்துவின் போதனையைப் பிரதிபலிப்பதாக இல்லை என்பதும் ஒரு கருத்து.

4. அனேக கிறிஸ்தவ வழிப்பாட்டுமனைகள் இந்தியக் கலாச்சாரத்தைப் பிரதிபலிப்பவையாக இல்லை. கிறிஸ்தவத்தைப் பரப்ப வந்த மேல் நாட்டு நற்செய்திப்பணியாளர்கள் இந்தியக் கிறிஸ்தவர்களின் கலாச்சாரத்திற்குச் சிறப்பிடமோ, முக்கியத்துவமோ கொடுக்க விரும்பியதில்லை.

5. தலித் கிறிஸ்தவர்களுக்கும், பழங்குடி கிறிஸ்தவர்களுக்கும் (வடகிழக்கு இந்தியாவில் உள்ளவர்களைத் தவிர) அரசாங்கத்தின் உதவிகளும், சலுகைகளும் குறிப்பாகப் பொருளாதார உதவிகள் மறுக்கப்படுகின்றன. ஒருவர் பின்பற்றும் சமயத்தின் அடிப்படையில் அவை மறுக்கப்படுவது அரசின் பாரபட்சக் கொள்கையைச் சுட்டிக்காட்டுகிறது. இது தலித்,

பழங்குடி கிறிஸ்தவர்களுக்குப் பெரும் இடையூறாக உள்ளது. இதனால் பல இடங்களிலுள்ள கிறிஸ்தவர்கள், குறிப்பாக ஆந்திர பிரதேசம் போன்றப் பகுதிகளில் உள்ளவர்கள் இரட்டை நிலைப்பாட்டைப் பின்பற்றுகின்றனர். அரசின் உதவி மறுப்பு, கிறிஸ்தவக் குழு இயக்கங்கள் தடுத்து நிறுத்தப்படுவதற்கு ஒரு காரணம் எனச் சுட்டிக்காட்டப்படுகிறது.[10]

6. தலித் கிறிஸ்தவர்களும், பழங்குடி கிறிஸ்தவர்களும் இரு முறை நசுக்கப் படுகின்றனர்; அதாவது இந்துக்களாலும், சகக் கிறிஸ்தவர்களாலும். எனவே கிறிஸ்தவக் குழு இயக்கங்கள் தடுக்கப்படுவதற்கு இதுவும் ஒரு காரணியாகக் கூறப்படுகின்றது.

இருந்தாலும் இன்றும் கிறிஸ்தவத்தை நோக்கிய குழு இயக்கங்கள் நடந்து வருகின்றதென தனிப்பட்ட, இரகசியமானக் கருத்தாகத் தெரிவிக்கப்படுகிறது. என்றாலும் அவை எண்ணிக்கையில் குறைவே. இன்று இந்தியாவிலுள்ள சூழல் காரணமாக அவைகள் பற்றிய செய்திகள் வெளியிடப்படுவதில்லை. குழு இயக்கங் களைப் பற்றிய செய்திகள் வெளிவரக்கூடாத நிலை இருந்தாலும், கடவுளின் அரசை அடைத்துவைக்கவோ, கட்டுப்படுத்தவோ முடியாது. இயேசு கிறிஸ்துவின் நற்செய்தி யையும், அதன் ஆற்றலையும் குறைத்து மதிக்கவும் முடியாது.

## *End Notes*

1. J.Waskom Pickett, **Christian Mass Movements in India,** p.157.
2. Rajaiah D.Paul, **Triumphs of His Grace.** pp.50 ff.
3. M.K.Kuriakose, **History of Christianity in India: Source Materials,** p.209
4. **Ibid.** pp.187-189.
5. **Ibid.** pp.189-191.
6. **Ibid.** pp.154-155.
7. F.S.Downs, **History of Christianity in India,** Vol.V, Part 5, pp.141-142.
8. A.Mathias Mundadan, **History of Christianity in India,** Vol.I. pp.393 ff.
9. C.B.Firth, **An Introduction to Indian Church History.** pp.223-224.
10. F.Hrangkhuma (ed.) **Christianity in India : Search for Liberation and Identity.** pp.89-90.

# இயல் எட்டு

## கிறிஸ்தவரும் தேசிய இயக்கமும்

நாட்டுணர்வு என்பது இந்தியரிடையே ஒரு அதிசய நிகழ்ச்சியன்று. ஐரோப்பியக் குடியேற்ற ஆதிக்கம் இந்தியாவில் கோலோச்சியக் காலத்தே நாட்டுணர்வுகளை இந்திய மக்கள் பல்வேறு வழிகளில் வெளிப்படுத்தினர். ஐரோப்பியர் இந்தியாவை ஆக்கிரமிக்கத் தொடங்கிய தொடக்கத்திலேயே அத்தகைய உணர்வுகள் வெளிப்படை யாகவே வெளிப்படுத்தப்பட்டன. எனினும் அவை ஒரு சில இடங்களில் மட்டுமே நிகழ்ந்தன. மேலும் அவற்றின் நோக்கங்களும் , இலக்குகளும் வெவ்வேறாக இருந்தன. எடுத்துக்காட்டாக:

பத்தொன்பதாம் நூற்றண்டின் தொடக்கத்தில் கேரளாவின் திருவிதாங்கூர் அரசில் திவானாக இருந்த வேலு தம்பி என்பவர் பிரித்தானியரின் ஆட்சிக்கு எதிர்ப்புத் தெரிவித்தார். ஆனால் அதில் நாட்டுப்பற்றைவிட தன்னல உள்நோக்கங்கள் அதிகம் இருந்தன. முந்தைய சென்னை மாநிலத்தின் தெற்குப் பகுதியில் குறுநில மன்னராக இருந்த வீர பாண்டிய கட்டபொம்மன் என்பவர் பிரித்தானியரை எதிர்த்தார். அவரு டைய எதிர்ப்புக்கும் நோக்கம் வேறுபட்டதாக இருந்தது. இந்தியாவின் பல்வேறு பகுதி களிலும் நடந்த இதைப்போலொத்த எதிர்ப்புகளையும் எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம்.

அதே வேளையில் ஐரோப்பியரின் வருகை, குறிப்பாகப் பிரித்தானியரின் வருகை இந்தியாவில் மறுமலர்ச்சியைக் கொணர்ந்தது. இதன் விளைவாக இந்தி யர்கள் தங்களது கலாச்சாரம், மொழி, இலக்கியம், மதம், நாடு ஆகியவைகளைக் குறித்துப் பெருமிதம் கொள்ளவும், பாராட்டவும் தலைப்பட்டனர். எனவே கலாச்சார மறுமலர்ச்சி ஒன்று ஏற்பட்டது எனலாம். இராஜா ராம் மோகன் ராய் போன்றோர்

எழும்பி, சமூக, அற, மத மறுமலர்ச்சிக்கும், சீர்திருத்தத்திற்கும் உத்வேகம் தந்தனர். அத்தகைய சீர்திருத்தவாதிகள் இந்தியர்களைக் குறிப்பாக இளைஞர்களை மறு மலர்ச்சிதரும் பணிகளில் ஈடுபடுமாறு ஊக்கப்படுத்தினர். இந்திய மக்கள் ஆட்சிப் பணியில் (ஐ.சி.எஸ்/I.C.S.) இந்தியர்களுக்கு அதிகம் வாய்ப்பளிக்க வேண்டும் என்று சீர்திருத்தவாதிகள் பிரித்தானியரைக் கேட்டுக்கொண்டனர். ஆட்சிப்பொறுப்பு மாற்றத் திற்கு முதல்படியாக அக்கோரிக்கையை நாம் காணமுடியும். என்றாலும் வெளிப் படையாக அவ்விதம் கோரப்படவில்லை. ஐ.சி.எஸ்.சில் இந்தியர்கள் என்னும் கோரிக்கை, நிர்வாகம் செய்வதில் பயிற்சி என்பது மட்டுமல்ல, பிரித்தானியர்களுக்கு இணையாக இந்தியர்கள் உள்ளனர் என்பதை நிரூபிப்பதும் எனலாம்.

கி.பி. 1857இல் நடைபெற்ற எழுச்சி, நிர்வாகத்தில் மாற்றத்தைக் கொணர்ந்தது. பிரித்தானியர்கள் பிடியிலிருந்து இந்தியர்களை விடுவிக்க வேண்டும் என்பதை அந்நிகழ்ச்சி நோக்கமாகக் கொண்டிருக்கவில்லை. எனினும் பிரித்தானியர் மேல் இந்தியச் சமுதாயத்தின் பலப் பகுதியினர் கொண்டிருந்த வெறுப்பை வெட்ட வெளிச்ச மாக்கியது. தங்கள் முயற்சியில் இணைந்துச் செயல்படுதலின் அவசியத்தையும் அந்நிகழ்ச்சி இந்தியர்களுக்குக் கற்பித்தது. இதன் விளைவாக, நாட்டுணர்வும், அரசியல் விழிப்புணர்வும் வளரத் தொடங்கின. இந்தியர்கள் குறிப்பாகக் கல்வி கற் றோர் வருங்காலத்தைப் புதிய பார்வையுடனும், புதிய நோக்கத்துடனும் கண்ணோக்கத் தொடங்கினர். கி.பி.1857 எழுச்சி, இந்திய மக்களுக்குச் சுய அடையாளத்தைத் தந்தது. எனவே இந்தியப் பண்பாட்டிலும், இந்து சமயத்திலும் மறுமலர்ச்சி ஏற்பட்டது.

## ஆலன் ஆக்டேவியன் ஹியூம்:

இத்தகையச் சூழலில் கி.பி.1885இல் இந்திய தேசிய காங்கிரஸ் நிறுவப்பட்டது. அதனை நிறுவியவர்களில் ஒருவர் ஆலன் ஆக்டேவியன் ஹீயூம். அவருடைய கருத்தாவது: இந்தியர்களுக்குக் கூடுதல் சுதந்திரம் தரப்பட வேண்டும். இந்தியர்களின் அத்தகைய ஆவல்களைப் பிரித்தானியர் புரிந்துகொள்ளவும், அவர்களுடன் இணைந்து செயல்படவும் முன்வர வேண்டும் என்பனவையாகும். பிரித்தானியர்கள் இந்திய தேசியக் காங்கிரசை (இ.தே.கா) உள்ளப்பூர்வமாக வாழ்த்துவார்களேயா னால், அது மனப்பூர்வமான, நட்புறவுடன் கூடிய தொடர்பிற்கு வழி நடத்தும்; அப்போது இ.தே.கா.சின் செயல்கள் அமைதிப்பாதையிலும், நல்லெண்ணத்துடனும் இருக்கும் என ஹீயூம் கருதினார். இ.தே.கா. அதன் தொடக்கப் பருவத்தில் இந்திய சுதந்திரத்தைக் கேட்கவில்லை. அது மூர்க்கத்தனமான அமைப்பாகவும் இல்லை, ஏனெனில் கல்வி கற்றவர்களும், மிதவாதிகளும் அதன் உறுப்பினர்களாக இருந்தனர். இந்திய மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்த்தப்படுவதற்காக சமூக, பொருளாதார சீர்திருத்தத்தை அரசாங்கத்திடம் கேட்டது. அரசு நிர்வாகத்தில் இந்தியர்களுக்கு அதிகப் பங்குதரப்பட முன் மொழிந்தது.

## இந்திய தேசிய காங்கிரசில் கிறிஸ்தவர்கள்:

" அதன் (இ.தே.கா.) ஆரம்ப ஆண்டுகளில் இந்தியக் கிறிஸ்தவர்கள் ஆர்வத்துடன் தேசிய காங்கிரசை ஆதரித்தனர்; அதன் வருடாந்திரக் கூட்டங்களில் கலந்து கொண்டனர்." என ஜி.ஏ,ஆடி குறிப்பிடுகிறார்.[1] கி.பி.1887இல் சென்னையில் நடைபெற்ற இ.தே.கா.சின் மாநாட்டில் 607 நபர்கள் கலந்து கொண்டனர். அவர்களில் 35 பேர் கிறிஸ்தவர்கள் என்று காங்கிரசின் அதிகாரப்பூர்வ அறிக்கை கூறுகிறது. அதன்படி மாநாட்டில் கலந்துக்கொண்டோரில் 2.5% கிறிஸ்தவர் என அறியலாம். இது குறிப்பிடத்தக்க எண்ணிக்கை; ஏனெனில் 1887இல் இந்திய மக்கள் தொகையில் கிறிஸ்தவரின் எண்ணிக்கை 0.79% தான். அந்த 35 பேரில் ஏழு பேர் யூரேசியர்கள் (அதாவது கலப்பினர் / ஆங்கிலோ-இந்தியர்) எனலாம், 15 பேர் இந்தியக் கிறிஸ்தவர்கள் ஆவர்.[2] கி.பி.1887 இ.தே.கா.சின் கூட்டத்தில் கலந்து கொண்ட குறிப்பிடத்தக்க இந்தியக் கிறிஸ்தவர்கள் பின்வருமாறு: சென்னையைச் சேர்ந்த ஆர்.எஸ்.என். சுப்ரமணியா; இவர் கிறிஸ்தவ வழக்குரைஞராகவும், சென்னை நகரசபை அங்கத்தினராகவும் இருந்தவர்; காளிசரன் பானர்ஜி: வங்காள கிறிஸ்தவச் சமுதாயத்தினரின் பிரசித்திபெற்ற தலைவர், சிறந்த அறிஞர், பேச்சாளர், காங்கிரஸ் வட்டாரத்தில் மிகவும் உயர்வாக மதிக்கப்பட்ட, செல்வாக்கான கிறிஸ்தவர். மதுசூதன்தாஸ்: இவர் வழக்குரைஞர் பின் நாளில் ஒரிசாவில் உதவி நடுவராகப் (Deputy Magistrate) பொறுப்பாற்றினார்.[3] தொடர்ந்து நிகழ்ந்த இ.தே.கா. மாநாடுகளிலும் கிறிஸ்தவர்களின் பங்கேற்பு குறிப்பிடத்தக்க அளவு இருந்தது. கி.பி.1888 அலகாபாத் மாநாட்டில் 1248 பங்கேற்பாளர்களில் 38 பேர் கிறிஸ்தவர்கள், கி.பி.1889 மும்பாய் மாநாட்டில் 1889 பங்கேற்பாளர்களில் 54 பேர் கிறிஸ்தவர்கள், கி.பி.1890 கல்கத்தா மாநாட்டில் 677 பங்கேற்பாளர்களில் 22 பேர் கிறிஸ்தவர்கள், கி.பி.1891 நாக்பூர் கூட்டத்தில் 812 பங்கேற்பாளர்களில் 16 பேர் கிறிஸ்தவர்கள்.[4] தொடர்ந்து நடைபெற்ற இ.தே.கா.மாநாடுகளிலும் குறிப்பிடத்தக்க முறையில் பங்கேற்ற காளிசரன் பானர்ஜி தவிர வேறு இரண்டு இந்தியக் கிறிஸ்தவர்களும் குறிப்பிடத்தக்கோர். அவர்கள் முறையே, லாகூரைச் சேர்ந்த வழக்குரைஞர் ஜி.ஜி.நாத், சென்னையைச் சேர்ந்தவரும், நில உடைமையாளரும், சி.எம்.எஸ். பள்ளியில் ஒரு ஆசிரியராகவும் பின்னாளில் வழக்குரைஞராகவும் இருந்த பீட்டர் பால் பிள்ளை.[5]

## பெண்களின் பங்கேற்பு:

இ.தே.கா. மாநாடுகளில் கிறிஸ்தவப் பெண்களும் பங்கேற்றுள்ளனர். கி.பி.1889 மும்பாய் இ.தே.கா. மாநாட்டில் 'குறைந்தது 10 பெண் பங்கேற்பாளர்கள்' இருந்ததாகவும் அவர்களுள் நன்கு அறிமுகமான சமூகச் சீர்திருத்தவாதி பண்டித இரமா பாய், குறிப்பிடத்தக்க கிறிஸ்தவ கல்வியாளர்களான திருமிகு. டிரிம்புக் ( Ms. Trimbuck ), திருமிகு. நிகாம்பே (Ms.Nikambe) ஆகிய மூவரும் குறிப்பிடத்தக்கவர்கள்.[6]

## நற்செய்திப்பணியாளர்கள்:

*கி.பி.1889*இல் **ஹார்வெஸ்ட் ஃபீல்ட்** (Harvest Field) பத்திரிக்கையில் வெளியான அறிக்கையின்படி இந்தியக் கிறிஸ்தவர்களும், பிற கிறிஸ்தவர்களும் இ.தே.கா.வுடன் தங்களை இணைத்துக்கொள்வதில் உள்ள ஞானத்தையும், பங்கேற் பின் முக்கியத்துவத்தையும் குறித்து சில கிறிஸ்தவ நற்செய்திப்பணியாளர்கள் சந்தேகம் எழுப்பியிருந்தனர்.[7] கி.பி.1890இல் டபிள்யு. ஹார்ப்பர் என்னும் நற் செய்தியாளர் இந்தியக் கிறிஸ்தவர்கள் இந்துக்களுடன் இணைந்து செயல்படுவதி லுள்ள ஆபத்தைச் சுட்டிக்காட்டி எச்சரித்தார்.[8] இ.தே.காங்கிரசைக் குறித்த எதிர்மறைக் கருத்துக்களைக் கொண்டிருந்த டபிள்யு. ஹார்ப்பர் போன்ற நற்செய்திப்பணியாளர் இருந்தபோதிலும், இந்தியக் கிறிஸ்தவர்களை இ.தே.கா.சில் இணைந்து செயல்பட உற்சாகப்படுத்தினது மட்டுமல்லாமல், தாங்களே இ.தே.கா.சின் கூட்டங்களில் கலந்து கொண்ட நற்செய்திப்பணியாளர்களும் இருந்தனர். டி.இ.ஸ்லேட்டர், சி.எஃப்.ஆண்ரூஸ், ஈ.கிரீவ்ஸ் (E.Greaves) போன்ற அருள்தொண்டர்கள் அரசியலில் இந்தியக் கிறிஸ்தவர் ஈடுபடவும், காங்கிரசில் இணையவும் வெளிப்படையாகத் தூண்டிவிட்டனர். கி.பி.1910இல் "இந்தியக் கிறிஸ்தவர் தேசிய இயக்கத்தின் முன்னணியில் இருப்பதைக் கடவுள் எவ்வளவு விரும்புவார்!" என ஈ.கிரீவ்ஸ் எழுதினார்.[9]

## கிறிஸ்தவரின் பங்கேற்பு : பின்னடைவிற்குக் காரணங்கள்:

மேற்கூறப்பட்ட மேலைநாட்டு நற்செய்திப் பணியாளர்களின் உற்சாக உரைகள் இருந்தபோதிலும், கி.பி.1892 முதற்கொண்டு இ.தே.காங்கிரசின் கூட்டங்களில் இந்தியக் கிறிஸ்தவர்களின் பங்கேற்பு குன்றத் தொடங்கியது. இதற் கானக் காரணிகள் பல. இவாஞ்சலிக்கல் சிந்தனையுடைய நற்செய்திப்பணியாளர் மறுஉலக சிந்தைக்கு அழுத்தம் தந்ததினால் கிறிஸ்தவர்கள் அரசியல் போன்ற இவ்வுலகு சார்ந்த காரியங்களிலிருந்து விலகியிருக்க ஊக்கமளிக்கப்பட்டனர். ஆனால் அது கிறிஸ்தவர்களின் பங்கேற்பு குறைவதற்குக் காரணமாக இருந் திருக்கத் தேவையில்லை, ஏனெனில் இவாஞ்சலிக்கல் சிந்தனையும், அதன் விளை வான மறுஉலகு சிந்தனையும் மேற்கத்திய நற்செய்திப்பணியாளரின் பணியின் தொடக்க காலத்திலிருந்தே இருந்த ஒன்றே. அது புதுமையானதன்று. முக்கியக் காரணங்களாக இருந்தவைகளில் ஒன்று, பெரும்பான்மையினரான இந்துக்கள் மீதிருந்த அச்சம்; மற்றொன்று அரசாங்கத்தின் நன்மதிப்பை இழக்க நேர்ந்து, அதனால் அரசாங்கத்தில் வேலை வாய்ப்பை இழக்க நேர்ந்துவிடுமோ என்ற அச்சம். இந்தியக் கிறிஸ்தவர்கள் அதிக எண்ணிக்கையில் அரசாங்கப் பணிகளைப் பெற்று வந்தனர் என்ற கருத்தும் நிலவி வந்தது.[10] " கி.பி.1900க்குள் இந்துக்களின் ஆதிக்கம் என்ற அச்ச உணர்வு கிறிஸ்தவ சமுதாயத்தினரிடையே பொதுவாக நிலவி வந்தது. கி.பி.1908இல் இந்தியக் கிறிஸ்தவர்களைக் குறித்தும், தேசிய இயக்கத்தைக் குறித்தும் எழுதுகையில் இந்தியக் கிறிஸ்தவ சமுதாயம், தேசிய இயக்கத்தில்

பங்கேற்பது அவர்களுக்குத் தீமையாக அமையும் என ஜோசப் ஜே. கோஷ் குறிப் பிட்டார்."[11] " அரசியல் போராட்டங்களில் கிறிஸ்தவரல்லாதோருடன் இணைந்து கொள்வது என்பது எந்த அளவிற்கு இந்தியக் கிறிஸ்தவர்களுக்கு நன்மை பயக்கும் என நமக்குத் தெரியவில்லை. இந்நாட்டின் மக்களுக்குக் கூடுதல் அரசியல் உரிமை களும், சிறப்புச் சலுகைகளும் வழங்கப்பட்டால், அவற்றின் மூலம் ஏழைகள் நிறைந்த, சிறுபான்மையான நமது கிறிஸ்தவச் சமுதாயம் எவ்வித நன்மைகளும் பெறும் என்பது பகற்கனவே. அதே வேளையில் மற்றொரு புறத்தில் பார்த்தால், கிறிஸ்தவரல்லாதோர் கைகளில் அதிக அதிகாரம் வழங்கப்பட்டால் நமது சமுதாயத் தினரின் வாழ்வுக்குக் கெடுதி உண்டாக்கக்கூடியதாக அமையலாம். எங்கெல்லாம் கிறிஸ்தவரல்லாதோர் அதிகாரத்தில் உள்ளனரோ அங்கெல்லாம் இந்தியக் கிறிஸ்தவர் அதிக இழப்புகளிடையே பணியாற்றுகின்றனர். அத்துடன் இழிவையும், அவமானத்தையும், துன்புறுத்தலையும் கூட சந்திக்கின்றனர் என்பதை அனுபவத் தின் வாயிலாக நாம் அறிந்திருக்கிறோம்" என ஜே. ஜே. கோஷ் எழுதினார்.[12]

முன்னர் குறிப்பிட்டதைப் போன்று, இ.தே.கா. அதன் தொடக்கப் பத்தாண்டு களில் மிதமானதாக இருந்தது. அதனால் பிரித்தானியர் அதனைத் தங்கள் நிர்வாகத்திற்கு அச்சுறுத்தலாகக் கருதவில்லை. ஆனால் பாலகங்காதர திலக், அரபிந்தோகோஷ் போன்றோர் இ.தே.காங்கிரசின் செயல்பாடுகளில் இறங்கியபின் அது புரட்சிகரப் பண்பைப் பெற்றது. அத்துடன் கி.பி.1905இல் வங்காளம் இரண் டாகப் பிரிக்கப்பட்டதும் சூழலைப் பாதித்தது. அதனால் இ.தே.கா. பகைமை உணர் வுடன் பிரித்தானிய அரசைப் பார்த்தது. மேலும் பிரித்தானிய அதிகாரிகளும், அலு வலகங்களும், அமைப்புகளும் காங்கிரசாரால் தாக்கப்பட்டன. ஒரு சில அரசாங்க அதிகாரிகள் கொலையும் செய்யப்பட்டனர். இதனால் பிரித்தானியர் இ.தே.காங்கிரசை இந்தியாவிலும், பிரிட்டனிலும் மிகவும் வன்மையாகத் தாக்கத்தொடங்கினர். எனவே இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து இந்தியக் கிறிஸ்தவர் மனதிலும், ஐரோப்பிய நற்செய்திப்பணியாளர் மனதிலும் பயம் கலந்த கவலையும், அச்சமும் ஏற்படத்தொடங்கின. இவற்றின் விளைவாக இந்தியக் கிறிஸ்தவர்கள் இ.தே. காங்கிரசிலிருந்து விலகத் தொடங்கினர்; அத்துடன் அதன் மாநாடுகளில் பங்கேற் பதிலும் பின்னடைவு ஏற்பட்டது.

## கே.டி. பால்:

பயம் கலந்த கவலை கொண்டிருந்த இந்தியக் கிறிஸ்தவரிடையே, தேசிய இயக்கத்தைக் குறித்த மாறுபட்ட, உடன்பாடான கருத்துக்களைக் கொண்ட கே.டி.பால் போன்ற இந்தியக் கிறிஸ்தவர்களும் இருந்தனர். " விலகி இருக்கும் கொள்கையில் நாம் பிடிவாதமாக இருந்தால் அது நமக்குக் கொடிய ஆபத்தை விளைவிக்கும் என்பதை உணர்வது நல்லது. உலகப் பொருள் சார்ந்தோ, சமூகம் சார்ந்தோ, அறம் சார்ந்தோ, அரசியல் சார்ந்தோ எவ்வகை நிலையில் நின்று பார்த்தாலும் நமது

உரிமைகள் மற்ற இந்திய சமுதாயத்தினரின் உரிமைகளோடும் பின்னிப்பிணைந் துள்ளன. அது வேறு வகையில் அமையத்தான் முடியுமா? இந்தியாவில் பிரித்தானி யரின் ஆட்சி முடிவிற்கு வந்த நீண்ட நாட்களுக்குப் பின் கூட, ஐந்து நூற்றாண்டு களுக்குப் பின் என வைத்துக்கொள்வோமே, ஏனெனில் இவ்வுலகு சார்ந்த அனைத் தும் ஒரு முடிவிற்கு வர வேண்டும் அல்லது மாற்றம் பெற வேண்டும்– நாம் தொடர்ந்து இந்தியர்களாவே இருப்போம்," [13] என கே.டி.பால் எழுதினார். கே.டி.பாலின் நோக்கின்படி அவருடைய சமுதாயத்தினரின் சிக்கலுக்கான தீர்வு, விலகியிருப்பதிலோ, தள்ளி நிற்பதிலோ இல்லை; மாறாக, இ.தே.காங்கிரசிலும், தேசிய போராட்டத்திலும் தீவிரமாகப் பங்கேற்பதிலுமே உள்ளது. ஆனால் அவருடைய குரலோ வனாந்திரத்தில் கூறப்பட்ட குரல் போன்று இருந்தது. இந்தியக் கிறிஸ்தவர் இன்னும் அதிகமாகத் தனித்துள்ள நிலைக்குள் பின்வாங்கினர்.

## என்.சி.சி.ஐ. :

இந்திய தேசிய மிஷனெரி மன்றம்[14] கி.பி.1914இல் உருவாக்கப்பட்டது. அது கி.பி.1923இல் தன் பெயரை இந்திய தேசிய கிறிஸ்தவ மன்றம்[15] ( NCCI ) என்று மாற்றிக்கொண்டது. இந்தியக் கிறிஸ்தவர் தேசிய இயக்கத்தில் ஈடுபடுவது குறித்து அவர்களுக்கு என்.சி.சி.ஐ. உதவியாக இல்லை. இதில் ஒரு திட்டவட்டமான முடிவை எடுக்க இயலாமல் அது தடுமாறியது. இந்திய தேசிய கிறிஸ்தவ மன்றத்தில் வெளி நாட்டு நற்செய்திப்பணியாளரின் ஆதிக்கமும் செல்வாக்கும் இருந்ததே அதற்குக் காரணம் என காய் பாகோ கருதுகின்றார். மேலும் அவர் "அமுத்தும் அரசியல் சிக்கலுக்கு 'அமைதியைக் காக்க இறைமன்றாட்டு' என்பதே அதன் இதழில் வெளியான மறுமொழியாக இருந்தது. பல ஆண்டுகளாக என்.சி.சி.ஐ. வெளியிட்ட இறைமன்றாட்டுக்கான அழைப்புகளே இந்திய தேசிய சுதந்திரப் போராட்டதிற்கு அதன் ஒரே பங்களிப்பு எனக் கூறுவதைத் தவிர்க்க இயலாது" எனக் கூறுகிறார்.[16]

## பிரித்தானிய அரசின் கொள்கை மாற்றம்:

என்.சி.சி.ஐ.யின் மேற்கூறிய மனநிலைக்கு பிரித்தானிய அரசின் புதிய கொள்கை காரணமாக இருந்திருக்கக்கூடும். முதல் உலகப் போரின் விளைவாக (1914– 1918) நற்செய்திப்பணியாளர் உட்பட்ட பிரித்தானியரல்லாத வெளிநாட்டினரை, இந்தியா போன்ற அதன் குடியேற்றங்களில் வரவிடுவதற்கான திட்டத்தை மறு பார்வை செய்ய பிரித்தானிய அரசு எண்ணியது. அதன் விளைவாக கி.பி.1919இல் மூன்று பிரிவுகளைக்கொண்ட ஆணையை வெளியிட்டது. ஆணை 'அ' பிரிவு பிரித்தானிய அருள்பணியருக்கும், வட அமெரிக்காவிலிருந்து அயல் நாட்டு அருள் பணிக் குழுமம் மூலம் வரும் / வந்த அருள்பணியருக்கும் உரியது; ஆணை 'ஆ'பிரிவு உரோமன் கத்தோலிக்கச் சங்கங்களுக்கான ஒன்று; ஆணை 'இ' பிரிவு பிரித்தானியாவுடன் நட்புறவு கொள்ளாத, விரோதி நாடுகளிலிருந்து வரும் அருள் பணியருக்கானது. 'அ' பிரிவின் கீழ் வந்த நற்செய்திப் பணியாளர்களுக்கு

என்.சி.சி.ஐ. உத்திரவாதம் கொடுக்க வேண்டியிருந்தது. அதன்படி, நற்செய்திப் பணியாற்ற வருவோர் அரசுக்குக் கீழ்படிந்து நடப்பர் எனவும், உரிய மதிப்பளிப்பர் எனவும், அரசியல் காரியங்களிலிருந்து விலகி இருப்பதில் மிகுந்த கருத்துடன், கவனத்துடன் இருப்பர் எனவும் உத்திரவாதம் தந்து பரிந்துரைக்க வேண்டும். 'ஆ' பிரிவின் கீழ் வருவோருக்கு வெஸ்ட்மின்ஸ்டரின் தலைமைப் பேராயரும், குறிப்பிட்ட சங்கத்தின் அல்லது அமைப்பின் தலைமை அதிகாரியும் அத்தகையப் பரிந்துரை யையும், உத்திரவாதத்தையும் தரவேண்டும். 'இ' பிரிவின் கீழ் வருவோர் அனைவரும் இந்தியாவில் பணியாற்ற உரிமம் பெற வேண்டியதுடன், தனிப்பட்ட முறையில் வாக்குறுதி ஒப்பந்தமொன்றில் கையொப்பமிடவும் வேண்டும்.[17] மேற்கூறப்பட்ட பிரித்தானிய அரசின் புதிய கொள்கையே இந்திய தேசிய கிறிஸ்தவ மன்றம் நடுநிலை காத்ததற்கான காரணம் என யூகிக்கலாம்.

## எம்.கே.காந்தி

கி.பி.1919 இல் மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி இ.தே.காங்கிரசின் வாழ்க்கையில் நுழைந்தார். விரைவில் தேசிய இயக்கத்தின் அங்கீகரிக்கப்பட்ட தலைவரானார். அது முதற்கொண்டு இ.தே.கா. மக்கள் இயக்கமாக மாறியது. கி.பி.1920இல் எம்.கே. காந்தி ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பித்தார். இதன் பின் இராட்டை அல்லது சர்கா, இந்திய தேசிய இயக்கத்தின் இலச்சினை ( Symbol ) ஆனது. காதி / கதர் ஆடை தேசிய இயக்கத்துடன் இரண்டறக் கலந்தது. கி.பி.1920 முதல் தேசிய இயக்கம் தீவிரமடைந்தது. தேசிய இயக்கத்தை முன்னின்று நடத்திய இ.தே. காங்கிரசை பிரித்தானிய அரசு தன் எதிரியாகக் கருதத்தொடங்கியது; ஏனெனில் அதன் சிந்தாந் தமும், அதன் செயல் திட்டங்களும் 'பொது பாதுகாப்பு'க்கு ஊறு விளைவிக்கக் கூடியவை என அரசாங்கம் கருதியது. தேசிய இயக்கம் பிரித்தானிய அரசுக்கு ஒரு தொல்லையாகத் தென்பட்டது.[18]

## ஆதரவு நல்கிய கிறிஸ்தவரும், அரசாங்கத்தின் கட்டுப்பாடுகளும்

இக்காலக்கட்டத்தில் இந்தியாவில் இருந்த சில அருள்பணியாளர்கள், இங்குமங்குமாக இந்திய தேசிய இயக்கத்திற்கு ஆதரவு நல்கினர். அவர்களில் சி.ஃப். ஆண்ரூஸ், ஜாக்.சி.வின்ஸ்லோ குறிப்பிடத்தக்கவர்கள். கி.பி.1920களில் தொடங்கப் பெற்ற கிறிஸ்தவ ஆசிரமங்கள் தேசிய உணர்வோட்டத்தோடு தங்களை அடையாளப் படுத்திக்கொண்டன. அங்கு வாழ்ந்தோர் கைத்தறி / கதர் ஆடை அணிந்தனர். வாழ் வின் எல்லா நிலையிலும் எளிமையைக் கடைபிடித்தனர். மது விலக்கை ஆதரித் தனர். கி.பி.1920இல் இருபத்தைந்து பிரித்தானிய அருள்பணியர் இணைந்து, கி.பி.1919இல் நடந்த ஜாலியன் வாலா பாஹ் படுகொலையைக் கண்டித்தும், அதைக் குறித்து பிரித்தானிய அரசு கொண்டிருந்த கருத்தைக் கண்டித்தும் கையொப்பமிட்ட அறிக்கை ஒன்றை வெளியிட்டனர்.[19] இத்தகைய ஆதரவுகள் பிரித்தானிய அரசுக்குச் சிக்கலாக மாறின. எனவே அருள்பணியர் தேசிய இயக்கத்திற்கு நல்கிய ஆதரவைக்

கட்டுப்படுத்த, முன்பு பிறப்பித்த அரசு ஆணையில் (Memoranda) இருந்த தடுப்பு விதிகளை அரசு பயன்படுத்தத் தொடங்கியது. கி.பி.1922ஆம் ஆண்டில் திருத்தப்பட்ட உறுதிமொழி (Undertaking) பின்வருமாறு இருந்தது: " சட்டப்படி அமைக்கப்பட்ட அரசுக்குக் கொடுக்கப்படவேண்டிய அனைத்து மரியாதையையும், கீழ்படிதலையும் தர நான் உறுதியளிக்கிறேன். அரசியல் காரியங்களிலிருந்து விலகியிருக்கக் கரு துடன் இருக்கும் அதே வேளையில் என்னுடைய பாதிப்பு இருக்கக்கூடிய காரியங் களில் அரசாங்கத்துடன் இணைந்து செயல்படும் வகையில் அதனைப் பயன்படுத்து வேன் என உறுதி கூறுகிறேன். குறிப்பாக, கல்விப்பணியில் ஈடுபட்டிருந்தால் மக்களுக்கும், நாட்டின் அரசுக்கும் இடையே நல்லுறவையும், புரிந்துகொள்ளு தலையும் என் கீழ் உள்ள அனைவரிடையேயும் மேம்படுத்தச் செயல்படுவேன் என்று உறுதியளிக்கிறேன். என் பேணுதலின் கீழ் இருப்போர் அனைவரும் சட்டங்களை மதித்து நடப்பவராகவும், நல்ல குடிமக்களாகவும் இருக்குமாறு பார்த்துக்கொள்வேன் என்றும் உறுதிமொழி தருகிறேன்."[20] அரசு, குறிப்பாக பிரித்தானியர் அல்லாத நற்செய்திப்பணியாளர் மீது மிகவும் கண்டிப்பாக இருக்கத் தொடங்கியபோது, அருள்பணி நிறுவனங்களில் ஆசிரியராகவோ, திருச்சபைப் பணியாளர்களாகவோ, ஆயர்களாகவோ பணியாற்றிய இந்தியக் கிறிஸ்தவர்களிடத்திலிருந்தும் அதே விதமான கீழ்படிதலையும், விசுவாசத்துடன் கூடிய நம்பகத்தன்மையையும் அரசாங்கம் வலியுறுத்தியது.

தங்களிடம் பணியாற்றிய இந்தியக் கிறிஸ்வர்களை கட்டுக்குள் வைத்திருக்க திருப் பணியாளர்களை அரசு எவ்விதம் கட்டாயப்படுத்தியது என்பதற்குப் பின்வரும் நிகழ்ச்சி சிறந்த எடுத்துக்காட்டாகும். கார்ல் பின்ஸ்லேவ் (Carl Bindslev) என்னும் பெயருடைய அருள்பணியர் டேனிஷ் லுத்தரன் அருள்பணிக் குழுவின் ஊழியராக தென்னாற்காடு மாவட்டத்திலுள்ள திருக்கோவிலூரை மையமாகக் கொண்டு பணியாற்றி வந்தார். கிறிஸ்தவத்தைத் தழுவிய சுவாமிநாதன் என்பவர் திருக்கோவி லூரிலிருந்த டேனிஷ் மிஷன் பள்ளிக்கூடத்தில் ஆசிரியராகவும், திருச்சபைப் பணியாளராகவும் பணியாற்றி வந்தார். கி.பி.1921 ஜூலை 20இல் தென்னாற்காடு மாவட்ட ஆட்சியர் ஆர்.எஃப்.பி.எல்.கப்பி (R.F.B.L.Guppy) அருள்பணியர் கார்ல் பின்ட்ஸ்லேவ்விற்கு கடிதம் ஒன்று எழுதினார். அதில் சாமிநாதன் மிஷன் பள்ளிக்கூட வளாகத்தைக் காந்தியின் போதனைகளைப் பரப்புதல் போன்ற தேசிய செயல்பாடு களில் ஈடுபடுத்துகின்ற காரணத்தினால் அவர் மேல் நடவடிக்கை எடுக்கக் கோரி யிருந்தார். ஆட்சியர் கப்பியின் பார்வையில் சுவாமிநாதனின் செயல் பிரித்தானிய அரசுக்கு எதிரான ஒன்றாகும். மேற்கூறப்பட்டக் கடிதத்தில் ஆட்சியர் கப்பி எழுதி யிருந்ததாவது: " திருக்கோவிலூரில் இருக்கும் உங்கள் மிஷன் வளாகம், கடந்த ஓராண்டு காலமாக இந்த மாவட்டத்தில் பிரிவினைவாதத்தைம், பிரித்தானிய அரசுக் கெதிரான செய்திகளையும் பரப்பும் முக்கியமான மையமாகவும் இருந்து வருகிறது என்கின்ற பிரபலமான உண்மையை, நீண்ட ஆலோசனைக்குப் பின் உங்கள்

கவனத்திற்குக் கொண்டுவருவது கட்டாயமென்று உணர்ந்தேன். இத்தகைய நிகழ்வுகளுக்கு நீங்கள் முற்றுப்புள்ளி வைக்காதது பிரித்தானியரல்லாதோர் பிரித்தானிய இந்தியாவிற்குள் நற்செய்திப்பணியாளர்களாகப் பணியாற்ற அனுமதிக்கப்பெற்ற விதிமுறைகளுக்குப் போதுமான அளவு கவனம் தரவில்லை என்றோ, அச் செயல்களைக் கண்டும் காணாமல் இருக்கிறீர்கள் என்றோ கருதத் தோன்றுகிறது... "[21] அரசுக்குத் தந்த உறுதிமொழியின் அடிப்படையில், கார்ல் பின்ட்ஸ்லேவ் தன் மிஷன் பணியாளர் சுவாமிநாதனின் செயல்களைக் கட்டுக்குள் வைத்திருக்குமாறு அறிவுறுத்தப்பட்டார் என்பதை விட ஆணையிடப்பட்டார் எனலாம். இது தொடர்பாக அவர்களிடையே கடிதங்கள் பரிமாறிக்கொள்ளப்பட்டன. அரசின் அச்சுறுத்தல்களைத் தாங்க இயலாமல், முடிவில் டேனிஷ் மிஷன் சுவாமிநாதனின் மேல் கி.பி.1921 நவம்பரில் நடவடிக்கை எடுத்தது.[22] சுவாமிநாதன் நிகழ்வு மிஷன் நிறுவனங்களில் பணியாற்றிய இந்தியக் கிறிஸ்தவர்களின் அரசியல் உணர்வை வெளிப்படுத்தும் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்த பிரித்தானிய அரசின் ஆணை ( Memoranda ) பயன்படுத்தப்பட்டதை எடுத்துக்காட்டுறது.

மற்றொரு புறத்தில், கி.பி.1920இல் தொடங்கிய ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கேற்ற இந்தியக் கிறிஸ்தவர்களும் இருந்தனர். அத்தகையோரின் பங்கேற்பைக் குறித்தத் தெளிவான புள்ளிவிவரங்கள் நம்மிடையே இல்லையென்றாலும், தேசிய இயக்கத்தின் மேல் தங்கள் அனுதாபத்தை வெளிப்படுத்திய இந்தியக் கிறிஸ்தவர் களும் பலர் இருந்தனர். இராஜ்குமாரி அம்ரித் கௌர், எஸ்.எம்.ஜார்ஜ், ஜார்ஜ் ஜோசப், ஜே.சி. குமரப்பா, ஹெய்.சி.முகர்ஜி போன்ற இந்தியக் கிறிஸ்தவர்கள் இ.தே.காங்கிரசின் உறுப்பினர்களாகவும், தேசிய இயக்கத்தில் உற்சாகத்துடன் ஈடுபட்டவர்களாகவும் இருந்தனர். அதே வேளையில், இ.தே.காங்கிரசின் அங்கத்தினராகாமல், தேசிய வாதிகளக இருந்த இந்தியக் கிறிஸ்தவர்களும் இருந்தனர். எஸ். கே. தத்தா, வி.எஸ்.அசரியா, சுசில்.கே.ருத்ரா, கே.டி.பால், பி.இரல்லியாராம், அகஸ்தின் இரல்லாராம், வி.சக்கரை போன்றோர் அத்தகையோரில் சிலராவர்.[23]

தேசிய இயக்கத்திற்கு அதிக பங்களிப்பையளித்த நற்செய்திப்பணியாளருள் தலைசிறந்தவர் சி.எஃப்.ஆண்ரூஸ் ஆவார். அவர் இந்திய தேசியக் காங்கிரசின் தலைவர்களுடனும், குறிப்பாக எம்.கே. காந்தியுடனும் நெருங்கியத் தொடர்பு கொண்டிருந்தார். இந்திய தேசிய விழிப்புணர்வில் கடவுளின் திட்டத்தையும், வழி நடத்துதலையும் கண்ட அவர், தேசிய விடுதலைப் போராட்டத்திற்குத் தன் முழு ஆதரவையும் தந்தார். அதிகச் செயல்பாட்டுடன் ஈடுபட்டார். தன்னுடைய எழுத்துக்கள் மூலமும், தான் ஆற்றிய உரைகள் மூலமும் இந்தியக் கிறிஸ்தவர்கள் தேசிய இயக் கத்திலே தம்மை ஈடுபடுத்திக்கொள்ள வேண்டியதின் பொறுப்பை வலியுறுத்தினார். "தேசிய இயக்கத்திற்கு இந்தியக் கிறிஸ்தவர்கள் முற்றிலும் எதிரானவர்கள், அவர்கள் தங்கள் கிறிஸ்தவச் சமுதாயத்தின் நலன்களில் மட்டுமே அக்கறையுடையவர்களாக உள்ளனர் என்ற கருத்து வலுபெறுமானால் அது அவர்களுக்குப் பெருத்த இழப்பை

ஏற்படுத்தும் என்றே என்னால் கருதத் தோன்றுகின்றது " என கி.பி.1908இல் அவர் எழுதினார்.[24] " கிறிஸ்துவின் அன்பினால் உங்கள் தேசத்தை நேசியுங்கள் " என்று கூறி, நாட்டு நலனுக்காகச் செயல்பட கிறிஸ்தவ வாலிபரைத் தூண்டிவிட்டார்.[25]

தன் அரசியல் பங்கேற்பிற்காகப் பெரிதும் பேசப்பெறுபவர் கே.டி.பால் ஆவார். கி.பி.1905இல் அவர் வேறு சிலருடன் சேர்ந்து தேசிய அருள்பணிச் சங்கத்தைத் தோற்றுவித்து, அதன் செயலராகவும் பொறுப்பாற்றினார். அதே ஆண்டில் அவர் ஒய்.எம்.சி.ஏ.வின் தேசிய செயலருள் ஒருவரானார். பின்பு கி.பி.1916இல் அதன் பொது செயலரானார். தேசிய இயக்கத்திலிருந்து விலகியிருக்கும் சிந்தையைக் கொண்டிருந்த கிறிஸ்தவர்களைக் கடிந்துக்கொண்டார். இனவாரி பிரதிநிதித்துவ முறையை (Communal Representation) எதிர்த்தார்; அது இந்த நாட்டின் சிறந்த நன்மைகளுக்கு ஊறு விளைவிக்கும் என்றார். கிறிஸ்தவ சமுதாயம் ஒரு இனவாரி சமுதாயமாக ஆவதிலிருந்து தடுத்து நிறுத்த முற்பட்டவர் அவரே. இந்தியாவின் வைஸ்ராயாக இருந்த இர்வின், கே.டி.பாலை பிராட்டஸ்டென்ட் இந்தியக் கிறிஸ்த வர்களின் ஒரே பிரதிநிதியாக இலண்டனில் நடைபெற்ற முதல் வட்ட மேசை மாநாட் டிற்குத் தெரிவு செய்தார்.[26] இம்மாநாடு கி.பி.1930 நவம்பர் 12 முதல் 1931 ஜனவரி 19 வரை இலண்டனில் நடைபெற்றது. கே.டி.பால் கி.பி.1931 ஏப்ரல் 11இல் மரித்துப் போனார். இரண்டாவது வட்ட மேசை மாநாடு கி.பி.1931 செப்டெம்பர் 7 முதல் டிசம்பர் 11 வரை நடைபெற்றது. அதில் கலந்து கொண்ட எம்.கே. காந்தி "நம்மிடையே திருமிகு.கே.டி.பால் இல்லாமையை நான் உணர்கிறேன். நீங்கள் எல்லோரும் அவ்வண்ணமே உணர்வீர்கள் என்பதில் ஐயமில்லை. எனக்குத் தெரியவில்லை என்றாலும், நான் அறிந்த வரையில், அதிகாரப்பூர்வமாக அவர் காங்கிரசின் உறுப்பி னராக இருந்ததில்லை என்றாலும், அவர் முற்றிலுமாக ஒரு தேசியவாதி " எனத் தன் உரையில் குறிப்பிட்டார்.[27] தம் குறுகிய கிறிஸ்தவ இனவாத சிந்தைகளிலிருந்து விடுபடுவதற்கு இந்தியக் கிறிஸ்தவர்களுக்கு நெடுங்காலமானது.

இக்கட்டத்தில் அனைத்திந்திய இந்தியக் கிறிஸ்தவர்களின் அமைப்பு[28] (ஏ.ஐ.சி.ஐ.சி. / A.I.C.I.C. ) என்பதைப் பற்றிச் சொல்லியாக வேண்டும். அதன் முதல் மாநாடு கி.பி.1914இல் நடைபெற்றது. இந்தியா சுதந்திரம் அடைந்த காலத்திற்கு முந்தைய காலத்தைச் சேர்ந்த பெரும்பான்மையான அதன் தலைவர்கள் தேசியவாதிகளாவும், உயர் கல்வி பெற்றோராகவும், செல்வாக்கு மிகுந்த இந்திய பிராட்டஸ்டெண்ட் கிறிஸ்தவத் தலைவர்களாகவும் இருந்தனர். எனினும் ஏ.ஐ.சி.ஐ.சி.யின் தீர்மானங் கள் பல வேளைகளில் எச்சரிக்கையுடையவையாக இருந்தன. கி.பி.1920இல் நடைபெற்ற அதன் கூட்டம் இந்தியக் கிறிஸ்தவர் இ.தே. காங்கிரசில் சேருவதா, வேண்டாமா என்று அவரவரே முடிவெடுக்க விட்டுவிட்டது.[29] தன்னுடைய கி.பி.1921இல் ஆண்டு கூட்டத்தில் ஒத்துழையாமை இயக்கத்திற்குத் தன்னுடைய எதிர்ப்பைத் தெரிவித்தது. மேலும் இந்தியக் கிறிஸ்தவர்களுக்கு தேசிய இயக்கம் என்பது அரசியல் சார்ந்ததாக மட்டுமின்றி, திருச்சபையையும் சார்ந்தது எனத்

தெரிவித்து, இந்தியத் திருச்சபையும், இந்திய நாட்டைப் போன்று அந்நியரின் ஆட்சியிலிருந்து விடுபடவேண்டும் என்றது.[30] கி.பி.1920களில் ஏ.ஐ.சி.ஐ.சி.யின் தொனியில் மாற்றத்தைக் காணமுடிகிறது. கி.பி.1930களில் திட்டவட்டமாக அது தேசிய இயக்கத்தை ஆதரித்தது எனலாம்.

கி.பி.1930களிலும், 1940களிலும் கிறிஸ்தவர்கள் தேசிய இயக்கத்தை ஆதரிப் பவர்களாகவே பொதுவாக இருந்துள்ளனர். தேசிய இயக்கத்தின் கண்ணோட்டத்தில் கி.பி.1930, அரசியல் செயல்பாடுகள் நிறைந்த ஆண்டாகும். கி.பி.1930 மார்ச் மாதத்தில் உப்பு சத்யாகிரகம் தொடங்கியது. கி.பி.1930 மே மாதத்தில் எம்.கே.காந்தி கைது செய்யப்பட்டாலும், தடையின்றி அது தொடர்ந்தது. இ.தே.காங்கிரஸ் தனது புறக்கணிப்பு செயல்பாடுகளைத் தீவிரப்படுத்தத் தொடங்கியது. அதன் விளைவாக ஒத்துழையாமை இயக்கத்தின் தாக்கத்தை அரசு உணரத் தொடங்கியது. கி.பி.1930திலும் 1932டிலும் நடைபெற்றப் புறக்கணிப்புச் செயல்பாடுகளில் கிராமப் பகுதிகளையும், சிற்றூர்களையும் சேர்ந்த சாதாரண மக்கள் அதிக அளவில் பங்கேற்று, சிறை சென்றனர். இந்தியக் கிறிஸ்தவர்களும் அவைகளில் பங்கேற்று அதன் விளைவாகச் சிறை சென்றனர்.[31] கீழ்படியாமை இயக்கத்தினால் அரசியலில் ஏற்பட்ட சிக்கலான சூழலைக் கருத்தில் கொண்ட பிரித்தானிய நற்செய்திப்பணியாளர் கள் செயல்பட முடிவெடுத்தனர். அதன் விளைவாக அவ்வப்பொழுது அறிக்கை களையும், தீர்மானக்கூற்றுகளையும் வெளியிட்டனர். எனினும் அவர்கள் முழுமை யாக தேசிய இயக்கத்தை ஆதரித்தனர் எனக் கூறமுடியாது.[32] அமெரிக்க ஐக்கிய நாடுகளிலிருந்து (யு.எஸ்.ஏ.) வந்து நற்செய்திப் பணியாளர்களாகத் தமிழ்நாட்டில் பணியாற்றிக் கொண்டிருந்தவர்களில் சிலர் ஏதாவதொரு வகையில் தேசிய இயக் கத்திற்கு ஆதரவளித்தனர். அத்தகையோர் பிரித்தானிய அரசினால் கட்டுப்படுத்தப் பட்டனர். ரால்ப் ரிச்சர்ட்டு கைத்தான் ( Ralph Richard Keithahn ) என்பவர் அவர்களில் ஒருவர். அவர் அமெரிக்கன் மதுரை அருள்பணியர் பணித்தளத்தில் பணியாற்றிக் கொண்டிருந்தவர். அவ்வமைப்பு அவரைக் கைவிட வேண்டும் என அரசு ஆணை யிட்டு, பின்பு அவரை நாட்டை விட்டு வெளியேற்றியது.[33] திருப்பத்தூரில் கிறிஸ்து குல ஆசிரமத்தைத் தோற்றுவித்தவர்களில் ஒருவரான மருத்துவர் எர்னஸ்ட் ஃபாரஸ்டர் பேட்டன் (Dr.Ernest Forrester-Paton ) ஸ்காட்லாந்தைச் சேர்ந்தவர். இவர் இந்திய தேசிய இயக்கத்தை ஆதரித்தவர். அவர் ஒருமுறை, சென்னையில் காவல ரால் கொடுமையாக தடியடிக்குட்படுத்தப்பட்டார். அவர் ஸ்காட்லாந்தினராயினும் அவருக்கு இந்நிலை ஏற்பட்டது. பின்பு அவருக்கெதிராக வழக்கும் தொடரப்பட்டது. மருத்துவர் ஃபாரஸ்டர் பேட்டன் போலீசாரால் அடிக்கப்பட்டதும், பின்பு கைது செய்யப்பட்டு, வழக்குத் தொடரப்பட்டதும் குறித்து பிரித்தானிய நாடாளுமன்றத்தில் கேள்வி எழுப்பப்பட்டது. அரசியல் தலையீட்டாலும். ஆதரவினாலும் அவர் மீது தொடுக்கப்பட்ட வழக்குத் திரும்பப் பெறப்பட்டது. அதிகாரிகளினால் எச்சரிக்கப்பட்ட பின், அவர் திருப்பத்தூர் கிறிஸ்து குல ஆசிரமத்திற்குத் திரும்பிச் செல்ல

அனுமதிக்கப்பட்டார்.[34] ஜி.பி. ஹால்ஸ்டட் (G.B.Halstead), மாரிஸ் பல்லங்கர் (Maurice Ballanger ) என்பவர்கள் அமெரிக்க மெத்தோடிஸ்ட் நற்செய்தியாளர்களாகப் பணியாற்றியவர்கள். தேசிய இயக்கத்தை அவர்கள் ஆதரித்தக் காரணத்தினால், அவர்களிருவரையும் கி.பி.1930 களில் அரசு வெளியேற்றியது.[35]

வெள்ளையனே வெளியேறு இயக்க நாட்களில் அதின் செயல்பாடுகளில் மாணவர்களின் பங்கேற்பு பெரிய அளவில் இருந்தது. கிறிஸ்தவ மாணவர் பலர் சிறைப்படுத்தப்பட்டனர் அல்லது கெடுபிடிகளுக்கு ஆளாயினர். அவர்களுள் ஒருவர் பால் இராமசாமி என்பவர். அவர் ஆறு மாதங்கள் சிறையிலிருந்தார். அதன்பின் அவர் பள்ளிக்கூட ஆசிரியராகவும், திருச்சபை ஊழியராகவும் பணியாற்றினார். இந்தியா சுதந்திரம் பெற்றபின் திருச்சபை ஆயராக அருட்பொழிவு பெற்றார்.[36] அமெரிக்க மதுரை மிஷனில் பணியாற்றிக்கொண்டிருந்த சில இந்திய ஆயர்கள் தேசிய இயக்கத்திற்கு ஆதரவாளர்களாக இருந்த காரணத்தினால் அவர்கள்மீது நடவடிக்கை எடுக்க மதுரை மாவட்ட கலெக்டர் அத்திருப்பணிச் சங்கத்தைக் கேட்டுக்கொண்டார். குறிப்பிடப்பட்ட ஆயர்களின் பெயர்களை நம்மால் அறிய இயல வில்லை. அதேபோல் அரசு வேண்டுகோளுக்கு அமெரிக்க மதுரை அருள்பணிச் சங்கம் இணங்கியதா, இல்லையா எனவும் நமக்குத் தெரியவில்லை. அருட்பொழிவு பெற்ற இந்தியக் கிறிஸ்தவர்களும் கூட தேசிய இயக்கத்தை ஆதரித்துள்ளனர் என்பது பொதுவாக இந்தியக் கிறிஸ்தவரிடையே தென்பட்ட மனமாற்றத்திற்கு ஒரு முன் மாதிரியாக உள்ளது.

இந்துக்களுக்கும், இசுலாமியருக்கும் இடையே இனமோதல்கள் ஏற்பட்டபோது இந்தியக் கிறிஸ்தவர் ஒப்புரவாக்கும் பணியில் ஈடுபட்டனர். இதனால் இந்தியக் கிறிஸ்தவர்கள் இந்திய நாட்டின் நல் வாழ்வின் மேலும், சமூக நல்லிணக்கம் குறித்தும் அக்கறையுடையவர்களாக இருந்தனர் என அறியலாம். கி.பி.1945இல் சிறுபான்மையினரின் அரசியல் உரிமைகளைப் பாதுகாக்கும் நோக்குடன், 'சிறுபான்மையினர் கூட்டமைப்பு' ( League of Minorities) அமைக்கப்பட ஆலோசனை தெரிவிக்கப்பட்டபோது, இந்தியக் கிறிஸ்தவத் தலைவர்கள் அதனை நிராகரித்தனர். அதேபோன்று இந்தியக் கிறிஸ்தவர்களுக்குத் தனித்தொகுதிகள் என்ற ஆலோசனை யையும் ஏற்கவில்லை. இதன் பொதுநோக்கு என்னவெனில், தங்களின் நலனுக்காக அல்ல, பொது நலனுக்காகத் தம்மையே ஒப்படைப்பது என்பதாகும்.[37]

சுதந்திர இந்தியாவில் இந்தியக் கிறிஸ்தவரின் அரசியல் ஈடுபாடு குறித்து எழுதுவது தெரிவுசெய்யப்பட்ட தலைப்பிற்கு அப்பாற்பட்டது என்கின்ற காரணத்தால் இக்கட்டுரை கி.பி.1947 உடன் நிறுத்தப்படுகின்றது.

**முடிவுரை:**

இ.தே.காங்கிரசின் தொடக்க ஆண்டுகளில் இந்தியாவில் இருந்த கிறிஸ்த வர்கள் அதன் கூட்டங்களில் பங்கேற்றனர். ஆனால் இந்துக்கள்மீது கொண்டிருந்த அச்சத்தாலும், பிரித்தானிய அரசிடமிருந்து கிடைத்து வந்த சலுகைகளை இழந்து விடுவோமோ என்கின்ற அச்சத்தாலும் பின்னாளில் இ.தே.காங்கிரசுக்கான ஆதரவு குறைய ஆரம்பித்தது. இத்தகைய இடைவெளி கி.பி.1919இல் பிரித்தானிய அரசு பிறப்பித்த ஆணை (Memoranda) மூலம் அரசு விதித்தக் கட்டுப்பாடுகளினால் அதிகரித்தது. எனினும் கே.டி.பால் , எஸ்.கே. தத்தா, சுசில்.கே.ருத்ரா, அகஸ்டின் இரல்லாராம் போன்ற இந்தியக் கிறிஸ்தவர்கள் தேசிய இயக்கத்தை ஆதரித்தது மட்டுமல்லாமல், இந்தியக் கிறிஸ்தவர்கள் உற்சாகத்துடன் தேசிய இயக்கத்தில் ஈடுபட உற்சாகப்படுத்தினர். மேலும் இந்தியக் கிறிஸ்தவர்கள் இனவாதக் குழுவினராக ஆகாதிருக்கவும் தம்மால் இயன்றதைச் செய்தனர். கி.பி.1930இல் தொடங்கிய ஒத்துழையாமை இயக்கம் முதற்கொண்டு அவர்களின் பங்கேற்பு அதிகரித்தது. 'வெள்ளையனே வெளியேறு' இயக்கம் முதற்கொண்டு, அவர்களும், அனைத் திந்திய இந்தியக் கிறிஸ்தவர்களின் அமைப்பும் தேசிய இயக்கத்தின் சார்பில் நின்றன.

## *End Notes*

[1] G.A.Oddie. "Indian Christians and the National Congress, 1885-1910,"**Indian Church History Review**,Vol.II, No.1.,June 1968. p.45.

[2] **Ibid.**p.45.

[3] **Ibid** p.46.

[4] **Ibid.** Table A ., p.53.

[5] **Ibid.** p.46.

[6] **Ibid.** p.47.

[7] **Harvest Field.** Vol.IX. March 1889. p.289.

[8] **Harvest Field,** Third Series, Vol. I. March 1890, p.343.

[9] G.A.Oddie, **op.cit.**, p.48.

[10] **Ibid.**p.50.

[11] T.V.Philip, "Protestant Christianity in India since 1858" in **Christianity in India : A History in Ecumenical Perspective** (eds.) H.C.Perumalil and E.R.Hambye, p279.

[12] **The Young Men of India.** Vol.XIX, No. 11. November 1908, p.190, quoted in G.A. Oddie, **op.cit.** p.52.

[12] **The Young Men of India.** Vol.XX, No.1., January 1909. p.4. quoted in G.A.Oddie, **op.cit.**p.52.

[13] **The Young Men Of India,** Vol. XX,No.1.,January 1909, p.4. quoted in G.A.Oddie, **op.cit.**p.52.

[14] National Missionary Council of India

**The Young Men Of India,** Vol. XX,No.1.,January 1909, p.4. quoted in G.A.Oddie, **op.cit.**p.52.

[15] National Christian Council of India. (NCCI)

[16] Kaj Baago, **A History of the National Christian Council of India 1914-1964.** p..38.

[17] D.Arthur Jeyakumar, **Christians and the National Movement,** pp.11-17.

[18] **Ibid.** pp.54-55.

[19] **Ibid.** pp.70-71.

[20] Text in **Ibid** p.193.

[21] Text in **Ibid.** p.143.

[22] **Ibid.** p.145.

[23] S.K.Dutta, V.S.Azariah, Sushil K.Rudra, K.T.Paul, B.Rallia Ram, Augustine Ralla Ram, V.Chakkarai.

[24] **The Young Men of India,** Vol. XIX, 1908, pp.148 ff. quoted in T.V.Philip., **op.cit,** p.281.

[25] **The Young Men of India,** Vol. XX, 1910, pp.1-5 quoted in **Ibid,** p.281.

[26] D.Arthur Jeyakumar,**op.cit.** pp.133-137.

[27] B.Pattabi Sitaramayya, **History of the Indian National Congress,** Vol.I, p.20. quoted in **Ibid.** p.138.

[28] All India Conference of Indian Christians (AICIC).

[29] M.K.Kuriakose, **History of Christianity in India : Source Materials.** pp.322-323.

[30] **Ibid.** pp.330-331.

[31] For a list of Indian Christians from Tamil Nadu, see Appendix-9, D.Arthur Jeyakumar, **op.cit.,** pp.220-238.

[32] **Ibid.** pp.71-76.

[33] **Ibid.,** pp77-81, 103-112.

[34] **Ibid.** pp.82-84. 101-102.

[35] **Ibid.** p.95.

[36] D.Arthur Jeyakumar, "Paul Ramasamy and the National Movement", in **Dharma Deepika,** December 1997.

[37] T.V.Philip, **op.cit.** p.283.

இயல் ஒன்பது

# திருச்சபை ஒன்றிப்பு இயக்கங்கள் - குறிப்பாகத் தென்னிந்திய திருச்சபையும், வட இந்திய திருச்சபையும்

**முன்னுரை:**

கிறிஸ்தவ வரலாற்றில், பத்தொன்பதாம் நூற்றாண்டு அருள்பணி அல்லது அருள்பணி இயக்கங்களின் நூற்றாண்டு எனவும், இருபதாம் நூற்றாண்டு திருச் சபை ஒன்றிப்பு இயக்க நூற்றாண்டு எனவும் அறியப்படுகிறது. இந்தியக் கிறிஸ்தவம் பிந்திய இயக்கத்திற்கு அதிக பங்களிப்பு ஈந்திருக்கிறது என உறுதியாகக் கூறலாம். அது எவ்விதம் சாத்தியமானது என இந்த இயலில் காண முற்படுவோம். திருச்சபை களிடையே இணைந்து செயல்படுதலிலும், ஐக்கியச் சபைகளின் உருவாக்கத்திலும் அது எவ்விதம் வழிகாட்டியாக / முன்னோடியாக / பாதை அமைத்ததாக இருந்தது என்பதனை அறிய முற்படுவோம். இவைகள் ஒரே இரவில் நடைபெறவில்லை. பல படிமுறைகள் அதற்குத் தேவைபட்டன. அவைகளை அறிந்து கொள்வது தேவை யானதாகும்.

## அருள்பணிச் சங்கங்களிடையே / திருச்சபைகளிடையே இணைந்து செயல்படுதல் ஏற்படக் காரணிகள்:

### (அ) புத்தெழுச்சி இயக்கம் / ஆன்மிக எழுச்சி :

பதினேழாம் நூற்றாண்டு ஜெர்மனியில் எழுந்த பக்தி இயக்கம், ஐரோப்பிய கிறிஸ்தவரிடையே நற்செய்திப் பரப்புவதில் ஆர்வத்தைத் தூண்டிவிட அடிப்படைக் காரணமாயிருந்தது. ஹல்லே (Halle) பல்கலைக்கழகம் பக்தியியக்கத்தின் மைய மாக இருந்தது. அது அப்பல்கலைக்கழக மாணவர்களை அருள்தொண்டர்களாகச்

செல்ல உந்துதல் அளித்தது. அவர்களில் பலர் தரங்கைப் பணிக்களத்தில் தொண்டாற்றினர்.

ஜெர்மன் பக்தி இயக்கம், தனி நபர் மனமாற்றத்திற்கு / மீண்டும் பிறத்தலுக்கு அழுத்தம் தந்தது. அதன் மூலம் தொடப்பட்ட ஒரு குழுவினர் மொரேவியர்கள். கோமகன் ஜின்ஜென்டார்ஃப் (Count Zinzendorf) என்பவரின் ஆதரவில் ஹெர்ன்ஹூட் ( Herrnhut ) என்னுமிடத்தில் அவர்கள் புகலிடம் பெற்றனர்; பின்பு மொரேவிய சகோதரர் என அழைக்கப்பட்டனர். பல்வேறு துறைகளில் ஈடுபட்டிருந்த அவர்கள், உலகின் பல பகுதிகளுக்கும் சென்றனர்; சென்ற இடங்களில் எல்லாம் தங்களின் கிறிஸ்தவ நம்பிக்கையைக், குறிப்பாக இயேசு கிறிஸ்துவைத் தங்களின் சொந்த மீட்பராகவும், ஆண்டவராகவும் ஏற்றுக்கொண்டு அதனால் பெற்ற நிறைவைப் பிறருடன் பகிர்ந்து கொண்டு, மற்றவர்களும் அவ்வித நிறைவைப் பெற பிறரைத் தூண்டினர். அவ்விதமாக ஒரு மொரேவிய சகோதரரால் தொடப்பட்ட ஒரு நபர் அருள்திரு / அருள்பணியர் ஜான் வெஸ்லி (1703-1791) என்பவராவர். இவர் வட அமெரிக்காவின் ஜார்ஜியா பகுதிக்கு நற்செய்திப்பணி செய்ய இங்கிலாந்திலிருந்து சென்றவர். அங்கு அவர் பணியில் வெற்றி கிட்டவில்லை. அங்கிருந்து இங்கிலாந்து திரும்பியபின், இலண்டன் நகரில் இருந்த ஒரு மொரேவியரைச் சந்தித்துப் பேச வழிநடத்தப்பட்டார். அச்சந்திப்பு ஜான் வெஸ்லியின் வாழ்வில் ஒரு பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியது. இயேசு கிறிஸ்துவைத் தன் சொந்த ஆண்டவராகவும், மீட்பராகவும் ஏற்கச் செய்தது. ஜான் வெஸ்லி தன் தகப்பனாரைப் போன்றே ஆங்கிலத் திருச்சபையின் அருட்பொழிவைப் பெற்ற பணியாளர். மனமாற்றம் அடைந்த பின், தன் இளைய சகோதரனும், ஆங்கிலத் திருச்சபையின் அருட்பொழிவு பெற்றவருமான அருள்திரு சார்ல்ஸ் வெஸ்லி (1707-1788) என்பவரைத் தன்னைப்போன்று இயேசு கிறிஸ்துவைத் தன் சொந்த ஆண்டவராகவும், மீட்பராகவும் ஏற்றுக்கொள்ள வழிநடத்தினார். அவர்கள் இருவரும் இங்கிலாந்தின் பல பகுதிகளிலும் சுற்றித்திரிந்து இயேசுவை ஒவ்வொருவரும் தங்கள் சொந்த மீட்பராக ஏற்கவேண்டிய அவசியத்தையும், நற்செய்தியை அறிவிக்க வேண்டியதின் கட்டாயத்தையும் பறைசாற்றினர். ஆங்கில திருச்சபையின் பிற அருள்தொண்டர்கள் வெஸ்லி சகோதரர்களைத் தங்கள் சபைகளில் அருளுரையாற்ற அனுமதி வழங்காத காரணத்தினால், திறந்த வெளிகளில் நற்செய்திக்கூட்டங்கள் நடத்தினர். இவ்வுலகே தன் அருள்பணிக்களம் எனக் கூறியவர் ஜான் வெஸ்லி. வெஸ்லி சகோதரர்களின் பணியினால் இங்கிலாந்து கிறிஸ்தவரிடையே பெரிய ஆன்மிக எழுச்சி ஏற்பட்டது. சிறந்த பாடலாசிரியரான சார்ல்ஸ் வெஸ்லியின் பாடல்களும் அதற்குத் தூண்டுதலாக அமைந்தன. அவ்விதம் ஏற்பட்ட எழுச்சி, கிறிஸ்தவரிடையே சபை பாகுபாடு கடந்த தோழமையை / கூட்டிணக்கத்தைத் தோற்றுவித்து, மக்களினத்தின் ஆன்மாக்கள், குறிப்பாக அந்நாள் வரையிலும் நற்செய்தி

அறிவிக்கப்படாத இடங்களிலுள்ள மனிதர் மீட்கப்படவேண்டும் என்னும் பாரத்தை உருவாக்கிற்று. இங்கிலாந்தில் ஏற்பட்ட ஆன்மிக எழுச்சி, பிற மேற்கத்திய நாடுகளிலும் பரவி கிறிஸ்தவ திருச்சபையினரிடையே மாறுபட்ட சூழலைக் கொணர்ந்தது. இதன் விளைவாக திருச்சபைகளைச் சார்ந்தோ, அல்லது சாராமலோ நற்செய்திப்பணிச் சங்கங்கள் தோற்றுவிக்கப்பட்டன. ஆரம்பக்கட்டத்தில் இவை தங்கள் சபை பாகுபாடுகளைத் திணிக்க முற்படாமல் ஆன்மாக்கள் மீட்கப்படவேண்டும் என்னும் கொள்கையுடையனவாக இருந்த காரணத்தினால் அருள்பணிக்களங்களில் இணைந்து செயல்படுவதும், பொதுவான நோக்குடைய பணிகள் செய்யப்படவும் சாத்தியமாயிற்று.

அதே வேளையில், ஆன்மிக எழுச்சி, மேற்கத்திய சபைகள் தங்கள் கோட்பாடுகள் குறித்த கட்டுறுதியான / விட்டுக்கொடுக்காத நிலைப்பாட்டிலிருந்து சிறிது மாற்றி கொள்ள உதவியது. எடுத்துக்காட்டாக, பக்தியியக்கப் பார்வையின் விளைவாகவும், நற்செய்திப்பணியின் மீதிருந்த தீவிர ஆர்வத்தினாலும் பழைய / தொன்மையான சபையாளுகை இறையியலை விட்டுக்கொடுக்காத கால்வினியக் கொள்கையின் தீவிரம் குறைய ஆரம்பித்தது. டி.எல்.மூடி ( D.L.Moody )யின் அருளுரைகளும், ஐரா.டி.சாங்கி (Ira.D.Sankey)யின் பாடல்களும்கூட விட்டுக்கொடுக்காத சபைப் பாகுபாடுகளின் கோட்டைகளை அசைத்தன. அருள்தொண்டு பணிகளில் இணைந்து செயல்படும் சிந்தனையையும், திருச்சபை ஐக்கிய எண்ணங்களையும் இவை தூண்டிவிட்டன. ஒரு சபைப் பிரிவைச் சேர்ந்த போதகர், பிரிதொரு சபையில் அருளுரையாற்றுதல் என்பது ஒரு புதிய சிந்தனைக்கூறானது மட்டுமல்லாமல் அது வரவேற்கப்பட்டதாகவும் இருந்தது. ஏ.பி.சி.எஃப்.எம். என்னும் அமெரிக்கன் போர்டு ( ABCFM / American Board ) என்னும் அருள்பணிச் சங்கம் தொடக்கத்தில் பெருமளவிற்குச் சபையாளுகை முறைமையைச் சார்ந்ததாக இருந்தாலும், பதினெட்டாம் நூற்றாண்டின் எழுச்சியின் தாக்கத்தினால், மூப்பராளுகை முறைமையின் சிறப்புக்களைத் தன்னோடிணைத்துக் கொண்டது. இதனால் சபையாளுகை முறைமையும், மூப்பராளுகை முறைமையும் நெருங்கிவர முற்பட்டன.[1]

## (ஆ) இந்தியாவில் அருள்பணியாளர்களின் மாநாடுகள்:

அருள்பணித்தளத்தில் அருள்பணியாளர்கள் இணைந்து செயல்படும் சிந்தனையை முதன்முதலில் எடுத்துரைத்தவர் வங்காளத்தில் பணியாற்றிய பிரித்தானிய பாப்திஸ்து அருள்பணியாளர் வில்லியம் கேரி (1761-1834) தான். அவர் கி.பி.1806இல் பணித்தளத்தில் இணைந்து செயல்படக்கூடிய துறைகள் குறித்தும், அருள்பணியாளர்கள் தங்கள் அனுபவங்களையும், இன்ப, துன்பங்களையும், இக்கட்டுகளையும் பகிர்ந்துகொள்ளக்கூடிய உலகளாவிய அருள் பணியாளர்கள் மாநாடு ஒன்று தென் ஆப்பிரிக்காவின் நன்னம்பிக்கை

முனையில் கி.பி.1810இல் அல்லது 1812இல் கூட்டப்பட ஆலோசனை கூறினார்.[2] ஆனால் வில்லியம் கேரியின் அவ்வாலோசனை அப்பொழுது கைகூடவில்லை. அது நிறைவேற நூறு ஆண்டுகளாயிற்று. கி.பி.1910இல் எடின்பரோ நகரில் கூட்டப்பட்ட அகில உலக அருள்பணியாளர் மாநாடு மூலம் கேரியின் கனா நிறைவேறியது எனலாம்.

கி.பி.1825இல் பம்பாயில் / மும்பாயில் பணியாற்றிக்கொண்டிருந்த பல்வேறு அருள்பணிச் சங்கங்களின் அருள்தொண்டர்கள் கலந்தாலோசித்தலுக்காகக் கூடினர். இது வில்லியம் கேரியின் ஆலோசனையின் நிறைவேறுதல் எனலாம். அக்கூட்டத்தில் இணைந்து செயல்படக்கூடிய துறையான நற்செய்திப்பணி, அதில் எதிர்கொள்ளப்படும் இடர்பாடுகள், சிக்கல்கள் போன்றவற்றைக் குறித்து கலந்துரையாடினர். மேலும் கிறிஸ்தவத்தை ஏற்றுக்கொள்ள முன்வரும் நபருக்கு தரப்படக்கூடிய திருமுழுக்கிற்கு ஒரே மாதிரியான அடிப்படைத் தேவை என்ன என்பதையும், கிறிஸ்தவ இலக்கியப்பணியில் இணைந்து செயல்படுவது எனவும் முடிவெடுத்தனர். இந்த மும்பாய் அனுபவம், கல்கத்தா / கொல்கத்தா, சென்னை நகரங்களில் பணியாற்றிக்கொண்டிருந்த அருள்பணியாளர்கள் இணைந்துவரத் தூண்டியது. அவர்களின் அத்தகையக் கூட்டம் முதன் முறை யாக கி.பி.1830இல் நடைபெற்றது. கொல்கத்தா கூட்டம் தொடக்கத்தில் கொல்கத் தாவிலிருந்த பாப்திஸ்து அருள்பணிச் சங்க அச்சகப் பொறுப்பாளரின் இல்லத் தில் ஒவ்வொரு மாதத்தின் முதல் திங்கள் கிழமை காலை உணவு சமயத்தில் நடைபெற்றது. இத்தகைய நகரங்களில் நடைபெற்ற அருள்பணியர் கூட்டங்கள், வட்டார அல்லது மாகாணத்திற்குரிய அருள்பணியர்கள் மாநாடுகளுக்கு வழி நடத்தின. அவை பின்வருவன: கி.பி.1855 வங்காள பொது மாநாடு, கொல்கத்தா, கி.பி.1857 வட மேற்கு இந்திய பொது மாநாடு, வாரனாசி, கி.பி.1858 தென் இந்திய அருள்பணியர் மாநாடு, உதகமண்டலம் (ஊட்டி), கி.பி.1862 பஞ்சாப் மாநாடு, லாகூர், கி.பி.1879 தென் இந்தியா, இலங்கை அருள்பணியர் மாநாடு, பெங்களூரு, கி.பி.1900 தென் இந்திய அருள்பணியர் மாநாடு, சென்னை, இன்னும் பிற. கி.பி.1900இல் கூடிய மாநாட்டைத் தவிர, ஏனையவை அனைத்தும் அருள்பணிச் சங்கங்களின் அதிகாரப்பூர்வ ஒப்புதல் இல்லாமல் கூட்டப்பட்டவை; இந்தியாவில் பணியாற்றிக்கொண்டிருந்த அருள்பணியரின் தனிப்பட்ட ஆர்வத்தின் அடிப்படையிலும், ஊக்கத்தினாலும் நடத்தப்பட்டவை. இந்த மாநாடுகளில் அருள்பணியாளர்கள் தோழமை / கூட்டிணக்க உணர்வு பெற்றதுமட்டுமின்றி, தங்களின் பணிகளில் சந்தித்த இடர்கள், சிக்கல்கள், தங்களின் கனவுகள், பணிகளைக் குறித்த அக்கறை ஆகியவைகளையும் பகிர்ந்து கொண்டனர். கி.பி.1900இல் சென்னையில் நடைபெற்ற தென் இந்திய அருள்பணியர் மாநாடே அருள்பணியர் சங்கங்களின் அனுமதியுடனும், ஆதரவுடனும் தென் இந்தியாவில் நடைபெற்ற முதல் மாநாடு. அது கூட்டப்பட்ட

முறைமை, நடத்தப்பட்ட வகை ஆகியவை அதன்பின் நடைபெற்ற அருள்பணியர் மாநாடுகளுக்கு, கி.பி.1910 எடின்பரோ மாநாடு உட்பட , முன் உதாரணமாக அமைந்தது. இவைகள் அனைத்தும், ஒருமைப்பாடு இயக்கத்திற்கு இந்தியரின் பங்களிப்புகள் எனலாம்.

மேற்கூறப்பட்ட வட்டார மாநாடுகள் அனைத்திந்திய அருள்பணியர் மாநாடு களுக்கு வழிநடத்தின. அவை பத்தாண்டுகளுக்கொருறை நடைபெற்றக் காரணத்தினால் ' பத்தாண்டு மாநாடுகள் ' எனப்பட்டன. அவை கி.பி.1872இல் அலகாபாத்திலும், கி.பி.1882இல் கொல்கத்தாவிலும், கி.பி.1892இல் மும்பா யிலும், கி.பி.1902இல் சென்னையிலும், கி.பி.1912இல் கொல்கத்தாவிலும் நடைபெற்றன. கி.பி.1872 அலகாபாத் மாநாட்டில் கலந்து கொண்ட, சென்னையில் சி.எம்.எஸ். அருள்பணியராகப் பணியாற்றிக்கொண்டிருந்த அருள்திரு.ஜே.பார்ட்டன் ( Rev.J.Barton) என்பவர் 'வருங்கால இந்தியத் திருச்சபை' என்னும் தலைப்பில் வாசித்த கட்டுரை மிகவும் முக்கியமானதாகவும், குறிப்பிடத்தக்கதாகவும் கருதப்படுகின்றது. அக்கட்டுரையில் ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் ஆழமானதாகவும், மிகவும் அகலமானதாகவும், ஏறிக் கடக்க முடியாததாகவும் கருதப்படும் திருச்சபைக் கிளைகளின் வேறுபாடுகள், இந்தியாவில் பெரும் பான்மையானவர் பின்பற்றும் இந்து சமயத்தின் பின்னணியில் கண்ணோக்கப் பட்டிருந்தது.

கி.பி.1879இல் பங்களூருவில் கூடிய தென் இந்தியா–இலங்கை அருள் பணியர் மாநாடு திருச்சபைக் கிளைகளின் குடும்ப மறுஇணைவுகளையும், திருச்சபைகளின் கூட்டிணைவுகளையும் முன் மொழிந்தது. அம்மாநாட்டில் கலந்து கொண்டவர் கள் தங்களிடையே ஒரு பொதுவான அடித்தளம் இருப்பதை உணர்ந்தனர். அவையாவன: நற்செய்திப்பணியில் தீவிரம், பொதுவான வழிபாட்டு அம்சங் களும், உற்சாகமும், நற்செய்திப்பணி முறைகள், பக்தி என்பவையே.[3] எனவே பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தியாவில் கூடிய அருள் பணியர் மாநாடுகள், திருச்சபையின் பல கிளைகளைச் சார்ந்த அருள்பணியர் கூட்டிணக்க உணர்வு களை சந்திக்கமட்டுமின்றி, திருச்சபைகளின் ஒன்றிணைவுக்கு வழி நடத்தின. இணைந்து செயல்படும் முறைகளைத் திட்டமிட முடியும் எனவும் உணர்த்தின எனக் கூறலாம்.

## (இ) கோடைகால மலைத் தங்கிடங்கள்:

தென் இந்தியாவின் சமவெளிகளில், குறிப்பாக மிக வெப்பமான இடங்களில் பணியாற்றிக்கொண்டிருந்த ஐரோப்பிய, அமெரிக்க அருட்தொண்டர்கள் வெப்பமான மே மாதத்தில் மலைத் தங்கிடங்களான கொடைக்கானல், குன்னூர், உதகமண்டலம் ஆகிய குளிர்ச்சியான இடங்களுக்குச் செல்வது வழக்கம். அச்சமயங்களில் முறைப்படி அமையாத, தனிமுறையான கூட்டங்களில்

தங்களின் பணி அனுபவங்களைப் பகிர்ந்து கொள்வர். இத்தகைய கூட்டங்கள், கூட்டுறவு சார்ந்த பல பணிகளுக்கு வழி நடத்தின. அக்கூட்டங்களின் முக்கிய விளைவுகளில் ஒன்று, கி.பி.1897இல் உருவாக்கப்பட்ட தென் இந்திய அருள் பணியர் சங்கம் என்பதாகும். கி.பி.1900இல் சென்னையில் நடக்கப்பெற இருந்த தென் இந்திய அருள்பணியர் மாநாட்டைக் நடத்தும் பொறுப்பு இச்சங்கத்திற்குத் தரப்பட்டது. கி.பி.1900 மாநாடு முந்தைய கூடுகைகளைப் போன்றல்லாமல், அருள்பணிச் சங்கங்களின் அதிகாரப் பூர்வமான மாநாடாகவும், அச்சங்கங் களினால் தெரிவுசெய்யப்பட்டு, அனுப்பப்பட்ட பிரதிநிதிகள் பங்கேற்ற மாநாடாகவும் நடத்தப்பட்டது. அவ்வகையில் மலைத் தங்கிடங்கள், அருள்பணியர் இணைந்து செயல்படவும், திருச்சபை ஐக்கியத்திற்கும் வழிநடத்திய கருவிகளாகச் செயல் பட்டன எனலாம்.

## (ஈ) அமைப்புகள்:

கிறிஸ்தவ அமைப்புகளான கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், கிறிஸ்தவ நன்முயற்சி சங்கம், இளம் வாலிபர் கிறிஸ்தவ சங்கம் (YMCA) ஆகியவை பல்வேறு கிறிஸ் தவக் கிளைச் சபைகளின் ஐரோப்பிய, இந்தியத் திருச்சபைத் தலைவர்களை ஒன்று கூடவைத்தன. குறிப்பாக, ஒய்.எம்.சி.ஏ. ஐரோப்பியரையும், இந்தியரையும் சமமாக நடத்தியது. இத்தகைய அமைப்புகள் திருச்சபை ஐக்கிய இயக்கங் களுக்கு உந்துதல் தந்தன.

## (உ) இடம் பெயர்தல்:

இந்தியர்களை ஐக்கியப்படுத்திய சக்திகளில் ஒன்று புலம் பெயர்வு அல்லது இடம் பெயர்தல் என்பதாகும். கி.பி.1876-1878இல் ஏற்பட்ட பெரிய பஞ்சம் அனேக மக்களைத் தென் இந்தியாவின் பல்வேறு பகுதிகளுக்கும், ஏன், வெளிநாடுகளுக் கும் குடிபெயரச் செய்தது. அவ்விதம் வேறு இடங்களில் குடியேற்றம் செய்த வர்களில் ஒரு குழுவினர் திருநெல்வேலி கிறிஸ்தவர்கள், குறிப்பாக நாடார் (சாணார்) கிறிஸ்தவர்கள்.[4] அவ்விதம் இடம் பெயர்ந்தவர்கள் தாங்கள் குடியேறிய / இடம் பெயர்ந்த இடங்களில் இருந்த திருச்சபைக் கிளைகளின் அருள்பணி களில் ஒன்றுபட்டிருந்தனர். அத்துடன் நாளடைவில் திருச்சபை ஒன்றிப்பு முயற்சிகளில் குறிப்பிடத்தக்கப் பணியாற்றினர்.[5]

இத்தகைய இடமாற்றங்கள் சாதி விட்டு / சாதி கடந்த திருமணங்களுக்கும், திருச்சபைப் பாகுபாடுகளையும் தாண்டிய திருமணங்களுக்கும் வழி நடத்தின. எடுத்துக்காட்டாக, கி.பி.1937இல் எடின்பரோவில் நடைபெற்ற பற்றுறுதி - அமைப்பு ( Faith and Order) மாநாட்டில் சி.ஜே. லூகாஸ் (C.J.Lucas ) என்பவரின் அனுபவப்பகிர்வு. சி.ஜே.லூகாசின் தந்தை கிறிஸ்தவத்தைத் தழுவியவர்; அவர் லூத்தரன் திருச்சபையைச் சேர்ந்தவர். அவரின் தாயாரும் புதிய கிறிஸ்தவர். அவர் சபையாளுகை முறைமையைச் சேர்ந்தவர்; என்றாலும் திருமணத்திற்குப்

பின் லூத்தரன் சபையினரானார். அதனால் சி.ஜே.லூகாஸ் ஒரு லூத்தரனாக வளர்க்கப்பட்டார். அவரின் கல்லூரிப் படிப்பு ஒரு தூய்மையாளர் (Puritan) திருச்சபைக் கிளையினரின் கல்லூரியில்; எனவே அவர் கால்வினியத் தூய் மையாளர் அதாவது சபையாளுகைப் பிரிவினரின் இறையியலின் பாதிப்புக்குள் வந்தார். அவரின் உயர் கல்வி சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியில்; அங்கு மூப்பராளுகையினரின் வழிபாட்டு முறைக்குத் திறந்துவிடப்பட்டார்; அதனை அவர் பாராட்டத்தொடங்கினார். அதன்பின் அவர் சென்னை பல்கலைக்கழக மாணவரானார். அக்காலக்கட்டத்தில் வெஸ்லியன் மெத்தோடிஸ்டு சபை வழிபாடு களில் கலந்து கொண்டார். அச்சபையின் ஞானப்பாடல்களும், அருளுரைகளும் அவரை அதிகம் ஈர்த்தன. சி.ஜே.லூகாசின் மனைவி ஆங்கில சபையினர். ஆனால் அம்மனைவியின் நெருங்கிய உறவினர்கள் ரோமன் கத்தோலிக்கரா கவோ, உயர் ஆங்கில சபையினராகவோ இருந்தனர். " இவ்விதம் திருமணத்தின் மூலமும், இடம்பெயர்வுகள் மூலமும் நான் வித்தியாசமான திருச்சபை பாகு பாடுகளின் நம்பிக்கைகளைச் சேர்ந்த கிறிஸ்தவர்களுடன் இணைக்கப்பட் டுள்ளேன். இவ்விதமாக இருந்தாலும் என்னுடைய நட்பு, உறவு, வழிபாடு ஆகிய வைகளால் அவர்களுடன் உள்ள தொடர்பு பாதிக்கப்பட்டதில்லை.... "[6] என்கிறார் லூகாஸ்.

சி.ஜே.லூகாஸ் ஒரு விதிவிலக்காக இருக்கலாம். என்றாலும் புலம்பெயர்வு இந்தியக் கிறிஸ்தவர்களின் பார்வையை விரிவடையச் செய்தது என்பதே இதன் கருத்து. புலம்பெயர்வு அவர்களிடையே ஒரு புதிய உறவுமுறைமைக்கு வழிநடத் தியது. எடுத்துக்காட்டாக திராவிட ஐக்கியம். அது அவர்களிடையே திருச்சபைப் பாகுபாடு எல்லைகளைக் கடக்கச் செய்தது. மாறாக, தங்களின் பூர்வீக இடத்தை விட்டகலாதவர்கள் தங்களின் சபைப் பாகுபாடு உணர்வுகளிலேயே அடைபட்டு, வெளிவர இயலாமல், கிணற்றுத் தவளை போன்றிருந்தனர்.

### (ஊ) சென்னை கிறிஸ்தவக் கல்லூரி:

கி.பி.1837இல் சென்னையில் ஸ்காட்லாந்து மூப்பராளுகைச் சபையினரால் நிறு வப்பட்ட உயர் கல்வி நிறுவனம் அனேக இளம் இந்திய வாலிபர்களைக் கவர்ந் தது. அவர்கள் மேற்கத்திய கல்வியில் அதிக ஆர்வமுடையவராக இருந்தனர். அவர்கள் தென்னிந்தியாவின் பல பகுதிகளிலிருந்து வந்திருந்தனர். எனவே அவர்கள் பல்வேறு சபை கிளைகளைச் சேர்ந்தவர்களையும், பல மொழி பேசிய, பல பகுதிகளைச் சேர்ந்தவர்களையும் சந்திக்கும் வாய்ப்பைப் பெற்றனர்; அவ்விதம் கலந்துரையாடியபொழுது தாங்கள் அனைவரும் கிறிஸ்துவுக்குள் ஒன்று என்னும் உணர்வைப் பெற்றனர். அதனால், சபை ஐக்கிய உணர்வை வளர்த்த நிறுவனம் என்னும் பெயரைச் சென்னை கிறிஸ்தவக் கல்லூரி பெற்றது. மேலும் இது கி.பி.1910இல் ஒரு ஐக்கிய கல்வி நிறுவனமானது. ஸ்காட்லாந்

திலிருந்து வந்திருந்த இரண்டு அருள்தொண்டு சங்கங்களும், வெஸ்லியன் மெத்தோடிஸ்டு சங்கமும், சபை அருள்தொண்டு சங்கமும் (சி.எம்.எஸ்.) இணைந்து செயல்படுவதற்கு ஓர் எடுத்துக்காட்டாகவும் சென்னை கிறிஸ்தவ கல்லூரி திகழ்ந்தது.

## (எ) நாட்டுப்பற்று:

பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலிருந்து, இந்தியர்கள் தங்கள் நாட்டுப்பற்று உணர்வை வெளிப்படுத்தும் முயற்சிகளில் ஈடுபட்டனர். சில இந்தியக் கிறிஸ்தவர்களும் அதை ஏதாவதொரு வகையில் வெளிப்படுத்தினர். அதற்காதாரமாக, பின்வரும் எடுத்துக்காட்டுகளைக் கூறப்படலாம்; தமிழ் நாட்டி லுள்ள பழைய திருநெல்வேலி மாவட்டத்தில், நாசரேத்துக்கு அருகில் மூக்குப்பேரி என்னுமிடத்தில் சட்டாம்பிள்ளை[7] என்பவர் ' நாட்டுச் சபை ' எனப் பொதுவாக அழைக்கப்படும் 'ஆண்டவர் இயேசுவின் இந்து சபை' என்பதைத் தோற்றுவித்தது; சென்னையில் மருத்துவர் புல்னி ஆண்டி (அ) பரணி ஆண்டி ( Pulney or Parani Andy ) என்பவர் நிறுவிய சென்னை அல்லது இந்திய தேசியத் திருச்சபை; காளி சரன் பானர்ஜியும், ஜோய் ஷோமேயும் (Joy Shome) இணைந்து கொல்கொத்தாவில் தொடங்கிய கிறிஸ்தவ சமாஜம் ( Christo Samaj ). மேலும், அருட்பொழிவு பெற்ற இந்தியர்கள், குறிப்பாக லால் பீஹாரி டே ( Lal Behari Dey ) போன்றவர்கள், தாங்கள் ஐரோப்பிய அருள்பணியர்களுக்கு இணையாக நடத்தப்படக்கேட்டனர்; எல்லாச் சபை பாரம்பரியங்களின் சிறப்பான தன்மைகளை எடுத்திணைத்து, ஒரு இந்திய திருச்சபை அமைக்கப்பட லால் பீஹாரி டே விரும்பினார்.[8] எனவே நாட்டுப்பற்று இந்தியர்களை சேரத் தூண்டியது எனலாம். இந்தியக் கிறிஸ்தவர் களின் இத்தகைய தேசிய உணர்வு மேலைநாட்டு அருள்பணிச்சங்கங்களையும் திருச்சபை ஐக்கியம் குறித்து சிந்திக்க வைத்தது. (ஒன்றுபடுவதற்காக ஐக்கியப்படல்)

## (ஏ) முறிந்து போன இந்தியக் கிறிஸ்தவர்கள்:

கி.பி.18ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வந்த டேனிஷ் ஹல்லே தரங்கம்பாடி அருள்பணியர் காலத்திலிருந்தே மேற்கத்திய சீர்திருத்த / பிராட்டஸ்டண்ட் கிறிஸ்தவம் இந்தியாவில் அறிமுகப்படுத்தப்பட்டிருந்தாலும், இந்தியாவில் இந்தியக் கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை மிகச்சிறியதே / அற்பமானதே. அனேக இடங்களில் அவர்கள் இழிவாகக் கருதப்பட்டனர். சபை பாகுபாடுகள் அடிப்படையில் பிளவுபட்டிருந்த இந்தியக் கிறிஸ்தவர்கள், தங்களின் முறிந்துபோன நிலையில் பெரும்பான்மை கிறிஸ்தவரல்லாத இந்தியர்களுக்கு ஆற்றல் வாய்ந்த சாட்சிகளாக இருக்க இயலவில்லை.

எல்.எம்.எஸ். அருள்பணியர் ஜி.இ.பிலிப்ஸ் (G.E.Phillips. LMS) தன் அனுப வத்தைப் பின்வருமாறு பகிர்ந்து கொள்கிறார்: " நான் ஒரு அருள்பணிக்களத்தில்

வாழ்ந்திருக்கிறேன். அங்கிருந்த கிறிஸ்தவர்கள் எண்ணிக்கையில் மிகவும் குறைவே; இந்து சைவப் புனித நகரமொன்றில் பெரும்பான்மையினராக வாழ்ந்துகொண்டிருந்த இந்துக்களால் கிறிஸ்தவர்கள் இழிவாகக் கருதப்பட்டனர். வலு குறைந்த அக்கிறிஸ்தவர்கள் திருவிருந்து கொள்கை அடிப்படையில் லூத்தரன், ஆங்கிலிக்கன், தென்னிந்திய ஐக்கிய சபை என மூன்று கிளைகளாக முறிந்து போயிருந்தனர். அவர்கள் வாழ்ந்த சூழலில் கிறிஸ்தவர்களின் முறிந் துபோன நிலை எவ்வளவு பித்து பிடித்தது என்பதை உங்களால் கற்பனை செய்து பார்க்க இயலாது."[9] அனேக அருள்தொண்டர்களும், இந்தியக் கிறிஸ்தவர்களும், குறிப்பாக நகரங்களிலும், இடம் பெயர்ந்த மக்கள் இருந்த இடங்களிலும் இருந்த வர்களும் இந்தியக் கிறிஸ்தவர்களின் முறிந்துபோன நிலையின் பழிச் சொல்லை / அவதூறை உணர்ந்தனர். எனவே ஐக்கிய திருச்சபையின் தேவையை உணர்ந்தனர்.

## குடும்ப ஐக்கியம்:

### அ. மூப்பராளுகையினர்:

கி.பி.1899இல் தென் சீனாவில் பணியாற்றிக்கொண்டிருந்த ஆங்கிலேய மூப் பராளுகையினரும், அமெரிக்க டச்சு சீர்திருத்தச் சபை (மூப்பராளுகை) யினரும் ஒன்றிணைய முன்வந்தனர். ஸ்காட்லாந்தில் இருந்த மூப்பராளுகை சபையின் இரண்டு பிரிவுகள் கி.பி.1900இல் ஸ்காட்லாந்து ஐக்கிய சுயாதீன சபை என்னும் பெயரில் இணைந்தனர். இவை தென்னிந்தியாவில் இருந்த மூப்பராளுகை யினர் ஒன்றிணைய செயல்தூண்டுதலாக இருந்தன. என்றாலும் இவை அனைத்தும் ஏற்படுமுன்பே இந்தியாவில் பணியாற்றிக்கொண்டிருந்த, ஆனால் வெவ்வேறு நாடுகளிலிருந்து வந்திருந்த மூப்பராளுகை அருள்பணிச் சங்கங் கள் 'இந்திய மூப்பராளுகை உறவு, ( The Presbyterian Alliance of India ) என்னும் கூட்டிணைப்பை உருவாக்க முடிவெடுத்தனர். இது கி.பி.1875இல் நடைபெற்றது. அதன் கூட்டம் ஒவ்வொரு ஆண்டும் நடைபெற்றது. அத்தகைய கூட்டமொன்று கி.பி.1901இல் அலகாபாத்தில் கூடியபொழுது அப்பொழுது இந்தியாவின் பல பகுதிகளில் நற்செய்திப்பணியாற்றிக் கொண்டிருந்த பதின்மூன்று வெவ்வேறு மூப்பராளுகை அருள்பணி சங்கங்கள் ஒன்றிணைந்து ஒரே இந்திய மூப்பரா ளுகை திருச்சபை என்பதை உருவாக்க முடிவெடுத்தனர். அதன் முதல் பொது மன்றம் கி.பி.1904 டிசம்பர் மாதம் நடைபெற்றது.[10]

கி.பி.1900இல் சென்னையில் நடைபெற்ற தென்னிந்திய அருள்பணியர் மாநாடு தென்னிந்தியாவில் பணியாற்றிக்கொண்டிருந்த மூப்பராளுகை பிரிவினர் ஒன்றிணைய உந்துதல் தந்தது. அமெரிக்க ஆற்காடு அருள்பணிக் குழுவினரும், ஸ்காட்லாந்து அருள்பணிக் குழுவினர் இரண்டு பிரிவினரும் (ஐக்கிய சுயாதீன சபை, ஸ்காட்லாந்து சபை) ஒன்றிணைந்து ஒரு ஐக்கிய சபையை அமைத்தனர்.

இது கி.பி.1901 அக்டோபரில் வேலூரில் நடைபெற்றது. சோளிங்கரில் (தமிழ்நாடு) பணியாற்றிக்கொண்டிருந்த ஆஸ்திரேலிய மூப்பராளுகைக் குழுவினரும் இதில் இணைந்தனர். இப்புதிய ஐக்கிய சபை 'தென்னிந்திய ஐக்கிய சபை' என அழைக்கப்பட்டது. குடும்ப ஐக்கியத்திற்கு இது ஒரு எடுத்துக்காட்டு. இணைந்த இரு சபை பிரிவுகளின் உள்ளூர் சபைகள் புதிய ஐக்கிய சபைக்கு கி.பி.1902 செப்டெம்பரில் மாற்றப்பட்டன.

மேற்கூறப்பட்ட முயற்சிகளில் ஈடுபட்ட மூப்பராளுகை சபையின் தலைவர்கள் பிற திருச்சபைப் பிரிவுகளுடனும் ஐக்கியப்பட விரும்பினர். எனவே இந்திய மூப்பராளு கை உறவு (The Presbyterian Alliance of India) என்னும் அமைப்புடன் தென் னிந்திய மூப்பராளுகையினரின் தென்னிந்திய ஐக்கிய சபை இணைந்தபொழுது அவர்களின் வேண்டுகோள் என்னவெனில் தென்னிந்தியாவிலுள்ள பிற சபைக ளுடன் ஐக்கியம் ஏற்படும் தருணத்தில், தங்களை அதற்கு அனுமதிக்கவும், இந்திய மூப்பராளுகை உறவு அமைப்பிலிருந்து தாங்கள் விலகிக்கொள்ள அனுமதிக்கவும் வேண்டும் என்பதே.

## ஆ. சபையாளுகையினர்:

தென்னிந்தியாவில் இரண்டு சபையாளுகைப்பிரிவு சபைகள் இருந்தன. அவை இலண்டன் அருள்பணிச் சங்கம் (எல்.எம்.எஸ்.) அமெரிக்க போர்டின் அமெரிக்க மதுரை அருள்பணி குழு என்பவையாகும். அவைகளில் எல்.எம்.எஸ்.சின் உள்ளூர் சபைகள் மிகவும் சுதந்திரமாகவும், தனித்தும் செயல்பட்டவை. சபையாளுகை யினரின் அனைத்து உள்ளூர் சபைகளும் ஒரே அமைப்பின் கீழ் கொண்டு வரப்பட வேண்டிய தேவை உணரப்பட்டது. சென்னையில் எல்.எம்.எஸ். அருள் பணியராகப் பணியாற்றிக் கொண்டிருந்த மாரிஸ் பிலிப்ஸ் (Maurice Phillips ) என்பவர் அத்தகைய சிந்தையை அதிகமாக ஆதரித்தவர். எல்.எம்.எஸ்.சின் உள்ளூர் சபைகளை ஒருங்கிணைக்கும் திட்டத்தைப்பற்றி ஆலோசிக்க ஒரு உப கமிட்டி அமைக்கப்பட்டிருந்தது. அதன் கூட்டுனராக மாரிஸ் பிலிப்ஸ் இருந்தார். எல்.எம்.எஸ்.சின் அனைத்து உள்ளூர் சபைகளும் 'லண்டன் மிஷன் சபைகளின் மாவட்ட மன்றம்'[11] என்னும் அமைப்பின் கீழ் ஒரு ஐக்கியமாக இணைக்கப்படலாம் என்னும் ஆலோசனையை அவர் வழங்கினார்.[12]

அத்துடன் அமெரிக்க மதுரை அருள்பணி குழுவுடன் இணையவும் நடவடிக்கை எடுக்கப்பட்டது. அக்குழு முதல் முறையாக கி.பி.1903இல் கூடியது. இந்த இரண்டு சபையாளுகை திருச்சபைகளின் பொது மன்றம் மதுரையில் கி.பி.1905 ஜூலையில் நடைபெற்றது. அங்கு இவ்விரண்டு திருச்சபைகளையும் இணைத்த ஒரு அமைப்பு அதிகாரப்பூர்வமாக உருவாக்கப்பட்டது. அத்திருச்சபையைச் சேர்ந்த 1,33,000 கிறிஸ்தவர்கள் அவ்வித புதிய அமைப்பிற்குள் வந்தனர். ஸ்காட்லாந்து திருச்சபையைச் சேர்ந்தவரும், எல்.எம்.எஸ்.சின் அருள்பணியரு

மான ஜே.டதி ( J.Duthie ). மேற்கூறிய புதிய பொது ஐக்கியத்தின் தலைவராகவும், அமெரிக்க மதுரை மிஷனின் அருள்பணியர் ஜே.எஸ்.சான்ட்லர் (J.S.Chandler ) அதன் செயலராகவும் தெரிவுசெய்யப்பட்டனர்.[13] இப்புதிய அமைப்பும் ஒரு குடும்ப ஐக்கியமாகும்.

சபையாளுகை சபையினரின் புதிய பொது ஐக்கியம் தனக்கென ஒரு புதிய விசுவாச அறிக்கையையும், அடிப்படை அமைப்பு விதிமுறை (Constitution ) களையும் ஏற்றது. திருச்சபைப் பணிவிடையின் பங்கு / வேலைப் பகுதி அதிக அழுத்தம் பெற்றது.

## தென்னிந்திய ஐக்கியத் திருச்சபை:

மூப்பராளுகை சபையினரின், சபையாளுகை சபையினரின் குடும்ப ஐக்கியங்கள் அத்துடன் முடிவடைந்துவிடவில்லை. அவர்கள் இருவரும் ஐக்கியப்பட முற்பட்டனர். கி.பி.1902இல் சென்னையில் நடைபெற்ற அகில இந்திய அருள்பணியர் பத்தாண்டு மாநாட்டின்போது, இவ்விரு திருச்சபைக் குடும்ப ஐக்கியங்களின் பிரதிநிதிகள் சந்தித்து, சுதந்திரத்துடன் கூடிய ஐக்கியம் ( Federation ) அமைப்பது குறித்து விவாதித்தனர். ஒவ்வொரு ஆண்டும் கொடைக்கானலுக்குக் கோடை கால விடுமுறைக்கு வரும் அருள்பணியரும் கலந்தாலோசிப்பது வழக்கமாக இருந்தது. அத்தகைய ஒரு கூடுகை கி.பி.1905 ஜூன் மாதத்தில் நடந்தது. அங்கு மேற்கூறிய இரண்டு திருச்சபைகளின் பிரதிநிதிகள் சந்தித்து, ஐக்கியப்படுவதற்கான முறையான பேச்சு வார்த்தைகளைத் தொடங்கினர். ஜே.எஸ்.சான்ட்லரும், ஜே.டதியும் இரு சபைகளும் இணைவதில், ஐக்கியப்படுவதில் மிகவும் குறிப்பாக இருந்தனர். “எல்லாத் திருச்சபைகளும் தங்களின் அடிப்படையில் ஒன்றாக இருப்பதை உணர வேண்டும். தங்களின் பாரம்பரியங்களிலும், தங்கள் திருச்சபைப் பிரிவுகளில் தென்படும் வேறுபாடுகளிலும் தேவையற்ற அழுத்தம் கொடுப்பதைக் குறித்து எச்சரிக்கையாக இருக்க வேண்டும்...”[14] என்பது டதியின் கருத்தாகும்.

இணைய முற்பட்ட மேற்கூறியவைகளின் தாய் சங்கங்களுக்கு, தொடங்கப்பட்டிருந்த சபை ஐக்கிய பேச்சு வார்த்தைகள் குறித்து தெரிவிக்கப்பட்டு, அவைகளின் கருத்துக்களும் எதிர்பார்க்கப்பட்டன. தாய் சங்கங்களின் பதிலுரைகள் ஆதரவாக இருந்தன. கி.பி.1907 ஜூலை மாதத்தில் நடைபெற்ற ஐக்கிய சபைகளின் இரண்டாவது பொதுமன்றக் கூட்டத்தில் இரு சபைகளும் ஒருங்கிணையும் / ஐக்கியப்படும் திட்டம் ஏற்கப்பட்டது. அதன் விளைவாக கி.பி.1908இல் தென் இந்திய ஐக்கிய சபை[15] (எஸ்.ஐ.யூ.சி.) உருவானது.

எஸ்.ஐ.யூ.சி.யில் சபையாளுகை முறைமையைச் சேர்ந்த கிறிஸ்தவர்கள் எண்ணிக்கையில் அதிகமிருந்தனர். திருச்சபை ஆளுகை முறைமையில் மூப்பராளுகையினர் பயன்படுத்திய ‘ பிரஸ்பிடெரி ’ (Presbytery), ‘ கிளாசிஸ் ’ (Classis) என்னும்

வார்த்தைகளுக்குப் பதிலாக சபையாளுகையினர் பயன்படுத்திய 'சபை மன்றம்' (சர்ச் கவுன்சில் / Church Council) என்னும் வார்த்தை பயன்பாட்டிற்கு வந்தது. எஸ்.ஐ.யூ.சி. யின் நிர்வாக அமைப்பில் 'பொது மன்றம்' (General Assembly ) ஒன்று இருந்தது. இதில் திருச்சபைகளினால் தெரிவுசெய்யப்பட்டிருந்த பிரதிநிதிகள் அங்கத்தினராக இருந்தனர். சபையாளுகை முறைமையினரின் விருப்பத்திற்கிசைய அப்பொது மன்றத்தின் அதிகாரங்கள் திருத்தி அமைக்கப்பட்டன. " உள்ளூர் சபைகளின் மேல், எவ்வித அதிகாரத்தையும் பொது மன்றம் மேற்கொள்ள முடியாது. ஆனால் உள்ளூர் சபை மன்றங்களின் ஒப்புதலோடு கொண்டுவரப்படுகின்ற காரியங்கள் பொது மன் றத்தினால் பரிசீலிக்கப்படும்."[16] அமெரிக்கன் போர்டின் யாழ்ப்பாண அருள்பணிக்களம் எஸ்.ஐ.யூ.சி.யுடன் இணைந்தது. புதிதாக உருவாக்கப்பட்ட எஸ்.ஐ.யூ.சி.யில் எட்டு பிராந்திய திருச்சபை மன்றங்கள் இருந்தன.

பாசல் அருள்பணிக் குழுவின் மலபார் பகுதி முதல் உலகப்போர் (கி.பி.1914-1918) காலத்தில் எஸ்.ஐ.யூ.சி.யின் பராமரிப்பின் கீழ் வந்தது. ஏனெனில், அதன் நற்செய்திப்பணியாளர்களில் பெரும்பான்மையோர் ஜெர்மனியைச் சேர்ந்தவராக இருந்த காரணத்தினாலும், ஜெர்மனி நாடு பிரித்தானியாவின், எதிரியாகக் கருதப் பட்டக் காரணத்தினாலும், அவர்கள் பாதுகாப்பில் வைக்கப்பட்டோ, அல்லது நாடு கடத்தப்பட்டோ இருந்தனர். அதனால் அத்திருப்பணிப்பகுதி 'அனாதை' ஆக்கப்பட் டிருந்தது. எனவே அது பின்பு எஸ்.ஐ.யூ.சி.யின் ஒரு பகுதியானது. கி.பி.1919 மார்ச் மாதத்தில் அது எஸ்.ஐ.யூ.சி.யின் மலபார் திருச்சபை மன்றமானது.

எஸ்.ஐ.யூ.சி.யின் உருவாக்கம் திருச்சபையின் பிரிவுகளிடையே (inter-denominationald) ஏற்பட்ட ஐக்கியத்தின் முதற்கனி எனலாம். திருச்சபைக் காரியங் களில் சுதந்திரமுடைய திருச்சபைகளின் ஐக்கியம் ( Federal Union ) என்பதற்கு அது ஒரு முன் உதாரணம்.

### வடஇந்திய ஐக்கிய சபை:

எஸ்.ஐ.யூ.சி. உருவானவுடன், வட இந்தியாவிலும் அத்தகைய முயற்சி எடுக்கப் பட்டது. இங்கும் சபையாளுகையினரும், மூப்பராளுகையினரும் இம்முயற்சியில் ஈடுபட்டனர். வெவ்வேறு நாடுகளிலிருந்து வந்து அருள்பணியில் ஈடுபட்டிருந்த பதினொன்று திருப்பணிக் குழுக்கள் அதில் கலந்துகொண்டன.[17] அதன் விளைவாக இறுதியில் கி.பி.1924இல் வட இந்திய சபை உருவானது. அதன் எல்லை வங்காளம் அஸ்ஸாமிலிருந்து, குஜராத்-பஞ்சாப் வரை இருந்தது. அது விரிந்த, பரந்துபட்ட நிலப்பரப்பில் கிறிஸ்தவர்களை உடைய திருச்சபையாக இருந்தது. " அதன் சட்ட, ஆட்சி அமைப்பு, மூப்பராளுகை முறைமையைச் சார்ந்ததாக இருந்தது. ஒவ்வொரு உள்ளூர் திருச்சபையும் அத்தகைய நிர்வாக அமைப்பைக் கொண்டிருந்தது. அதில் 25 சபை மன்றங்கள் இருந்தன. அவை குறிப்பிட்ட நிலப்பகுதியில் இருந்த உள்ளூர் திருச்சபைக் குழுக்களின் பிரதிநிதியாகச் செயல்பட்டன. ஒரு குறிப்பிட்ட மொழி

பேசப்பட்ட நிலப்பரப்பில் இருந்த சபை மன்றங்கள் சார்பாக ஏழு சினாடுகள் ( Synods) இருந்தன. அதற்கு மேல் ஒரு பொது மன்றம் (General Assembly) இருந்தது. ஒரு விரிவான விசுவாசக் கோட்பாடும் (Confession of Faith) இருந்தது. அதில் பிராட்டஸ்டென்ட் சீர்திருத்தத்தின் அடிப்படையில் உருவான அனைத்து விசுவாசக் கோட்பாடுகளின் முக்கிய அம்சங்கள் சேர்க்கப்பட்டிருந்தன. யூ.சி.என்.ஐ.யின் நம்பிக்கைக் கொள்கைகள் பன்னிரெண்டு பிரிவுகளாக விரிவாகக் கூறப்பட்டிருந்தன. "[18]

## லூத்தரன் சபைகளிடையே:

முதல் உலகப் போருக்குப்பின் லூத்தரன் திருப்பணிக் குழுக்கள் சுயாட்சி செலுத்துகிற லூத்தரன் திருச்சபைகளாக அமைத்துக் கொள்ளலாயின. உலகப் போரின் சமயத்திலே பிரித்தானிய அரசு தனக்கெதிரியாகச் செயல்பட்ட நாடுகளிலிருந்து வந்த அருள்பணியரை நாடு கடத்தியது அல்லது பாதுகாப்பில் வைத்திருந்ததே இதற்கான முக்கியக் காரணமாகும். இந்தியாவில் பணியாற்றிக்கொண்டிருந்த லூத்தரன் அருள்பணியரில் பெரும்பான்மையோர் ஜெர்மனியிலிருந்தோ, அதனைச் சார்ந்த நாடுகளிலிருந்தோ வந்திருந்தனர். இத்தகைய நிலையில் சுயாட்சியை அமைத்துக் கொண்ட ஒன்று, தமிழ் சுவிசேஷ லூத்தரன் திருச்சபை. (Tamil Evangelical Lutheran Church / T.E.L.C.). இது கி.பி.1919இல் உருவானது. முன்பு லைப்சிக் இவாஞ்சலிக்கல் லூத்தரன் அருள்பணியரும், சுவிடன் திருச்சபையின் அருள்பணியரும் உருவாக்கிய கிறிஸ்தவ சமுதாயமும், உள்ளூர் திருச்சபைகளும் இணைக்கப்பட்டு டி.இ.எல்.சி. உருவாக்கப்பட்டது.

கி.பி.1926இல் இந்தியாவின் வெவ்வேறு பகுதிகளில் உருவாக்கப்பட்டிருந்த ஒன்பது வெவ்வேறான லூத்தரன் திருச்சபைகள் ஒருங்கிணைந்து இந்தியாவில் இவாஞ்சலிக்கல் லூத்தரன் சபைகளின் குழுமம்[19] என்ற அமைப்பை உருவாக்கினர். திருச்சபைக் காரியங்களில் சுதந்திரமுடைய திருச்சபைகளின் ஐக்கியம் (Federal Union ) என்பதற்கு இது பிரிதொரு எடுத்துக்காட்டு. சுயாட்சியை அமைத்துக்கொண்ட திருச்சபைகளின் குழுமம் இது.

## தென்னிந்திய திருச்சபை உருவாக்கம்:

எஸ்.ஐ.யூ.சி. அதன் உருவாக்கக் காலத்திலிருந்தே தென்னிந்தியாவிலிருந்த பிற திருச்சபைகளுடன் ஐக்கியப்பட விரும்பியது. அத்தகைய நோக்கத்தை நிறைவேற்ற திருச்சபை ஐக்கியத்திற்கான கமிட்டி ஒன்றை அமைத்தது. அதன் கூட்டுனராக, பிரிஸ்பித்தீரிய / மூப்பராளுகை சபை பாரம்பரியத்தைச் சேர்ந்த ஜே.ஹெய்ச்.மக்ளீன் (J.H.Maclean) இருந்தார். அவர் உடனடியாக பல திருச்சபைப் பிரிவுகளுடன் தொடர்பு கொண்டார். வெஸ்லியன் மெத்தோடிஸ்டு திருச்சபையின் பதிலுரை ஆதரவாக இருந்தது. நெருங்கி இணைந்து செயல்படும் நோக்குடன் ஐக்கிய அமைப்பு ( Federation ) ஒன்று அமைக்கப்பட ஒரு தீர்மானத்தை அவர்கள் நிறைவேற்றியிருந்தனர்.

“கி.பி.1909 (எஸ்.ஐ.யூ.சி.) பொது குழுவிற்கு சமர்ப்பிக்கப்பட்ட தனது அறிக்கையில் திருச்சபை ஐக்கியத்திற்கான கமிட்டி இந்தியாவிலுள்ள கிறிஸ்தவ திருச்சபைகளிடையே குழுமம் ஒன்று அமைக்கப்பட ஆலோசனை தெரிவித்திருந்தது. ”[21] தன்னுடைய அறிக்கையில் ‘குழுமம்’ என்பதை அது விவரித்திருந்தது. “ தன்னுடன் கூட்டுறவு வைத்துக்கொள்ள விரும்பும் எந்தவொரு திருச்சபையின் அல்லது சங்கத்தின் பற்றுறுதி காரியங்களில் குழுமம் தலையிடாது. அதேபோன்று அனைத்து திருச்சபைகளும் மற்றவைகளின் திருப்பணிவிடை, ஒழுங்கு, அங்கத்தினராதல் ஆகியவற்றின் செல்லத்தக்க தன்மையை (validity) ஏற்க வேண்டும் ” என்பதே அது.[22] ஆனால் இம்முயற்சி கைக்கூடவில்லை.

குறிப்பிடத்தக்க மற்றொரு நிகழ்வு என்னவெனில் நற்செய்திப்பணியில் முன் நோக்கிச் செல்லும் இயக்கம்[23] என்பதின் கீழ் ஹெய்ச்.ஏ.பாப்லி ( H.A.Popley ) நடத்திய திருச்சபை ஒன்றிப்பு குறித்த இந்தியப் போதகர்கள் மாநாடு என்பதாகும். இக்கூட்டம் கி.பி.1919 ஏப்ரல் மாதம் 29-30 தேதிகளில் தரங்கம்பாடியில் நடைபெற்றது. இதில் ஆங்கிலிக்கன், வெஸ்லியன் மெத்தோடிஸ்டு, எஸ்.ஐ.யூ.சி. சுவிடிஸ் திருச்சபை ஆகியவற்றைச் சேர்ந்த 56 ஆயர்கள் கலந்து கொண்டனர். இவர்களில் ஆங்கிலிக்கன், எஸ்.ஐ.யூ.சி. பங்கேற்பாளர்கள் திருச்சபை ஐக்கியம் குறித்துக் கலந்தாலோசிக்க இசைவு தந்தனர். எனவே அவர்கள் தொடர்ந்து தரங்கம்பாடியிலேயே கி.பி.1919 மே மாதம் 1-2 தேதிகளில் கூடினர்.

அக்கூட்டத்தில் ஆங்கிலிக்கன் திருச்சபையைச் சேர்ந்த ஏழு பேரும், எஸ்.ஐ.யூ.சி.யைச் சேர்ந்த இருபத்தாறு பேரும், ஆக மொத்தமாக 33 பேரும் கலந்துக் கொண்டனர். ஹெய்ச்.ஏ.பாப்லி, ஷெர்வுட் எடி என்கிற இரண்டு இந்தியரல்லாத அருள்பணியரும் அதில் கலந்துகொண்டனர். அக்கூட்டத்தைப் பேராயர் வி.எஸ்.அசரியாவும், எஸ்.ஐ.யூ.சி.யின் வி.சந்தியாகுவும் இணைந்து நடத்திச் சென்றனர். ‘ தரங்கம்பாடி அறிக்கை ’ என்று பொதுவாக அறியப்படுகின்ற அறிக்கையை அக்கூட்டம் வெளியிட்டது. திருச்சபை ஐக்கியம் என்பது கடவுளின் சித்தம்; அது திருமறை சார்ந்தது; இந்தியாவிலுள்ள திருச்சபைப் பிரிவுகள் இந்தியர்களால் உருவாக்கப்பட்டவை அல்ல; அதை அவர்கள் அழியாமல் நிலைநிறுத்தவும் விரும்பவில்லை என அவ்வறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்தது. கி.பி.1888இல் லாம்பெத்தில் நடைபெற்ற ஆங்கிலிக்கன் திருச்சபைப் பேராயர்கள் வெளியிட்டிருந்த நாற்கட்ட விதி (Lambeth Quadrilateral) யின் அடித்தளத்தில் திருச்சபை ஐக்கியத்தின் அடிப்படை என்பதை வெளியிட்டனர். அது பின்வருமாறு:

1. மீட்பிற்குத் தேவையான அனைத்தையும் உடைய பழைய, புதிய ஏற்பாடுகளை உள்ளடக்கிய திருமறை;
2. திருத்தூதுவர் பற்றுறுதி அறிக்கையும், நிசேயா பற்றுறுதி அறிக்கையும்,

3. கிறிஸ்து தாமே நிறுவிய இரண்டு அருட்சாதனங்களான திருமுழுக்கு, திருவிருந்து;

4. வரலாறு சார்ந்த, ஆனால் உள்ளூருக்குப் பொருந்தக்கூடிய பேராயர் ஆளுகை முறைமை.[24]

தரங்கம்பாடி அறிக்கை வெளிடப்பட்டபின், திருச்சபை ஒன்றிப்புக் குறித்து விவாதிக்க, எஸ்.ஐ.யூ.சி., ஆங்கிலிக்கன் சபைகளின் பிரதிநிதிகள் கி.பி.1920இல் பெங்க ளூரில் கூடினர். அவர்கள் ஒரு கூட்டு அறிக்கையை வெளியிட்டனர். அவ்வறிக்கை, தரங்கம்பாடி அறிக்கையின் பேராயர் ஆளுகை முறையைக் குறித்த நிலைப்பாட்டை ஏற்றது. மேலும் ஐக்கியப்படப்போகின்ற திருச்சபையில் தன்னாட்சியின் தன்மை யையும் விவரித்திருந்தது.

எஸ்.ஐ,யூ.சி.யில் இருந்த முன்னாள் எல்.எம்.எஸ். உள்ளூர் திருச்சபைகளுக்கு கூட்டு அறிக்கையைக், குறிப்பாக பேராயர் ஆளுகை முறைமையைக் குறித்த அதன் நிலைப்பாட்டைப் புரிந்து கொள்வதிலும், ஏற்பதிலும் அதிகச் சங்கடம் இருந்தது. எனவே அதிகமான விவாதங்களும், கடிதப் போக்குவரத்தும் நிகழ்ந்தன. எஸ்.ஐ.யூ.சி.யின் திருவிதாங்கூர் திருச்சபை மன்றத்தைச் சேர்ந்த ஏ.ஹெய்ச்.லெக் (A.H.Legg) பல கேள்விகளை எழுப்பினார்.[25] இதற்கிடையில் திருச்சபை ஒன்றிப்புப் பேச்சு வார்த்தை களில் வெஸ்லியன் மெத்தோடிஸ்டு திருச்சபை கி.பி.1925இல் இணைந்தது.

கூட்டு அறிக்கையின் அடிப்படையில் தெரிவிக்கப்பட்ட கருத்துக்களை மனதிற்கொண்டு, கி.பி.1929இல் முதல் திருச்சபை ஐக்கியத் திட்டம் வெளியிடப்பட்டது. ஐக்கியப் பேச்சு வார்த்தைகளில் ஈடுபட்டிருந்த திருச்பைகளின் உள்ளூர் சபைகளுக்கு அவைகள் சுற்றில் விடப்பட்டன. வெஸ்லியன் மெத்தோடிஸ்ட்டு சபைகளுக்குத் திருச்சபை ஐக்கியத் திட்டத்தை ஏற்பதில் அதிக இடர்பாடுகள் இல்லை. எஸ்.ஐ.யூ.சி. யின் சில திருச்சபை மன்றங்களுக்கு அதைக் குறித்த அதிக சந்தேகங்கள் இருந் தன. பெறப்பட்ட விமரிசனங்கள் அடிப்படையில் திருச்சபை ஐக்கியத் திட்டம் ஆறு முறை திருத்தி அமைக்கப்பட்டது. வெஸ்லியன் மெத்தோடிஸ்டு கிறிஸ்தவர்கள் இருந்த சென்னை, மைசூர், திருச்சிராப்பள்ளி, ஹைதராபாத் வட்டங்கள் கி.பி.1943இல் ஐக்கியத் திட்டத்திற்கு ஒப்புதல் அளித்தன. இந்தியா, பர்மா, இலங்கை சபையின் (சி.ஐ.பி.சி. / Church of India, Burma and Ceylon ) ஆங்கிலிக்கன் பேராயங்களான சென்னை, திருவிதாங்கூர்-கொச்சின், திருநெல்வேலி, தோர்னகல் ஆகியவை அத்திட்டத்திற்கு கி.பி.1945இல் தங்களின் சம்மதத்தைத் தெரிவித்தன. தோர்னகல் பேராயத்தைச் சேர்ந்த நந்தியால் பகுதி திருச்சபை ஐக்கியத்திற்குள் வர விரும்பாத காரணத்தினால், அது சி.ஐ.பி.சி.யில் தொடர்ந்து செயல்பட அனுமதி வழங்கப்பட்டது. எஸ்.ஐ.யூ.சி.க்குக், குறிப்பாக எல்.எம்.எஸ். சபையாளுகை பகுதியில் இருந்த உள்ளூர் திருச்சபைகளிடமிருந்து ஒப்புதல் பெற, அதிகமான சிக்கல்கள் இருந்தன. எஸ்.ஐ.யூ.சி.யின் வட தமிழ் திருச்சபை மன்றம் (கோயம்புத்தூர்) திருச்சபை ஐக்கியத்

திட்டத்தை ஏற்க மறுத்ததால், அது தனித்துச் செயல்பட அனுமதிக்கப்பட்டது. எஸ்.ஐ.யூ.சி.யின் பிற திருச்சபை மன்றங்களிலிருந்த சில உள்ளூர் திருச்சபைகள் ஐக்கியத் திட்டத்தை எதிர்த்தக் காரணத்தால் அவைகள் ஒன்றிப்பில் இணைய வற்புறுத்தப்படவில்லை. எஸ்.ஐ.யூ.சி.யின் மற்ற மன்றங்கள் தங்களின் ஒப்புதலை கி.பி.1946இல் தந்தன.

திருச்சபை ஒன்றிப்புப் பேச்சு வார்த்தையின் தொடக்கத்திலிருந்தே, அமைய வுள்ள ஐக்கியச் சபை, பேராயர் ஆளுகை முறைமையைப் பின்பற்றும் என ஏற்கப் பட்டது. பேராயர் ஆளுகை முறைமையைக் குறித்த எண்ணங்கள் வெவ்வேறாக இருந்தாலும், பேச்சு வார்த்தையில் ஈடுபட்ட அனைத்துக் குழுவினரும் வரலாறு சார்ந்த பேராயர் ஆளுகை முறைமையை ஏற்பது என ஒத்துக்கொண்டிருந்தனர். அதே வேளையில் அதைக் குறித்த எந்தவொரு இறையியல் கொள்கையையும் முறைப்படுத்திக்கூற விரும்பவில்லை. பேராயர் ஆளுகை முறைமையை ஏற்ற திருச்சபையில், பேராயரால் அருள்பொழிவு செய்யப்படாத ஆயர்களை ஏற்பது எங்ஙனம் என்ற வினா எழுந்தது. அதற்கான சில ஆலோசனைகள் வழங்கப்பட்டன. அவையாவன: எளிய மறு அருள்பொழிவு; விரும்புகின்ற ஆயர்கள், வழிபாடொன் றில் பேராயரின் அதிகாரப் பத்திரம் பெறுதல்; ஆயர்கள் ஒவ்வொருவரும் மற்றவரிடம் திருப்பணிவிடையை ஒப்படைத்தல்; பிற்சேர்க்கை அருள்பொழிவு (Supplemental Ordination) ஆகியவை. ஆனால் இவ்வாலோசனைகள் அனைத்தும் நிராகரிக்கப் பட்டன. இறுதியில் அருள்பொழிவு பெற்ற அனைவரையும் அவர்கள் இருக்கின்ற வண்ணமாகவே ஆயர்களாக ஏற்பது எனவும், தென்னிந்தியத் திருச்சபையின் எந்தவொரு இடத்திலும் அவர்கள் பணியாற்றலாம் எனவும் முடிவானது. என்றாலும் ‘உறுதிமொழி’ ஒன்றும் தரப்பட்டது. அதென்னவெனில், ஒரு குறிப்பிட்ட உள்ளூர் திருச்சபை ஒரு குறிப்பிட்ட ஆயரை அவரின் அருட்பொழிவு அடிப்படையில் ஏற்க விரும்பவில்லையெனில் அவரை அங்கு வலுக்கட்டாயமாகத் திணிப்பதில்லை எனவும், முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு இக்கேள்வி மறுபரிசீலனை செய்யப்படலாம், ஏனெனில் முப்பது ஆண்டு காலத்தில் தென்னிந்தியத் திருச்சபையின் அனைத்து ஆயர்களும் பேராயரால் நியமிக்கப்பட்டிருப்பர்; அதனால் விதி விலக்குகளை அனுமதிக்கலாமா வேண்டாமா என சி.எஸ்.ஐ. முடிவெடுக்கலாம் எனத் தெரிவிக்கப் பட்டது. மேற்கூறப்பட்ட, தொடக்கக்கால கலவைப் பணியாளர்கள், உறுதிமொழி, மறு முடிவு எடுக்கப்படுமுன் முப்பதாண்டு இடைவெளிக் காலம் என்பவை சி.எஸ்.ஐ. யின் சிறப்பம்சங்களாகும்.

எனவே சி.எஸ்.ஐ. கி.பி.1947 செப்டெம்பர் 27ஆம் நாள் ஆரம்பித்து வைக்கப் பட்டது. எஸ்.ஐ.யூ.சி.யின் வடதமிழ் திருச்சபை மன்றம் (கோயம்பத்தூர்) கி.பி.1950இல் சி.எஸ்.ஐ.யுடன் இணைந்தது. அது சி.எஸ்.ஐ. கோயம்பத்தூர் பேராயமாக நிறுவப் பட்டது. கனரா பகுதியில் இருந்த பாசல் மிஷன் கி.பி.1958இல் சி.எஸ்.ஐ.யுடன் சேர்ந்தது. மலபார் பகுதியிலிருந்த சி.எஸ்.ஐ. அங்கத்தினர்களில் ஒரு குழுவினர் கி.பி.1968இல்

சி.எஸ்.ஐ.யிலிருந்து விலகி, மலபார் பாசல் ஜெர்மன் மிஷன் திருச்சபை என்ற பெயரில் ஒரு திருச்சபையை நிறுவினர். ஆனால் பின்பு கி.பி.2003 ஜனவரி 26 அன்று அவர்கள் மீண்டும் சி.எஸ்.ஐ.யுடன் இணைந்தனர்.

தொடக்கத்திலிருந்தே சி.எஸ்.ஐ. தென்னிந்தியாவிலிருந்த பிற திருச்சபைகளுடன் இணையப் பேச்சுவார்த்தைகள் நடத்தியது. கி.பி.1959இல் தென்னிந்தியாவிலுள்ள லூத்தரன் சபைகளுடன் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கியது. ஆனால் அது கி.பி.1975இல் முறிவடைந்தது.

உறுப்பிணைவு ஐக்கியத்திற்கு சி.எஸ்.ஐ. ஓர் முன் மாதிரி.

வடஇந்தியத் திருச்சபை உருவாக்கத்திற்குப்பின், சி.எஸ்.ஐ. அதனுடன் திருவிருந்து உறவையும், ஆயர்கள் பரிமாற்றத்தையும் ஏற்றது. கி.பி.1975இல் சி.எஸ்.ஐ., சி.என்.ஐ., மார்தோமா திருச்சபை ஆகியவை தங்களிடையே பேச்சு வார்த்தைகளைத் தொடங்க முடிவெடுக்கப்பட்டது. அதன் விளைவாக இணைப்புக் குழு ஒன்று உருவாக்கப்பட்டது. அதன் முதல் அமர்வு கி.பி.1978இல் நடைபெற்றது. இந்தியாவில் ஒரே திருச்சபை அமைக்கப்பட வேண்டும், அதன் பெயர் 'பாரத கிறிஸ்தவ திருச்சபை' என இருக்க வேண்டும் என்பதே அம்முயற்சியின் நோக்கம். ஆனால் அது இன்னமும் கைகூடவில்லை. கி.பி.2000 முதல் இணைப்புக் குழுவின் பெயர் மாற்றப்பட்டு, அது தற்பொழுது 'இந்திய திருச்சபைகளின் கூட்டுறவு'[26] என அறியப்படுகிறது. திருச்சபை ஐக்கியத்தில் இதனைத் தோழமை உறவிற்கான[27] முன்மாதிரி என்பர்.

## வடஇந்தியத் திருச்சபை: [28]

வடஇந்திய ஐக்கியத் திருச்சபை (யூ.சி.என்.ஐ.) என்பது கி.பி.1924இல் உருவாக்கப்பட்டது. அதில் சபையாளுகை முறைமையையும், மூப்பராளுகை முறைமையையும் சேர்ந்த பதினொரு அருள்பணிக் குழுக்கள் இணைந்திருந்தன. எஸ்.ஐ.யூ.சி. யைப் போன்று, யூ.சி.என்.ஐ.யும் பரந்துபட்ட திருச்சபை ஐக்கியத்திற்குள் செல்ல முற்பட்டது. அதன் விளைவாக பிரித்தானிய வெஸ்லியன் மெத்தோடிஸ்டுகள் ஒரு வட்ட மேசை (வ.மே.) மாநாடு நடத்தப்பட ஆலோசனை வழங்கினர். அத்தகைய மாநாட்டிற்கு திருச்சபை ஐக்கியம் தொடர்பான விவாதத்தில் கலந்துகொள்ள விருப்பமுடைய, ஒத்த சிந்தையுடைய பிற திருச்சபைப் பிரிவுகள் அழைக்கப்படலாம் எனவும் தெரிவிக்கப்பட்டது. அவ்வண்ணம் முதல் வ.மே. மாநாடு லக்னோவிலுள்ள லால் பாஹ் பெண்கள் பள்ளிக்கூடத்தில் கி.பி.1929 ஏப்ரல் மாதம் 10-11 தேதிகளில் நடைபெற்றது. ஆஸ்திரேலிய கிறிஸ்துவின் திருச்சபைகள் அருள்பணிச் சங்கம், ஆஸ்திரேலிய மெத்தோடிஸ்டு திருச்சபை, பிரித்தானிய வெஸ்லியன் மெத்தோடிஸ்டு திருச்சபை, அமெரிக்கப் பேராயராளுகை மெத்தோடிஸ்டு திருச்சபை, யூ.சி.என்.ஐ. ஆகியவைகளின் பிரதிநிதிகள் அக்கூட்டத்தில் பங்கேற்றனர். ஆங்கிலிக்கன்

சி.ஐ.பி.சி.யின் ஒரு அங்கத்தினர் பார்வையாளராகக் கலந்து கொண்டார். இம்மாநாட்டில் கலந்து கொண்ட பிரதிநிதிகள் தங்கள் தங்கள் திருச்சபையின் ஆட்சி அமைப்பு, சாக்கிரமெந்துகள், கொள்கை நியமங்கள், பிற நாடுகளுடன் உறவு ஆகியவற்றைச் சொல்லக் கேட்டு, அவைகள் பதிவு செய்யப்பட்டன. இம்மாநாடு, விசுவாசம்-அமைப்பு கூடுகை (Faith and Order Conference) போன்று நடத்தப்பட்டது. தொடர்ந்து பேச்சு வார்த்தைகளை நடத்த அதில் பங்கேற்றோர் முன்மொழிந்தனர்.

வ.மே. மாநாட்டின் இரண்டாம் கூட்டம் டெல்லியில் கி.பி.1930 நவம்பர் 18 முதல் 20 வரை நடைபெற்றது. இதில் முதல் மாநாட்டில் கலந்து கொண்ட திருச்சபைகளுடன் சகோதரர் திருச்சபையும், நண்பர்கள் சங்கமும்[29] இணைந்து கொண்டன. சி.ஐ.பி.சி.(ஆங்கிலிக்கன்) தனது அதிகாரப்பூர்வ பிரதிநிதியை அனுப்பியது. இவர்களைத் தவிர, பஞ்சாபில் பணியாற்றிக்கொண்டிருந்த ஐக்கிய பிரஸ்பித்திரிய அருள்பணிக்குழு சார்பாகப் பார்வையாளர்களும், தென்னிந்தியாவின் திருச்சபை ஐக்கிய இணைவு குழு சார்பாக இரண்டு பிரதிநிதிகளும் கலந்துகொண்டனர். இவ்விதம் வடக்கிற்கும், தெற்கிற்கும் ஏற்பட்ட தொடர்பின் விளைவாக, திருச்சபை ஐக்கியம் குறித்த அனைத்திந்திய மாநாடு ஒன்று நாக்பூரில் கி.பி.1931 நவம்பர் 7 முதல் 9 வரை நடைபெற்றது. இதில் வடக்கிலிருந்து ஐந்து பிரதிநிதிகளும், தெற்கிலிருந்து நான்கு பிரதிநிதிகளும் கலந்து கொண்டனர். அக்கூட்டம் தோர்னகல் பேராயர் வி.எஸ். அசரியாவின் தலைமையின் கீழ் நடைபெற்றது. இரண்டாம் வ.மே.மாநாடு கிறிஸ்தவ சேவை, வழிபாடு, நற்செய்திப்பணி ஆகியவற்றில் இணைந்து செயல்பட திட்டவட்டமான நடவடிக்கை எடுக்கக் கேட்டுக்கொண்டது. அத்துடன் வெவ்வேறு திருச்சபைப் பாரம்பரியத்தின் கீழ் செயல்படும் திருச்சபைப் பணியாளரையும், அவர்களது பணிவிடைகளையும் ஒன்றுபடுத்துவது எவ்விதம் என்ற வினாவை விவாதிப்பதின் தேவையை அம்மாநாடு உணர்த்தியது. திருச்சபை அமைப்பு, ஆளுகை குறித்த அடிப்படைக் கொள்கைகளில் இணக்கம் ஏற்படுவதின் அவசியத்தையும் வற்புறுத்தியது.

இரண்டாம் வ.மே.மாநாடு தன்னுடையப் பணியைத் தொடர பணித்தொடர்ச்சி குழு ( Continuation Committee / C.C ) ஒன்றை நியமித்தது. இந்த சி.சி. கி.பி.1935திலும் 1936ரிலும் கூடி 'பேச்சு வார்த்தைக்கான அடிப்படை' ஒன்றைத் தயாரித்தது. திருத்தி அமைக்கப்பட்டபின் அது கி.பி.1937இல் லக்னோவில் கூடிய மூன்றாவது வ.மே. மாநாட்டில் ஏற்கப்பட்டது. கூடுதல் திருத்தங்களும், விரிவாக்கங்களும் செய்யப்பட்ட பின், சி.சி. அதனை கி.பி.1939 ஜுலையில் மீண்டும் வெளியிட்டது. இவைகள் நடந்துகொண்டிருந்த வேளையில், முந்தையக் கூட்டங்களில் கலந்துகொண்ட சில திருச்சபைகள் பேச்சுவார்த்தைகளிலிருந்து விலகிக்கொண்டன. என்றாலும் யூ.சி.என்.ஐ., சி.ஐ.பி.சி., பிரித்தானிய, ஆஸ்திரேலிய மெத்தோடிஸ்டு திருச்சபைகள், பாப்திஸ்து திருச்சபைகள், தெற்காசியா மெத்தோடிஸ்டு திருச்சபை (எம்.சி.எஸ்.ஏ.; Methodist Church in Southern Asia / முன்பு அமெரிக்க பேராயராளுகை மெத்தோடிஸ்டு

திருச்சபை எனக் குறிப்பிடப்பட்ட ஒன்று) ஆகியவை ஐக்கியப் பேச்சு வார்த்தைகளைத் தொடர்ந்தன.

இதே காலக் கட்டத்தில் யூ.சி.என்.ஐ.க்கும், எம்.சி.எஸ்.ஏ.க்கும், பாப்திஸ்து திருச்சபையினருக்கும் இடையே, மேற்கூறப்பட்டதைப் போன்ற, திருச்சபை ஐக்கியப் பேச்சு வார்த்தைகள் நடைபெற்றன. அவர்கள் இணைவு மன்றம் ( Joint Council ) ஒன்றை அமைத்தனர். அது கி.பி.1940இல் தன்னுடைய ஐந்தாம் அமர்விற்குப்பின், திருச்சபை ஐக்கியத் திட்டமொன்றை வெளியிட்டது. சில திருத்தங்களுக்குப் பின் அது மீண்டும் கி.பி.1942இல் வெளிவந்தது. அது பெருமளவிற்கு பிரஸ்பித்தீரியத் தன்மைகளைக் கொண்டிருந்தது. இணைவு மன்றம் காரணமாகவும், வேறு சில நிச்சயமின்மைகள் காரணமாகவும் வ.மே.மாநாடு செயல்படுவதில் தயக்கம் ஏற்பட்டது. கி.பி.1940திலிருந்து சிறிது காலத்திற்கு பாப்திஸ்து திருச்சபைகள் வட்ட மேசை மாநாட்டை விட்டு விலகி நின்றன. என்றாலும், கி.பி.1941 மார்ச் மாதத்தில் நடந்த அதன் கூட்டத்தில், (வ.மே.மாநாட்டின்) சி.சி. திருச்சபை ஐக்கியப் பேச்சு வார்த்தை அடிப்படையை (Basis of Negotiation ) விரிவாக்கி, அதனை வ.மே.மாநாட்டின் நான்காவது கூட்டத்தில் சமர்ப்பித்தது. இக்கூட்டம் கி.பி.1941 ஜுலை 31 – ஆகஸ்டு 1 நடைபெற்றது. சி.ஐ.பி.சி, எம்.சி.எஸ்.ஏ.வின் பேராய முறைமைகளை ஒன்றுபடுத்தும் ஆலோசனை அதில் முன்மொழியப்பட்டிருந்தது, ஒரு பேராயரின் தலையின் மேல் மற்றொரு பேராயர் தன் கைகளை வைத்து ஏற்கும் முறையைப் பின்பற்றக் கோரப்பட்டது.

கி.பி.1947 ஜுலை மாதத்தில் வ.மே.மாநாட்டின் ஐந்தாவது கூட்டம் அலகாபாத்தில் நடைபெற்றது. பேச்சுவார்த்தைகளில் ஈடுபட்டுள்ள திருச்சபைப் பணியாளர்களை ஜெபத்துடன் ஒரு பணியாளர் மற்றொரு பணியாளரின் தலையின் மேல் கை வைத்து அதன் மூலம் பணிவிடைகளை ஒருமைப்படுத்தும் ஆலோசனை அக்கூட்டத்தில் ஏற்கப்பட்டது. வ.மே.மாநாட்டில் கலந்து கொண்ட நான்கு திருச்சபைகளும் இதனை அங்கீகரித்தன.

எனவே ' பேச்சு வார்த்தைக் கமிட்டி' ஒன்று உருவாக்கப்பட்டது. அதன் முதல் கூட்டம் கொல்கொத்தாவில் கி.பி.1951 மார்ச் மாதம் 27 முதல் 30 வரை நடை பெற்றது. இச்சமயத்தில், பிரிந்து சென்றிருந்த பாப்திஸ்து சபைகள் மீண்டும் இணைந்தன. தங்களின் பிரதிநிதிகளை அனுப்பியிருந்தன. பேச்சுவார்த்தைக் கமிட்டியின் கூட்டங்கள் கி.பி.1952யிலும், 1953யிலும் நடைபெற்றன. அதன் விளைவாக, திருத்தப்பட்ட சபை ஐக்கியத் திட்டம் ஒன்று கி.பி.1954இல் வெளிவந்தது. தொடர்ந்து வந்த மூன்று ஆண்டுகளில், அத்திட்டத்தில், குறிப்பாக திருச்சபை அங்கத்தினராதல், திருச்சபைப்பணிவிடையை ஒன்றுபடுத்துதல் ஆகியவை குறித்துப் பல விளக்கங்கள் கொடுக்கப்பட்டன, மாற்றங்கள் செய்யப்பட்டன. பாகிஸ் தானில் இருந்த திருச்சபைகளின் வேண்டுகோளுக்கிணங்க, ஒன்றோடொன்று திருவிருந்து தொடர்புடைய, அதே வேளையில் ஒரே பொதுவான அடிப்படையைக்

கொண்ட இரண்டு சுயாதீனமான ஐக்கிய சபைகள் உருவாக்கத்திற்கு ஒப்புதல் தரப்பட்டது. அதன் அடிப்படையில் திருச்சபை ஐக்கியத்திட்டத்தின் முதல் பகுதியில் ஐக்கியத் திருச்சபையின் அடிப்படை அமைப்புச் சட்டங்களும், இரண்டாம் பகுதியில் வெவ்வேறு திருச்சபைகள் ஐக்கியத் திருச்சபைக்குள் நுழையும் முறையும் (Transitional procedures), திருச்சபை ஐக்கியத்தைத் துவக்கும் தொடக்க இறை வழிபாட்டு முறைமையும் இருக்கும் வண்ணம் திருத்தி அமைக்கப்பட்டது. எனவே பேச்சு வார்த்தைக் கமிட்டி கி.பி.1957 ஏப்ரல் மாதத்தில் மத்திய பிரதேசத்திலுள்ள பச்மார்கி (Pachmarhi) என்னுமிடத்தில் கூடி, திருத்தப்பட்ட மூன்றாவது திருச்சபை ஐக்கியத் திட்டத்தை ஏற்றுக்கொண்டது. அதை திருச்சபை ஐக்கியப் பேச்சு வார்த் தையில் ஈடுபட்டுள்ள திருச்சபைகளிடம் சமர்ப்பிக்க முடிவெடுத்தது. இதற்கிடையில் சகோதரர் திருச்சபையும், கிறிஸ்துவின் சீடர்கள் என்னும் திருச்சபையும் பேச்சு வார்த்தைகளில் கலந்துகொண்டனர். எனவே வ.மே.மாநாட்டின் உறுப்பினர் எண்ணிக்கை ஏழாக உயர்ந்தது. பேச்சு வார்த்தைக் கமிட்டியின் அடுத்தக் கூட்டம் கி.பி.1959 இறுதியில் ஜபல்பூரில் நடைபெற்றது. கி.பி.1958இல் நடைபெற்ற லாம்பெத் கூடுகை சமர்ப்பித்திருந்த சில ஆலோசனைகளின் பின்னணியத்தில் ஜபல்பூர் கூட்டம் நடைபெற்றது. அதன்படி ஐக்கியத் திருச்சபையின் தொடக்க இறைவழிபாட்டு முறைமையில் சில சிறு சிறு மாற்றங்களைச் செய்து திருத்தப்பட்ட வழிபாட்டு முறைமையாக அதனை வெளியிட்டது. வெளியிடப்பட்டிருந்த திருச்சபை ஐக்கியத் திட்டத்தில் மேற்கொண்டு வேறு எவ்வித மாற்றங்களையும் செய்வதில்லை யெனவும் ஜபல்பூர் கூட்டம் முடிவெடுத்தது.

தொடர்ந்து வந்த ஆண்டுகளில் திருச்சபை ஐக்கியத் திட்டத்தின் மேல் ஓட்டெடுப்புகள் நடைபெற்றன. யூ.சி.என்.ஐ., பிரித்தானிய, ஆஸ்திரேலியன் மெத்தோடிஸ்டு திருச் சபைகளில் ஐக்கியத்திட்டதிற்குச் சாதகமான வாக்குகள் கிடைத்தன. எம்.சி.எஸ்.ஏ., சி.ஐ.பி.பீ.சி.,[30] சகோதரர் திருச்சபைகளில் அத்திட்டத்தில் இணையத் தேவையான பெரும்பான்மை வாக்குகள் கிடைக்கவில்லை, பாப்திஸ்து திருச்சபைகளின் வாக்குகள், பெருமளவிற்குப் பிளவுபட்டிருந்தன. கி.பி.1963ன் தொடக்கத்திலேயே ஐக்கியத் திட்டத்தில் மேற்கொண்டு திருத்தங்கள் செய்யப்பட வேண்டியதின் அவசியம் உணரப்பட்டது, அதற்குக் கிடைத்த எதிரிடையான வாக்குகளும், தெரிவிக்கப்பட்ட விமரிசனங்களுமே அதற்கானக் காரணங்களாகும். வட்ட மேசை மாநாட்டின் செயற்குழு, பொதுவான ஒப்புதலின் பேரில் ஐக்கியத்திட்டத்தை மறுபரிசீலனை செய்ய முடிவெடுத்து, அதற்கான நடவடிக்கைகளை எடுக்க முற்பட்டது. சி.சி.யினிடம் அப்பணி ஒப்படைக்கப்பட்டது. கி.பி.1964 பெப்ருவரியில் நாக்பூரில் கூடிய சி.சி. அனைத்தையும் மறுஆய்வு செய்தபின், வட இந்தியாவிற்கான திருச்சபை ஐக்கியத் திட்டத்தின் நான்காம் பதிப்பை வெளியிட்டது. அது கி.பி.1965இல் ஏற்கப்பட்டது.

முடிவில் கி.பி.1970 நவம்பர் 29ஆம் நாள் நாக்பூர் சகல தூயவர்கள் பேரால யத்தில் சி.என்.ஐ. தொடக்கம் பெற்றது. கடைசி நேரத்தில் எம்.சி.எஸ்.ஏ. ஐக்கியத்தில்

சேர விரும்பாமல், விலகிக்கொண்டது. சி.என்.ஐ.யில் இணைந்த ஆறு திருச்சபை களாவன: 1. வட இந்திய பாப்திஸ்து திருச்சபைகளின் மன்றம் 2. இந்திய சகோதரர் திருச்சபை 3. கிறிஸ்துவின் சீடர்கள் திருச்சபை 4. இந்தியத் திருச்சபை (ஆங்கிலிக் கன்) 5. பிரித்தானிய, ஆஸ்திரேலிய மெத்தோடிஸ்ட்டு திருச்சபை 6. யூ.சி.என்.ஐ.[31]

சி.என்.ஐ.யின் அமைப்பு சட்ட விதிமுறைகள் சி.எஸ்.ஐ.யினுடையதை ஒத்துள்ளது. அதே வேளையில் இலங்கை திருச்சபை ஐக்கியத் திட்டத்தின் சில சிறப்பம்சங்களையும் உள்ளடக்கியுள்ளது. ஐக்கியப்பட்டத் திருச்சபைகளின் பணியாளர்களையும், திருப்பணிவிடைகளையும் ஐக்கியப்படுத்தியதே சி.என்.ஐ.யின் மிகவும் சிறப்பான அம்சமாகும். சி.என்.ஐ. குழந்தைத் திருமுழுக்கையும், வயது வந்தோர் திருமுழுக்கையும் ஏற்கிறது; என்றாலும் ஒரு திருமுழுக்கை மட்டுமே அனுமதிக்கிறது.

## முடிவுரை:

உறுப்பிசைவு திருச்சபை ஐக்கியத்தில் அதிக அளவு விட்டுக்கொடுத்தல் உள்ளது. திட்டவட்டமாகவே அது ஒரு நெடிய செயல்முறை மட்டுமல்லாமல், வேதனையுண் டாக்கும் ஒன்று கூட, எனவே கி.பி.1947இல் உருவான தென்னிந்தியத் திருச் சபையும், கி.பி.1970இல் உருவான வட இந்தியத் திருச்சபையும் அற்புதங்களாகக் கருதப்படுகின்றன. இருந்தாலும் அனைத்துச் சிக்கல்களையும் தீர்த்துவைத்து விட்டதாக அவைகள் கூறிக்கொள்வதில்லை. கருத்திலும் உறவிலும் முதிர்ச்சியை யும், முழுமையையும் நோக்கி அவை வளர்கின்றன.

சி.எஸ்.ஐ.யின் உருவாக்கம் வட இந்தியா, இலங்கை, நைஜீரியா, ஈரான் ஆகிய நாடுகளிலுள்ள திருச்சபை ஐக்கியத் திட்டங்களுக்கு உந்துதலையும், ஊக்கத்தையும் தந்துள்ளது. சி.எஸ்.ஐ.யின் திருவிருந்து வழிபாட்டு முறைமை அனேகரின் பாராட்டுதலைப் பெற்றுள்ளது. அதனால் கிறிஸ்தவ பல்சபைக் கூட்டங்களில் அது பரவலாகப் பயன்படுத்தப்படுகின்றது.

இந்நாட்களில் உறுப்பிசைவு திருச்சபை ஐக்கியத்திற்கு அதிக வரவேற்பில்லை. ஆனால் மன்றம் சார்ந்த ஐக்கியமோ (Conciliar Union), சுதந்திரத்துடன் கூடிய ஐக்கியமோ (Federal Union) விரும்பப்படுகிறது.

வடகிழக்கிந்தியாவில் திருச்சபை ஐக்கியப் பேச்சு வார்த்தைகள் கி.பி.1963இல் தொடங்கப்பட்டன. அதன் விளைவாக கி.பி.1970இல் திருச்சபை ஐக்கியத் திட்டமொன்று வெளியிடப்பட்டது. ஆனால் பல்வேறு காரணங்களினால் அங்கு திருச்சபை ஐக்கியம் பூரணப்படவில்லை.[32] மலபார் சீரிய வைதீக திருச்சபையின் பிரதிநிதிகளும், மலபார் மார்தோமா சீரிய சபையின் பிரதிநிதிகளும் அதிகாரப்பூர்வமற்ற முறையில் கி.பி.1960களின் பிந்தைய ஆண்டுகளிலிருந்து பேச்சு வார்த்தையில் ஈடுபட்டனர். அதன் விளைவாக 'பொதுவான அறிக்கை'

ஒன்றை கி.பி.1971இல் வெளியிட்டனர்.[33] மலபார் மார்தோமா சீரியன் திருச்சபையும், இந்தியாவிலுள்ள லூத்திரன் சபைகளின் ஐக்கியமும் கி.பி.1995 முதல் பேச்சுவார்த்தையில் ஈடுபட்டிருந்தன. தங்களிடையே நெருங்கிய தோழமையையும் கூட்டுறவையும் ஏற்படுத்துவதற்கான வழிமுறைகளைக் கண்டறிய ஒழுங்காகக் கூடி வந்தனர். அதன் விளைவாக 'ஏற்கப்பட்ட அறிக்கை' என்ற ஒன்றை வெளியிட்டனர். அதில் திருச்சபையின் கொள்கைகள், பற்றுறுதிகள் ஆகியவற்றில் தங்களிடையே உள்ள ஒற்றுமைகளையும், ஏற்புடைமைகளையும் வெளிப்படுத்தியிருந்தனர். இதன் நோக்கம் இந்தியத் திருச்சபைகளிடையே ஐக்கியத்தையும், சாட்சி பகருதலையும் வளர்ப்பதாகும்.[34]

இயேசு கிறிஸ்துவின் இறைவேண்டலான " அவர்களெல்லோரும் ஒன்றாக இருக்கும் வண்ணம்" ( யோவான் 17:21 ) என்பதை நிறைவேற்றும் வண்ணம், திருச்சபை ஐக்கிய முயற்சிகள் இந்தியாவில் தொடர்கின்றன.

## *End Notes :*

1 Bengt Sundkler, **Church of South India : The Movement Towards Union. 1900-1947** p.21.; cf. Ruth Rouse and Stephen C. Neill, **A History of the Ecumenical Movement 1517-1948,** Vol.I., pp.473-476.

2 M.K.Kuriakose, **History of Christianity in India :Source Materials,** p.82; Ruth Rouse and Stephen C.Neill, **Ibid.,** p.355.

3 Bengt Sundkler, **Op.cit.,**p.25.

4 **Ibid.** pp.30-31.

5 **Ibid.** p.31.

6 **Ibid.** pp.31-33.

7 'Sattampillai' – A Tamil word which literally means 'Teacher'.

8 Hindu Church of Lord Jesus.

9 cf. Kaj Baago, **Pioneers of Indigenous Christianity.**

10 Bengt Sundkler, **op.cit.** p.28.

11 **Ibid.,** p.38.

12 The District Council of the London Mission Churches.

13 **Ibid.,** p.40.

14 **Ibid.,** p.40.

15 **Ibid.,** p.42.

16 This was the name originally taken by the Presbyterians in 1901 from whom it was passed on to the United Church (SIUC) of 1908.

17 Bengt Sundkler, **op.cit.,** p.44.

18 The following were the Eleven Missions : The Church of Scotland, the American Presbyterian, the Canadian Presbyterian, the New Zealand Presbyterian, the English Presbyterian, the Irish Presbyterian, the Welsh Presbyterian, the American Evangelical and Reformed Church, the American Marathi Mission of the American Board of Commissioners for Foreign Mission, the London Missionary Society, and the United Church of Canada. D.A.Christadoss, **A short History of the Ecumenical Movement**

(Tamil) T.T.B.C., 1962. p. 361.; Ruth Rouse and Stephen C.Neill, **A History of the Ecumenical Movement 1517-1948,** Vol.I., p.495.

[19] The Plan of Church Union in North India and Pakistan (pp.38-42) cited in C.B.Firth, **An Introduction to Indian Church History,** p.239.

[20] Federation of Evangelical Lutheren Churches in India.

[21] Federation of Christian Churches in India.

[22] Bengt Sundkler, **op.cit** p.45.

[23] **Ibid.** p.45.

[24] Evangelistic Forward Movement.

[25] M.K.Kuriakose, **op.cit.,**pp.317-319.

[26] **Ibid.,**

[27] Communion of Churches in India.

[28] Koinonia Model.

[29] cf.Dhirendra Kumar Sahu, **United and Uniting : A Story of the Church of North India,** Delhi : ISPCK, 2001; **Plan of Church Union in North India and Pakistan, 1965.**

[30] The Church of the Brethren and the Society of Friends

[31] With the creation of Pakistan as a new nation in 1947, the Church of India, Burma and Ceylon (CIBC) came to be known as the Church of India, Pakistan, Burma and Ceylon. Still later, each country had its own Anglican Church, and the one in India came to be known as the Church of India.

[32] The Council of the Baptist Churches in Northern India, the Church of the Brethren in India, the Disciples of Christ, the Church of India (Anglican), the Methodist Church (British and Australian conferences), and the United Church of Northern India.

[33] cf. O.L. Snaitang, **A History of Ecumenical Movement : An Introduction.** pp. 156-174.

[34] M.K. Kuriakose, **op.cit**. pp. 423-425.

[35] **Agreed Statement of the Mar Thoma Syrian Church of Malabar and the United Evangelical Lutheran Church in India.** (Typed Script, no date).

# BIBLIOGRAPHY

## *Books:*


Baago, Kaj. **A History of the National Christian Council of India.** Nagpur: NCC, 1965.

Baago, Kaj. **Pioneers of Indigenous Christianity.** Madras: CLS, 1969.

Bosch, David J. **Transforming Mission: Paradigm Shifts in Theology of Mission.** New York: Orbis Books, 1991.

Christadas, D.A. **A Short History of the Ecumenical Movement** (Tamil). T.T.B.C, 1962.

Downs, F.S. **History of Christianity in India.** Vol. V. , Part 5, Bangalore: The Church History Association of India, 2003.

Firth, C.B. **An Introduction to Indian Church History.** Delhi: 1SPCK, 1998.

Gibbs, M.E. **The Anglican Church in India. 1600- 1970.** Delhi: 1SPCK, 1972.

Gladstone, J.W. **Protestant Christianity and People's Movements in Kerala: 1850-1936.** Trivandrum: Kerala United Theological Seminary, 1984.

Hrangkhuma, F.(ed.) **Christianity in India: Search for Liberation and Identity.** Delhi: 1SPCK, 1998.

Jeyakumar, D. Arthur. **Christians and the National Movement.** Calcutta: Punthi Pustak, 1999; Bangalore: Centre for Contemporary Christianity 2010.

Keay, F.E. **A History of the Syrian Church in India.** Madras: SPCK, 1950.

Kuriakose, M.K.(ed.) **History of Christianity in India: Source Materials.** Delhi: ISPCK;2003.

Mundadan, A.M. **History of Christianity in India.** Vol. I. Bangalore: The Church History Association of India, 2003.

Neill, Stephen C. **The Story of the Christian Church in India and Pakistan.** Delhi: ISPCK, 1972.

Paul, Rajaiah D. **Triumphs of His Grace.** Madras: CLS. 1967.

Perumalil, H.C. & E.R. Hambye (eds.) **Christianity in India: A History in Ecumenical Perspective.** Alleppy: Prakasam Publicatons, 1972.

Pickett, J.Waskom. **Christian Mass Movements in India.** New York: Abington, 1933.

Podipara, P.J. **The Thomas Christians.** Bombay: St.Paul Publications, 1970.

Richter, Julius. **A History of Missions in India.** New York: Flemming H. Revell, 1908.

Rouse, Ruth & Stephen C. Neill. **A History of the Ecumenical Movement 1517-1948.** Vol.I., Philadelphia: The Westminster Press, 1954.

Sahu, Dhirendra Kumar, **United and Uniting: A Story of the Church of North India.** Delhi: ISPCK, 2001.

Sitaramayya, B. Pattabi. **History of the Indian National Congress,** Vol. I. (Reprint) Bombay: 1946.

Snaitang, O.L. **A History of Ecumenical Movement: An Introduction.** Bangalore: BTESSC & SATHRI, 2006.

Sundkler, Bengt. **Church of South India: The Movement Towards Union 1900-1947.** London: SPCK; 1954.

Thomas P. **Christians and Christianity in India and Pakistan.** London: George Allen and Unwin, 1954.

**Magazines:**

**Harvest Field,** Vol. IX, March 1889, p. 289.

**Harvest Field,** Third Series, Vol. I, March 1890.

**The Young Men of India,** Vol. XIX, No.11, November 1908.

**The Young Men of India,** Vol. XX, No.1; January 1909.

## *Articles:*

Jeyakumar, D. Arthur. "Amy Carmichael of Dohnavur 1867- 1951", **Indian Church History Review**, Vol. XXXVI, No.1, June 2002.

Jeyakumar, D. Arthur. "Paul Ramasamy and the National Movement", **Dharma Deepika**, December 1997.

Mundadan, A. Mathias, "The Tradition about the Indian Apostolate of St.Thomas and the tomb of Mylapore, **"Indian Church History Review"**, June 1969.

Oddie, Geoff. A. "Indian Christians and the National Congress, 1885-1910" **Indian Church History Review**, Vol. II, No. I, June 1968.

**Unpublished:**

**Agreed Statement of The Mar Thoma Syrian Church of Malabar and the United Evangelical Lutheran Church in India** (typed Script, no date)

# ஆசிரியரைப் பற்றி...



அருள்திரு அறிவர். D. ஆர்தர் ஜெயக்குமார் கி.பி.1944இல் தஞ்சாவூரில் பிறந்தார். திருச்சிராப்பள்ளியில் கல்வி கற்றார். அங்குள்ள தூய ஜோசப் கல்லூரி வழியாக, சென்னைப் பல்கலைக் கழகத்தின் இளங்கலை / பி.ஏ (பொருளாதாரம்) பட்டத்தைப் (1963) பெற்றார். பின்பு இறையியல் கல்வி பயிலத் தொடங்கினார். செராம்பூர் பல்கலைக் கழகத்தின் இளம் தேவியல் (B.D.1966), முதுநிலை இறையியல் (கிறிஸ்தவ வரலாறு) (M.Th.1973), (அறிவர் D.Th.1991) பட்டங்களையும் பெற்றார்.

1966 ஜுன் முதல் 1971 மே வரை இந்திய மாணவர் கிறிஸ்தவ இயக்கத்தின் தென் தமிழகப் பயணச் செயலராகவும், 1973 ஜுன் முதல் 1975 மே வரை மைசூர் நகரத்தில் சி.எஸ்.ஐ. போதகராகவும், 1975 ஜுன் முதல் 2009 மே வரை மதுரை அரசரடி தமிழ்நாடு இறையியல் கல்லூரியில் கிறிஸ்தவ வரலாறு துறையின் பேராசிரியராகவும் பணியாற்றியவர். 2009 அக்டோபர் முதல் சென்னை குருகுல் லூத்தரன் இறையியல் கல்லூரியில் ஆசிரியராக உள்ளார்.

மதுரை அரசரடியில் பணியாற்றிக்கொண்டிருந்தபொழுது தனது விடுப்புக் காலத்தில் 1989 ஜுலை முதல் 1990 ஜுன் வரை பெங்களூர் ஒயிட் ஃபீல்டிலுள்ள இகுமெனிகல் கிறிஸ்தவ மையத்தில் (Ecumenical Christian Centre, Whitefield, Bangalore.) இணை இயக்குநராகவும், 1997 ஆகஸ்ட் முதல் டிசம்பர் வரை யூ. எஸ். ஏ. வின் அட்லாண்டா நகரிலுள்ள எமரி பல்கலை கழகத்தின் காண்ட்லர் இறையியல் கல்லூரியில் ஆசிரியராகவும், 1998 ஜனவரி முதல் 1999 ஏப்ரல் வரை செராம்பூர் பல்கலைக்கழகத்தின் துணைப் பதிவாளராகவும் பணியாற்றியுள்ளார். மேலும், அஸ்ஸாம் ஜோர்ஹாட் ஈஸ்டன் இறையியல் கல்லூரி (Eastern Theological College, Jorhat, Assam), யாழ்ப்பாணம் மருதனார் மடம் கிறிஸ்தவ இறையியல் கல்லூரி, விசாகப்பட்டிணம் சர்ச் ஆன் தி ராக் இறையியல் கல்லூரி (Church on the Rock Theological Seminary, Visakhapatnam), ஸ்ரீ பெரும்புதூர் கால்வின் இறையியல் நிறுவனம், சென்னை பல்கலைக் கழகத்தின் கிறிஸ்தவ படிப்பு துறை ஆகியவற்றில் பகுதி நேர ஆசிரியராகவும் (Visiting Professor) இருந்துள்ளார். இந்தியத் திருச்சபை வரலாறு சங்கத்தின் (Church History Association of India) அங்கத்தினராக 1973 முதல் இருந்து வருகிறார். அதன் பொதுச்செயலராகவும், உபதலைவராகவும், தலைவராகவும் பதவிவகித்துள்ளார்.

ஆங்கிலத்திலும் தமிழிலும் பல கட்டுரைகள் எழுதியுள்ளார். அவை தர்ம தீபிகா, சி.எஸ்.ஐ. மாத இதழ், இறையியல் மலர், குருகுல் இறையியல் ஏடு, அரசரடி இறையியல் சிந்தனை (Arasaradi Journal of Theological Reflection), இந்தியன் சர்ச் ஹிஸ்டரி ரிவ்யூ (Indian Church History Review) போன்றவற்றில் வெளி வந்துள்ளன.

கிறிஸ்தவர்களும், தேசிய இயக்கமும் (Christians and the National Movement) என்பது அவருடைய மற்றொரு நூல்.

email: arthurjeyakumar@hotmail.com

Design & Prnit: Meipporul, ©: 26741526